எப்பொழுதும், எங்கும்



கைகளில் அழுக்கிலிருக்கும் கிருமிகள் பற்றிக்கொள்ளலாம்



அவைகளை உங்கள் உடலிலும் பரவச்செய்யலாம்

இந்த ஆபத்தை தவிர்க்க—

கைகளையும் உடலையும் தவறாமல்

# லைப்பாய் சோப்பினால்

கழுவுங்கள்.

அது அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து
உங்களை காப்பாற்றுகிறது.




221-50 TM

# கல்கி பொருளடக்கம்

மலர் 12 இதழ் 15 | 1952 நவம்பர் 9 | நந்தன ௵ ஐப்பசி 24


நெஞ்சில்
ஆழப்பதியும்
அரிய
வசனங்கள்
நிறைந்த
படம்...
மாடர்ன் தியேட்டர்ஸ்
வளையாபதி
டைரக்ஷன்:
T.R.சுந்தரம் & மஸ்தான்
வசனம்: பாரதிதாஸன்
சென்னை:
பிரபாத்: கெயிட்டி
கபாலி மற்றும்
தமிழ் நாடெங்கும்......

கல்கி

மலர் 12 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 15

# சர்க்காருக்காக நீதியா, நீதிக்காக சர்க்காரா?

இலங்கைப் பிரதமர் டட்லி சேன நாயகா இளைஞர். இருந்தாலும் அவர், ராஜ தந்திரத்தில் காலஞ்சென்ற பழம் புலியான தமது தந்தை ஸ்டீபன் சேன நாயகாவையும் மிஞ்சக்கூடியவர் என்பதை நிரூபித்து வருகிறார்.

"இலங்கையில் உள்ள இந்தியர்களை அன்னியர்களாகவே கருதுகிறேன். ஆகையால் அவர்களுக்குப் பிரஜா உரிமை வழங்க முடியாது" என்று ஸ்டீபன் சேன நாயகா அப்பட்டமாகக் கூறி வந்தார்.

ஆனால் அவர் பின்னே பிரதமர் டட்லி சேன நாயகாவோ இலங்கை இந்தியர்களுக்கு நியாயம் வழங்குவதே தமது நோக்கம் என்று பறைசாற்றி வருகிறார்.

இந்தியர்கள் சார்பில் அவரைப் பேட்டி காணும் தூது கோஷ்டியினர் கூறுவதையெல்லாம் பொறுமையுடனும் அக்கறையுடனும் காதில் வாங்கிக் கொள்கிறார். எனினும் கடைசியில் இந்தியர்களுக்கு நியாயம் வழங்க மறுக்கும் விஷயத்தில் தந்தையைக் காட்டிலும் ஒரு படி தீவிரமாகவே இருக்கிறார்.

சென்ற வாரம் அவரைக் கண்டு பேசிய இலங்கை இந்தியத் தலைவர்களும், இந்தியா ஹைகமிஷனரும் கூறியதையெல்லாம் டட்லி சேனநாயகா பொறுமையுடன் செவி கொடுத்துக் கேட்டார்.

அதன் பயனாக இந்தியர்களுக்கு ஏதாவது நன்மை ஏற்படலாம் என்ற நம்பிக்கை உண்டாயிற்று.

எனினும் கடைசியில் வேதாளம் மீண்டும் முருங்கை மரத்தில் ஏறிக் கொண்ட கதையாகவே முடிந்திருக்கிறது.

*   *   *   *

இலங்கைப் பிரஜா உரிமைக்கு மனுக் கொடுப்பவர்கள் இலங்கையில் 1939-ம் வருஷத்திலிருந்து 1946 வரையில் வசித்திருக்க வேண்டும். மனுதார்களின் மனைவிமாரும் மைனர் குழந்தைகளும் மனுதாரோடு இலங்கையில் சாதாரணமாக வசித்திருக்க வேண்டும்.—இதுதான் பிரஜா உரிமைச் சட்டத்தின் வாசகம்.

'சாதாரணமாக வசித்திருக்க வேண்டும்' என்றால் மேலே குறிப்பிட்ட யோக்கியதாம்ச காலம் (1939—1946 வரையில்) பூராவும் மனுதாருடன் மனைவி மக்கள் வசித்திருக்க வேண்டும் என்று இலங்கை சர்க்கார் விபரீதமாக வியாக்கியானம் செய்தார்கள்.

இவ்விஷயமாக இலங்கை சுப்ரீம் கோர்ட்டில் வழக்கு நடந்தது.

"மனுதாரின் யோக்கியதாம்ச வாச காலம் பூராவும் மனைவி மக்கள் இலங்கையில் வசித்திருக்க வேண்டிய அவசியமில்லை. மனுப்போடும் சமயத்தில் இலங்கையில் வசித்திருந்தால் போதும்" என்று கோர்ட்டார் முடிவு செய்தனர்.

சுப்ரீம் கோர்ட்டார் அளித்த மேற்படி தீர்ப்பை இலங்கை சர்க்கார் கண்ணியமாக ஏற்றுக் கொண்டிருக்கலாம்.

ஆனால், அவர்கள் அந்தத் தீர்ப்பை ஆட்சேபித்துப் பிரிவி கவுன்சிலுக்கு அப்பீல் செய்து கொண்டார்கள்.

எனினும் இலங்கை சுப்ரீம் கோர்ட் தீர்ப்பையே ஊர்ஜிதம் செய்து பிரிவி கவுன்சில் சில தினங்களுக்கு முன் தீர்ப்பு அளித்து விட்டது.

பிரிவி கவுன்சிலின் தீர்ப்புக்குப் பிறகாவது இலங்கை சர்க்கார் தங்களுடைய விசித்திரமான வியாக்கியானத்தைக் கைவிட்டு நேர்மையுடன் நடக்க முன் வந்திருக்கலாம்.

அதற்கு மாறாக அவர்கள் இரண்டு உயர்தர நீதி மன்றங்களின் தீர்ப்பும் பலனற்றுப் போகும்படி செய்யும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள். மனுதாரின் யோக்கியதாம்ச வாச காலம் பூராவும் மனைவி மக்கள் அவரோடு கட்டாயம் வசித்திருக்க வேண்டும் என்று பிரஜா உரிமைச் சட்டத்தையே தங்கள் இஷ்டப்படி திருத்துவதற்கு இலங்கை சர்க்கார் முற்பட்டிருக்கிறார்கள்.

சமீபகாலமாக இலங்கை சர்க்கார் இந்தியர்கள் விஷயத்தில் சில அற்ப உரிமைகள் அளித்தனர். சர்க்காரின் மனமாற்றத்துக்கு அது அறிகுறியாக இருக்கக்கூடும் என்று சிலர் நம்பினர்.

தங்களுடைய நல்லெண்ணத்தைக் காட்டுவதற்காக. இலங்கை இந்திய காங்கிரஸ் தீவிரமாக நடத்தி வந்த சத்தியாக்கிரக இயக்கத்தைக்கூடத் தற்காலிகமாக நிறுத்தி வைத்தது.

ஆனால் இப்போது இலங்கை சர்க்கார், மதிப்புக்குரிய உயர்தர நீதி மன்றங்களின் தீர்ப்பை அலட்சியம் செய்யத் துணிந்துள்ளனர். ஏழரை லட்சம் இந்தியர்களின் உரிமையைப் பாதிக்கும் முறையில் சட்டத்தைத் திருத்த முற்பட்டிருக்கிறார்கள்.

இலங்கை சர்க்காரின் மேற்படி செய்கை இலங்கையிலும் இந்தியாவிலும் அதிர்ச்சியை உண்டாக்கி யிருக்கின்றது.

அவ்வாறு சட்டம் திருத்தப்படும் பட்சத்தில், பெரும்பாலான இந்தியர்களின் பிரஜா உரிமை மனுக்களையும் சர்க்கார் எளிதில் நிராகரித்து விடலாம்.

அத்தகைய விபரீதம் எதுவும் ஏற்படாமல் தடுப்பதற்காக, செனேட்டர் பெரி சுந்தரம், ஸ்ரீ எஸ். தொண்டைமான், ஸ்ரீ கே. ராஜலிங்கம், ஜனாப் ஏ. அஸீஸ் முதலிய இந்தியத் தலைவர்கள் இலங்கைப் பிரதமர் டட்லி சேனநாயகாவைச் சந்தித்துப் பேசினார்கள். இலங்கை சர்க்கார் கொண்டுவர உத்தேசித்துள்ள திருத்தம், குறிப்பாகத் தோட்டத் தொழிலாளர்களை மிகவும் பாதிக்கும் என்று எடுத்துக் கூறினார்கள்.

அவர்களுடைய வேண்டுகோளின் பலனாக ஏதாவது நன்மை ஏற்படலாம் என்று தோன்றியது.

ஆனால் அவர்களுடன் அளவளாவிப் பேசிய பிரதமர் கடைசியில் கையை விரித்து விட்டார்.

பிரதமரிடமிருந்து இலங்கை இந்தியர் காங்கிரஸுக்குக் கிடைத்துள்ள கடிதத்தில், இலங்கை சர்க்கார் தங்கள் இஷ்டப்படி சட்டத்தைத் திருத்தியே தீருவார்கள் என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது.

அதாவது நீதியைக் காட்டிலும் தாங்களே பெரியவர்கள் என்று சர்க்கார் கூறுகிறார்கள்! சர்க்காருக்காக நீதி இருக்கிறதேயன்றி நீதிக்காக சர்க்கார் இல்லை என்று சாதிக்கிறார்கள்!

இலங்கை சர்க்கார் விருப்பப்படி சட்டத்தைத் திருத்தும் பட்சத்தில், ஏற்கெனவே இந்தியர்களின் ஜீவாதார உரிமைகளுக்கு உலை வைப்பதாக இருக்கும் சட்டத்தின் ரூபம் இன்னும் அதிக பயங்கரமாகி விடும்.

ஏழு வருஷ காலம் தங்களுடன் தங்கள் மனைவி மக்கள் தொடர்ந்து வசித்ததை அத்தாட்சிகளுடன் நிரூபிப்பது தோட்டத் தொழிலாளர்களால் முடியாமற் போய் விடும். எனவே அவர்களில் பெரும்பாலோரும் பிரஜா உரிமையை இழக்கும்படி நேரும்.

நீதி யார் பக்கத்தில் இருக்கிறது! இலங்கை இந்தியர்கள் பக்கத்தில் இருக்கிறதா அல்லது இலங்கை சர்க்கார் பக்கத்தில் இருக்கிறதா! இதை இலங்கை சர்க்காரின் இன்றையப் போக்கு எவ்வித சந்தேகமுமின்றி உலகத்துக்குப் பிரகடனப் படுத்துவதாக இருக்கிறது.

## இப்படியும் நடக்கலாம்!



''குடகு தேசத்தில் ஒரு பெண்மணி ஒரு வருஷ காலமாக உணவும் தண்ணீரும் அருந்தாமல் உயிரோடிருந்து வருகிறாளாம்.''

—செய்தி

இச் செய்தியின் முக்கியத்தை உணவு மந்திரி ஜனாப் கித்வாய் உணர்ந்து அதற்குத் தகுந்த நடவடிக்கை எடுப்பார் என்று எதிர்பார்க்கலாம் அல்லவா?

# கைத்தறிக்கு விரோதி யார்?

இந்தச் சென்னை இராஜ்யத்தில் கைத்தறித் தொழிலுக்கு விரோதி யாரும் இல்லை. இது சென்னைச் சட்ட சபையில் தொழில் மந்திரி டாக்டர் யூ. கிருஷ்ணராவ் கொண்டு வந்த தீர்மானத்தின்பேரில் நடந்த விவாதத்தின்போது வெளியாயிற்று. வர்ணச் சேலைகளையும் கரை போட்ட வேஷ்டிகளையும் கைத்தறிகளுக்கே ஒதுக்கவேண்டுமென்றும், நியாயமான விலைக்குக் கைத்தறிக்கு வேண்டிய அளவு நூல் கிடைக்கும்படி செய்ய வேண்டும் என்றும் அத்தீர்மானம் வற்புறுத்தியது. மேற்படி தீர்மானத்தைக் காங்கிரஸ் அங்கத்தினர் ஆமோதித்தார்கள்; கம்யூனிஸ்டுகள் அழுத்தமாக ஆமோதித்தார்கள்; கிருஷிக் லோக் கட்சியார் ஆதரித்தார்கள்; பிரஜா சோஷலிஸ்டுகள், வெறும் பிரஜாக்கள், வெறும் சோஷலிஸ்டுகள், உழைப்பாளர்கள், முஸ்லிம் லீகர்கள், சுயேச்சைவாதிகள் ஆகிய அனைவரும் ஆதரித்துப் பேசினார்கள். கைத்தறிக்கு இன்னும் அதிகமான உதவி செய்ய வேண்டும் என்று சிலர் சொன்னார்களே தவிர, தீர்மானத்தை யாரும் எதிர்க்கவில்லை.

சட்ட சபைக்கு வெளியே இந்த இராஜ்ய மெங்கும் ஆயிரக் கணக்கான ஸ்தாபனங்கள் மேற்படி யோசனையை ஆதரித்துத் தீர்மானம் நிறைவேற்றியிருக்கின்றன. யாருமே எதிர்க்கவில்லை.

ஆகவே இந்தச் சிறந்த யோசனையை அமுலில் நடத்துவதற்குத் தடையாக இருப்பவர் யார்! பம்பாய் - ஆமதாபாத் ஆலை முதலாளிகள் எதிர்க்கிறார்கள். ஆனால் அவர்களுடைய எதிர்ப்பினால் காரியம் நின்று விடாது. மத்திய சர்க்காரின் தொழில் மந்திரி ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரி மனது வைத்தால் காரியம் நடந்தாற்போல்தான்.

கைத்தறித் தொழிலுக்கு இத்தகைய பாதுகாப்பு அளிப்பதன் அவசியம்பற்றி வாதம் ஒன்றுமே தேவையில்லை. விஷயம் அவ்வளவு தெளிவானது. ஆகையினாலேயே இவ்வளவு ஒருமுகமான ஆதரவை அகில இந்தியாவிலும் மேற்படி யோசனை பெற்றிருக்கிறது.

ஆனால் டி. டி. கே மட்டும் ஏன் எதிர்க்கிறார்! அவர் ஒருவர் மட்டும் கைத்தறிக்கு விரோதியா!

அதுவும் இல்லை.

பின் எதற்காக எதிர்க்கிறார்! 'ராஜாஜி முதலில் சொல்லி விட்ட யோசனையாயிற்றே என்பதற்காகவே' எதிர்க்கிறார் என்று கருதவேண்டியிருக்கிறது. அந்த யோசனையை ஒப்புக் கொண்டால் தம் கௌரவத்துக்குக் குறைவு என்று எண்ணுகிறார் போலும்! "ராஜாஜியா! நானா! பார்த்து விடுகிறேன்!" என்று கர்வம் கட்டுகிறதாகக் காண்கிறது.

ஸ்ரீ டி. டி. கே. அவர்களை நாம் ரொம்பவும் கேட்டுக் கொள்கிறோம். ராஜாஜி மேற்படி யோசனையை வெளியிட்டது பெருங் குற்றந்தான்! அந்தக் குற்றத்தை ஸ்ரீ டி. டி. கே. பெரிய மனது செய்து மன்னித்து விடுவாராக! ராஜாஜியின் குற்றத்துக்காக முப்பது லட்சம் கைத்தறித் தொழிலாளிகளைத் தண்டிக்க வேண்டாம்!

"ஏதோ போகட்டும்; எழுபத்துமூன்று வயதுக் கிழவர் அவசரப்பட்டுச் சொல்லி விட்டார்!" என்று பெருந் தன்மையுடன் தீர்மானித்துக் கொண்டு, சென்னைச் சட்ட சபையின் தீர்மானத்தைக் காரியத்தில் நிறைவேற்றும்படி ஸ்ரீ டி. டி. கே. அவர்களை வேண்டிக் கொள்கிறோம். நிறைவேற்றி, இந்த இராஜ்ய மக்கள் அனைவருடைய நன்றி விசுவாசத்துக்கும் பாத்திரமாகக் கோருகிறோம். அவருக்குப் பார்லிமெண்ட் தேர்தலில் வோட்டளித்து அனுப்பிய சென்னை நகர வோட்டர்களையும் திருப்திப்படுத்தக் கோருகிறோம்.

இல்லாவிட்டால், சென்னை நகர வோட்டர்கள் அவரைப் பார்த்து "நீங்கள் எங்கள் பிரதிநிதியாயிருக்கத் தகுந்தவர் அல்ல; ராஜிநாமா செய்யுங்கள்" என்று வற்புறுத்த வேண்டியிருக்கும். ஆனால் அவ்வளவு தூரத்துக்கு ஏன் போக வேண்டும்! ஸ்ரீ டி. டி. கே. கைத்தறித் தொழிலுக்கு வேண்டிய பாதுகாப்பை அளித்துத் தமக்கும் தம்மை அனுப்பிய தொகுதிக்கும் பெருமை அளிப்பார் என்று ஏன் நாம் நம்பக் கூடாது!

# அநாதரக்ஷகன் அல்லவோ?

இறைவனை எல்லா மதத்தினரும் 'அநாத ரக்ஷகன்' என்று போற்றுகிறார்கள். அநாதைக் குழந்தைகளிடம் கருணைக் கடலான கடவுளுக்குத் தனிப்பெருங் கருணை இருக்குமென்பதில் ஐயமில்லை. ஆதலின், வருமானம் நிரம்ப உள்ள ஆலயங்கள் தம் வருமானத்தில் ஒரு சிறு பகுதியைச் செலவிட்டு அநாதைக் குழந்தைகளின் விடுதி நடத்தினால் அது ஆண்டவனுக்கு மிகவும் உகப்பான காரியமாகவே இருக்கும்.

சென்னை இராஜ்யத்தில் இத்தகைய அருமையான கைங்கரியத்துக்கு ஒரு சிறு முயற்சி தொடங்கியிருப்பதை அறிந்து மகிழ்கிறோம்.

ஹிந்துமத பரிபாலன ஆலோசனை சபை என்பதாக ஒரு சபை ஏற்பட்டிருக்கிறது. ஸ்ரீ வி. பாஷ்யம் அய்யங்கார், ஸ்ரீ கே. எஸ். ராமசுவாமி சாஸ்திரியார், ஸ்ரீ மணவாள ராமானுஜம், டாக்டர் திரிமூர்த்தி முதலிய ஆஸ்திகர்களும் சாஸ்திர சம்பன்னர்களும் மேற்படி சபையில் அங்கத்தினராயிருக்கிறார்கள். இவர்களுடைய யோசனையின் பேரில் நமது ஹிந்துமத ஸ்தாபன பரிபாலன மந்திரி ஸ்ரீ கே. வேங்கடசாமி நாயுடு அவர்களும் ஹிந்து மத ஸ்தாபன போர்டின் தலைவர் ஸ்ரீ சின்னையாப் பிள்ளை அவர்களும் மேற்படி கைங்கரியத்தை ஆரம்பித்திருக்கிறார்கள். முதன் முதலில் மயிலை ஸ்ரீ கபாலீஸ்வரர் 'அநாத ரக்ஷகர்' என்ற பட்டப் பெயருக்கு உரியவராகப் போகிறார் என்று தெரிகிறது. ஸ்ரீ கபாலீசுவரர் கோயிலுக்குச் சொந்தமான இடத்தில் மேற்படி ஆலய வருமானத்தில் ஒரு சிறு பகுதியைக் கொண்டு இருபத்தைந்து அநாதைக் குழந்தைகளுக்கு ஒரு விடுதி தொடங்கப்படும். ஐந்து வயது முதல் எட்டு வயது வரையில் உள்ள அநாதைக் குழந்தைகள் — தாய் தகப்பன் இருவரும் அற்ற குழந்தைகள் மட்டுமே — இந்த அநாதை விடுதியில் சேர்க்கப்படுவார்கள். அவர்களுடைய பதினாறும் பிராயம் வரையில் ஸ்ரீ கபாலீசுவரரே அவர்களுக்கு அம்மையும் அப்பனுமாக இருப்பார். பிறகு அவர்கள் உலகில் தொழில் செய்து பிழைக்க அனுப்பப் படுவார்கள்.

இந்த ஆரம்ப முயற்சி பொதுஜன ஆதரவைப் பெற்று வெற்றிகரமாக நடந்தால் மற்றப் பெரிய ஆலயங்களை யொட்டியும் இத்தகைய அநாதைக் குழந்தை விடுதிகள் ஏற்படுத்தலாம் அல்லவா!

தென்னாட்டில் சுமார் எண்ணூறு கோவில்கள் இலமாகி, செப்பனிடப் பண வசதி இல்லாமல் இருக்கின்றனவாம். சுமார் இரு நூறு ஆலயங்களில் பூசை நடப்பதில்லையாம்.

மேற்படி ஆலயங்களை ஜீரணோத்தாரணம் செய்யவும் பூஜை தொடங்கி நடத்தவும் வழி முறைகள் ஆலோசிக்கப்பட்டு வருவதாக அறிகிறோம்.

எல்லாவற்றிலும் பெரிய அதிசயம் வடார்க்காடு ஜில்லாவின் தலை நகரான வேலூரில் இருந்து வருகிறது. அந்த ஊர்க் கோவில் அற்புத சிற்பவேலைகளுடன் புத்தப் புதிதாக விளங்கி வருகிறது. ஆனால் கோயிலுக்குள் விக்கிரஹங்களும் இல்லை; பூஜையும் கிடையாது. வேலூர்க் கோயிலில் விக்கிரஹப் பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் நடத்திப் பூஜை சரிவர நடப்பதற்கும் ஏற்பாடு செய்தால், சர்தார் வல்லபாய் படேல் அவர்கள் சோமநாத புரத்துப் புராதன ஆலயத்துக்குச் செய்த மகத்தான கைங்கரியத்தைத் தமிழ் நாட்டிலும் சிறிய அளவில் செய்ததாக இருக்கும்.

ஸ்ரீ கே. வேங்கடசாமி நாயுடு ஹிந்துமத ஸ்தாபன மந்திரியாக இருக்கும் போது மேற்படி கைங்கரியம் நடந்தால், அது அவருக்கும் ராஜாஜி மந்திரி சபைக்குமே பெருமை தருவதாகும்.

# அறிவு எங்கே போகிறது?

சென்னை நகரை 'அறிவின் தலை நகரம்' என்று ஜவாஹர்லால்ஜி சொன்னார். தென்னாட்டு மக்கள் அறிவிற் சிறந்தவர்கள் என்று நாமும் அடிக்கடி பெருமையுடன் சொல்லிக் கொண்டு தானிருக்கிறோம். அறிவாளிகள் பலர் தென்னாட்டில் உண்டு என்பதில் சந்தேகமும் இல்லை.

ஆனால் சில சமயம் "தென்னாட்டின் அறிவு எங்கே போகிறது! தென்னை மரத்தில் புல்மேயப் போய் விடுகிறதா!" என்று சந்தேகம் ஏற்படும் படியான காரியங்கள் நிகழ்கின்றன.

குறுக்கெழுத்துப் போட்டி, கோண எழுத்துப் போட்டி, பகுத்தறிவுப் போட்டி, பக்கா அறிவுப் போட்டி, ஏ பி சி டி போட்டி, என் என் ஓ பி போட்டி என்றெல்லாம் எங்கே பார்த்தாலும் மோசடிகள் நடந்து வருகின்றன. அவற்றைக் குறித்துப் போலீஸ் நடவடிக்கைச் செய்திகளும் வெளியாகின்றன. ஆயினும் மக்கள் அப்போட்டிகளுக்கு மேலும் மேலும் பணத்தை அனுப்பி நெற்றியில் பெரிய பட்டை நாமத்தைச் சூட்டிக் கொள்ளத் தயாராயிருக்கிறார்கள்! பிறர் ஏமாறுவதைப் பார்த்தும் போட்டிப் பந்தயங்களுக்குப் பணம் அனுப்புவதை நிறுத்துவதில்லை; தாங்களே ஏமாந்த பிறகும் நிறுத்துவதில்லை.

இதைப் பார்க்கும் போது "தென்னாட்டின் அறிவு அவ்வப்போது விடுமுறை பெற்றுக்கொள்கிறதோ!" என்று கேட்கத் தோன்றுகிறது.

நல்ல வைரங்களையும் இமிடேஷன் வைரங்களையும் கலந்து வைத்துக் கொண்டு ஏலம் போடுகிறார்கள். பம்பாய் - கல்கத்தா ஹைகோர்ட்டுகளின் தாக்கீதுகளுடன் இந்த ஏலங்கள் நடப்பதாக விளம்பரம் செய்கிறார்கள். "கல்கத்தாவிலும் பம்பாயிலும் ஏமாந்தவர்கள் இல்லையா? சென்னையைத் தேடி ஏன் ஏலம்போட வருகிறார்கள்!" என்றுகூட இங்கே யுள்ளவர்கள் எண்ணிப் பார்ப்பதில்லை. முதல் நாள் 212 சாமான்கள் என்று ஜாபிதா காட்டி ஏலம் நடத்துகிறார்கள். அன்றைக்குச் சில சாமான்கள் விற்பனையாகின்றன. ஆனால் மறு நாளும் 212 சாமான்கள் ஏலத்துக்கு இருக்கின்றன! "இது எப்படி முடியும்!" என்று கூடக் கவனியாமல் 'வைர' நகைகளை வாங்குகிறார்கள். விற்கப் போன இடத்தில் 'இமிடேஷன்' என்று அறிந்து ஓலமிடுகிறார்கள். போலீஸ் விசாரணை நடக்கிறது; பத்திரிகையிலும் செய்திவெளியாகிறது. ஆனாலும் வைரநகை ஏலங்கள் நடந்து கொண்டு தான் இருக்கின்றன.

"இரண்டாயிரம் ரூபாய் அனுப்பி வையுங்கள். மாதம் 75 ரூபாய் லாபம் தருகிறோம்" என்று ஒரு வடநாட்டுக் கம்பெனி விளம்பரம் செய்கிறது. இது நடக்கக் கூடிய காரியமா என்று சிந்தியாமல் பணத்தை அனுப்புகிறார்கள். முதலில் சில மாதங்களுக்கு லாபப் பணம் வருகிறது. அப்புறம் விளம்பரம் செய்த கம்பெனி இருந்த இடம் தெரியவில்லை! சில நாளைக்குப் பிறகு அதே மாதிரி விளம்பரம் இன்னொரு கம்பெனியின் பெயரால் வெளியாகிறது. மேலும் பணம் அனுப்பி ஏமாறுகிறவர்கள் இச் சென்னை மாகாணத்தில் இருக்கிறார்கள்.

இதையெல்லாம் பார்க்கும் போது தான் "தென்னாட்டின் பிரசித்தி பெற்ற அறிவு சிலசமயம் தென்னை மரத்தில் புல்லுப் பிடுங்கப்போய் விடுகிறதோ!" என்று வியக்க வேண்டியிருக்கிறது.

## வீண் சண்டை!



தமிழ் நாட்டில் பிரஜா கட்சியினர், சோஷலிஸ்டு கட்சியினர், பிரஜா-சோஷலிஸ்டு கட்சியினர் ஆகிய மூன்று பிரிவினரும் ஒருவருக்கொருவர் சண்டை போடுவதில் முனைந்திருக்கின்றனர்.

# மேயர் ஸிபகதுல்லா

சென்னை நகரம் ஆண்டுக்கு ஒரு முறை பழைய மேயருக்கு விடை கொடுத்து அனுப்பி விட்டுப் புதிய மேயரை வரவேற்கிறது. பழைய மேயரைப் புகழ்ந்து பாராட்டி அனுப்புவதும் புதிய மேயருக்கு வாழ்த்துக் கூறி வரவேற்பதும் சம்பிரதாயம். சில ஆண்டுகள் சென்று விட்டால், பழைய மேயர்கள் மறந்து விடப்படுவதும் இயல்புதான். "1949-ல் சென்னை நகர மேயர் பதவி யார் வகித்தது!" என்று திடீரென்று கேட்டால், நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பேர் சரியான பதில் சொல்ல மாட்டார்கள்.



ஜனாப் ஸிபகதுல்லா

ஆனால் இந்த 1952-ம் வருஷத்தில் மேயர் பதவி வகித்திருந்த ஜனாப் ஸிபகதுல்லாவின் பெயரை நாம் அவ்வளவு சீக்கிரமாக மறக்க முடியாது. இந்த வருஷம் கோடை காலத்தில் புழலேரி அடியோடு வற்றிப் போய் விட்டபடியால் சென்னை நகரைக் கடுமையான தண்ணீர்ப் பஞ்ச விபத்து நெருங்கியிருந்தது. சென்னை நகர வாசிகள் நகரைக் காலி செய்து விட்டுப் போக வேண்டியதுதான் என்று பலரும் பேசத் தொடங்கியிருந்தார்கள். அச்சமயம் மேயர் ஸிபகதுல்லா என்ன தவம் செய்தாரோ, அல்லது என்ன நோன்பு நோற்றாரோ, தெரியாது! திடீரென்று மழை வந்து மூன்று நாளில் பதினெட்டரை அங்குலம்கொட்டிப் புழலேரியை நிரப்பி விட்டது. அந்தமாதிரியே சென்ற அக்டோபர் மாதம் முற்பகுதியிலும் புழலேரிப் பிரதேசத்தில் மட்டும் தனிப்பட விசேஷ மழை பெய்து ஏரியில் தண்ணீர் அளவு முப்பத்தெட்டரை அடிக்கு வந்திருக்கிறது. எது எப்படியானாலும் இன்னும் ஒரு வருஷத்துக்குச் சென்னை வாசிகள் குடி தண்ணீரைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை.

1952-ம் வருஷத்துத் தண்ணீர்ப் பஞ்சத்தைச் சென்னை வாசிகள் வெகு காலம் நினைவு வைத்துக் கொண்டிருப்பார்கள். அந்த நினைவு தோன்றும் போதெல்லாம் ஜனாப் ஸிபகதுல்லாவின் நினைவும் வரும். அவர் எப்படி எல்லாருக்கும் நல்லவராக இருந்து சகலருடைய பாராட்டுதலையும் பெற முடிந்தது என்று வியப்படைவார்கள். அப்பேர்ப்பட்ட உத்தம குணசாலியை மேயராகப் பெற்றிருந்த மகிமையினால்தான் சென்னை நகருக்கு மட்டும் தனிப்பட மழை பெய்து, தண்ணீர்ப் பஞ்சம் தீர்ந்தது என்றும் சொல்லுவார்கள். சொன்னால் சொல்லட்டுமே! யாருக்கு என்ன நஷ்டம்! எல்லாச் சமூகத்தாருக்கும் எல்லாக் கட்சிக்காரருக்கும் இனியவராக நடந்து பெயர் வாங்கிய ஒருவரைப்பற்றி எந்த விதத்திலாவது ஞாபகம் வைத்துக் கொண்டிருந்தால் சரிதான்.

ஜனாப் ஸிபகதுல்லாவைப் போன்ற உத்தம குணம் படைத்த முஸ்லீம்கள் இந்தச் செந்தமிழ் நாட்டில் இருப்பது இந்த நாட்டின் பண்பாட்டுக்கே சிறப்பு அளிப்பதாகும்.

## அட்டைப்பட விளக்கம்

அவள் "நீ எனக்காக ஒரு சிறு உதவி புரிய வேண்டும்!" என்றாள்.

"என்ன!" என்று கேட்டாள் தோழி.

"அவரைப் பார்த்து......" என்று சொல்லி முடிப்பதற்கு முன்பே தோழி, "ஆமாம், உங்களுக்கு வேறு வேலை என்ன!" என்று கடுப்பாகச் சொன்னாள்.

தோழியின் கோபத்தைப் பொருட்படுத்தாமல் "அடியே! தயவு செய்து எனக்காக ஒரு முறை......" என்று கெஞ்சும் குரலில் ஆரம்பித்தாள்.

"ஊ......ஹூம்! முடியவே முடியாது! முடியாது என்றால் முடியாதுதான்" என்று கண்டிப்பாகக் கூறினாள் தோழி.

"உனக்கு ஒரு முத்து மாலை தருகிறேனடி" என்று கூறிக் கொண்டே தன் கழுத்திலிருந்த முத்து மாலையைக் கழற்றித் தோழியிடம் கொடுத்தாள்.

அப்போதுதான் அந்தத் தோழிக்குத் தன் தலைவி கொண்டுள்ள காதலின் தன்மை புலனாயிற்று.

"எப்போது பார்த்தாலும் 'அவர்' 'அவர்' என்று ஜபம் செய்கிறீர்களே! அந்த அவரிடம் அப்படி என்னதான் கண்டு விட்டீர்கள்!" என்று கேட்டாள் தோழி.

தலைவி, "அப்படிக் கேள்! இந்த மாலையிலுள்ள முத்துக்கள் எவ்வளவு வெண்மையாக, எவ்வளவு அழகாக இருக்கின்றன என்று நீ நினைக்கிறாய் அல்லவா! ஆனால் ஒருமுறை அவருடைய சிரிப்பைப் பார்த்தாயானால் அப்படிச் சொல்ல மாட்டாய்!

> முத்து நகைக்கும், அவன்
> மோனவிழி வார்த்தைகட்கும்
> பித்துப் பிடித்தேனடி—இனியே
> பேசுதற்குக் கூசுதடி!"

என்றாள். ஆம், அவள் கொண்டிருந்த காதல் முருகப் பெருமான் மீதுதான். அதை எவ்வளவு அழகாக வெளியிட்டு விட்டாள்!

பாட்டு அற்புதமான பாட்டு. பாட்டுக்கு ஏற்றபடி படமும் அமைந்திருக்கிறது!

# பொன்னியின் செல்வன்

கல்கி

அத்தியாயம் 15

## இராஜோபசாரம்

கடம்பூர் சம்புவரையர் மாளிகையின் முன் வாசல் அன்று மாலை கண்டறியாத அற்புதக் காட்சிகளைக் கண்டது. கண்ணுக்கெட்டிய தூரம் ஜனங்கள் திரள் திரளாக நெருக்கியடித்துக் கொண்டு நின்றார்கள். ஆண்களும் பெண்களும் சிறுவர்களும் சிறுமிகளும் வயோதிகர்களும் அக்கூட்டத்தில் இருந்தார்கள்.

திடமாகக் காலூன்றி நிற்கவும் முடியாத கிழவர்களும் கிழவிகளும் கோலூன்றி நின்றார்கள். தாங்கள் பிறரால் அங்குமிங்கும் தள்ளப் படுவதைப் பொருட் படுத்தாமல் அவர்கள் ஆதித்த கரிகாலரின் வீரத் திருமுகத்தைப் பார்க்கும் ஆர்வத்தினால் தள்ளாடிக் கொண்டு நின்றார்கள். சிறுவர் சிறுமியர் தாங்கள் ஜனக்கூட்டத்தின் நடுவே நசுக்கப்படுவதைப் பொருட் படுத்தாமல் முண்டியடித்துக் கொண்டு முன்னால் வர முயன்று கொண்டிருந்தார்கள். யௌவனப் பெண்கள் தங்களுக்கு இயற்கையான கூச்சத்தை அடியோடு கைவிட்டு அன்னிய புருஷர்களின் கூட்டத்தினிடையே இடித்துப் பிடித்துக் கொண்டு முன்னால் வரப்பிரயத்தனம் செய்தார்கள். யௌவன புருஷர்களோ, அத்தகைய இளம் பெண்களைச் சிறிதும் இலட்சியம் செய்யாமல், அவர்களின் மீது கடைக்கண் பார்வையைக் கூடச் செலுத்தாமல், இளவரசரை நன்றாகப் பார்க்கக் கூடிய இடங்களைப் பிடிப்பதிலேயே கவனம் செலுத்தினார்கள். அவர்களில் பலர் கடம்பூர் மாளிகைக்கு எதிரிலும் பக்கங்களிலும் உள்ள மரங்களின் மீதெல்லாம் ஏறிக் கொண்டிருந்தார்கள். இன்னும் அநேகர் அந்த மாளிகையின் வெளி மதிள் சுவரின் பேரிலும் ஏற முயன்று, அரண்மனைக் காவலர்களால் கீழே இழுத்துத் தள்ளப் பட்டார்கள்.

பச்சைக் குழந்தைகளை இடுப்பில் வைத்துக் கொண்டு இளம் பெண்கள் எத்தனையோ பேர் அக்கூட்டத்தில் பல இன்னல்களை அநுபவித்துக் கொண்டு நின்றார்கள். அழுத குழந்தைகளிடம் அவற்றின் தாய்மார்கள் "கண்ணே! அழாதே! வீரத்தமிழகத்தின் மகாவீராதி வீரர்- 'வீர பாண்டியன் தலை கொண்ட' ஆதித்த கரிகால சோழர் வரப்போகிறார்! அவரைப் பார்க்கும் பேறு பெற்றால் நீயும் ஒரு நாள் அவரைப் போல் வீரனாவாய்!" என்று சொல்லிச் சமாதானப் படுத்த முயன்றார்கள். இம்மாதிரியே காதலர்கள் தங்கள் காதலிகளிடமும் தந்தைமார்கள் தங்கள் புதல்வர்களிடமும் ஆதித்த கரிகாலரைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

அந்த விதமாக ஆதித்த கரிகாலரின் வீரப்புகழ் நாடெங்கும் அக்காலத்தில் பரவியிருந்தது. பன்னிரண்டாவது பிராயத்தில் போர்க்களம் புகுந்து கையில்

கத்தி எடுத்துப் பகைவர் பலரை வெட்டி வீழ்த்தியவரும், சேவூர்ப் போர்க்களத்தில் பாண்டியசைன்யத்தை முறியடித்து, வீர பாண்டியன் பாலைவனத்துக்கு ஓடிப் பாறைக் குகையில் ஒளிந்து கொள்ளும்படி செய்தவரும், பத்தொன்பதாவது பிராயத்தில் வீர பாண்டியனுடைய ஆபத்துதவிப் படையைச் சின்னாபின்னம் செய்து அவன் ஒளிந்திருந்த இடத்தைக் கண்டு பிடித்து அவன் தலையை வெட்டிக் கொண்டு வந்தவருமான இளவரசரைப் பார்ப்பதற்கு யார்தான் ஆர்வம் கொள்ளாமலிருக்க முடியும்?

இத்தகைய வீர புருஷரைப் பற்றிச் சென்ற மூன்று நாலு வருஷ காலமாகப் பற்பல வதந்திகள் உலாவி வந்தன. ஆதித்த கரிகாலருக்கு யுவராஜ பட்டாபிஷேகம் ஆன பிறகு சுந்தர சோழ சக்கரவர்த்திக்கும் அவருக்கும் மனத்தாங்கல் வந்து விட்டது என்றும், ஆதித்த கரிகாலர் தமக்குப் பின் பட்டத்துக்கு வருவதைச் சக்கரவர்த்தி விரும்பவில்லை யென்றும் சிலர் சொன்னார்கள். முன்னொரு காலத்தில் சோழ நாட்டு இளவரசன் ஒருவன் காஞ்சியில் தனி ராஜ்யம் ஸ்தாபித்துப் பல்லவர் பெருங்குலத்தைத் தொடங்கி வைத்தது போல் ஆதித்த கரிகாலரும் காஞ்சியில் தனி அரசை ஏற்படுத்த விரும்புகிறார் என்றார்கள் சிலர். அவருடைய தம்பியாகிய அருள்மொழிவர்மனிடம் சக்கரவர்த்தி அதிக அன்பு காட்டிப் பட்சபாதகமாக நடந்து கொள்வதால் ஆதித்த கரிகாலருக்குக் கோபம் என்றார்கள் வேறு சிலர். இன்னும் சிலர் இதை அடியோடு மறுத்து கரிகாலனையும் அருள்மொழியையும் போல் நேய பாவமுள்ள சகோதரர்கள் இருக்க முடியாது என்று சாதித்தார்கள். இளவரசருக்கு இன்னும் திருமணம் ஆகாமலிருந்தது பற்றியும் பலர் பலவாறு பேசினார்கள். அரச குலத்து மங்கை யாரையும் கரிகாலர் மணப்பதற்கு மறுதளித்து ஆலய பட்டர் மகளை மணந்து அரியாசனம் ஏற்றுவிக்க எண்ணியது தான் தந்தைக்கும் மகனுக்கும் வேற்றுமை நேர்ந்த காரணம் என்றும் சிலர் சொன்னார்கள். ஆதித்த கரிகாலருக்குச் சித்தப்பிரமை என்றும், பாண்டியநாட்டு மந்திரவாதிகள் சூனிய வித்தையினால் அவரை அரைப் பைத்தியமாக்கிவிட்டார்கள் என்றும், அதனாலேயே சக்கரவர்த்திக்குப் பிறகு அவர் சோழசிங்காதனம் ஏறுவதைச் சிற்றரசர்கள் விரும்பவில்லை யென்றும் சிலர் பேசிக் கொண்டார்கள்.

எது எப்படியிருந்தாலும், அந்த மகா வீரரைப் பார்ப்பதற்கு ஜனங்கள் அளவில்லாத ஆர்வங் கொண்டிருந்தார்கள். கடம்பூர் மாளிகைக்கு இளவரசர் கரிகாலர் விஜயம் செய்யப் போகிறார் என்ற செய்தி பரவியதிலிருந்தே சுற்றுப் பக்கங்களில் பெருங்கிளர்ச்சி உண்டாகி யிருந்தது. அன்று மாலை வரப் போகிறார் என்று தெரிந்த பிறகு அக்கம் பக்கத்தில் இரண்டு காத தூரம் வரையில் இருந்த எல்லா ஊர்களிலிருந்தும் மக்கள் வந்து திரண்டு விட்டார்கள்.

அந்தக் கூட்டத்தை ஜன சமுத்திரம் என்று சொல்வது மிகப் பொருத்தமாயிருந்தது. ஆயிரமாயிரம் ஜனங்களின் கண்டங்களிலிருந்து எழுந்த பேச்சுக் குரல்கள் உருத்தெரியாத ஒரே இரைச்சலாகிச் சமுத்திர கோஷத்தைப் போலவே கேட்டுக் கொண்டிருந்தது. மாளிகையின் முன் வாசலுக்கு எதிரே இளவரசரும் அவருடைய பரிவாரங்களும் வருவதற்கு அரண்மனைக் காவலர்கள் வழி வகுத்து நின்றார்கள். பின்னாலிருந்த ஜனங்கள் வந்து மோதியபடியால் முன்னாலிருந்தவர்கள் நகர்ந்து வந்து அவ் வழியை அடைக்கப் பார்த்ததும், காவலர்களால் தள்ளப்பட்டு அவர்கள் மீண்டும் பின்னால் சென்றதுமான காட்சி, சமுத்திரக் கரையில் அலைகள் வந்து மோதி விட்டுப் பின் வாங்குவதை யொத்திருந்தது.

மரத்தின் மேல் இருந்த ஒருவன் திடீரென்று "அதோ வருகிறார்கள்!" என்று கூவினான். "எங்கே? எங்கே?" என்று ஆயிரம் குரல்கள் எழுந்தன. ஒரு குதிரை அதிவேகமாக வந்தது. கூட்டத்தைச் சிறிதும் பொருட்படுத்தாமல் புகுந்து பாய்ந்து வந்தது. குதிரையின் காலடியில் சிக்கிக்கொள்ளாமலிருக்கும்படி ஜனங்கள் இருபுறமும் நெருக்கியடித்துக்கொண்டு நகர்ந்து கொண்டு வழிவிட்டார்கள். "இளஞ் சம்புவரையன்!" என்று கத்தினார்கள். ஆம்; வந்தவன் கந்தமாறன்தான்! கூட்டத்திலிருந்தவர்கள் கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்லாமல் கந்தமாறன் வேகமாகக் குதிரையைச் செலுத்திக்கொண்டு போய்க் கோட்டை வாசல் அருகில் நிறுத்திவிட்டுக் கீழே குதித்தான். அங்கே நின்றுகொண்டிருந்த சம்புவரையரையும் பழுவேட்டரையரையும் பார்த்து வணங்கிவிட்டு, "இளவரசர் வருகிறார். ஆனால் சித்தம் அவ்வளவு சுவாதீனத்தில் இல்லை. திடீர், திடீர் என்று கோபம் வருகிறது. முன்னெச்சரிக்கை செய்வதற்காகவே வந்தேன்.

நல்லபடியாக இராஜோபசாரம் செய்து வரவேற்க வேண்டும். அவர் ஏதாவது தாறுமாறாகப் பேசினாலும் பதில் சொல்லாமலிருப்பது நல்லது!" என்றான். இவ்விதம் கூறிவிட்டு அங்கே நிற்காமல் மேலே அண்ணாந்து பார்த்தான். முன் வாசல் கோபுரத்தின் மேன் மாடியில் அரண்மனைப் பெண்கள் காத்திருப்பது தெரிந்தது. உடனே கோட்டை வாசலில் புகுந்து உள்ளே சென்று, அங்கே ஒரு பக்கம் இருந்த மச்சுப் படிகளின் வழியாக மேலே ஏறிச் சென்றான்.

பெண்கள் இருக்குமிடத்தை அடைந்ததும் கந்தமாறனுடைய கண்கள் மற்றவர்களைப் பொருட்படுத்தாமல் நந்தினி தேவி இருக்குமிடத்தைத் தேடிக் கண்டு பிடித்தன. அவள் அருகில் சென்று, "தேவி! தங்கள் விருப்பத்தை நிறைவேற்றினேன். இளவரசரை அழைத்து வந்தேன். அதோ வந்துகொண்டிருக்கிறார். ஆனால் மதம் பிடித்த யானையைப்போல் இருக்கிறார். அவரை எப்படிச் சமாளிக்கப் போகிறோமோ, தெரியவில்லை!" என்றான்.

"ஐயா! அதைப்பற்றி என்ன கவலை? மதம் பிடித்த யானையை அடக்கி ஆள்வதற்குத் தங்கள் சகோதரியின் இரு கண்களாகிற அங்குசங்கள் இருக்கின்றன!" என்றாள் நந்தினி.

மணிமேகலை "அக்கா! இது என்ன பேச்சு?" என்றாள்.

கந்தமாறன் "மணிமேகலை! பழுவூர் ராணி கூறுவதில் தவறு ஒன்றுமில்லையே! ஆதித்த கரிகாலரைப் போன்ற வீராதி வீரரைப் பதியாகப் பெறத் தவஞ்செய்ய வேண்டாமா?" என்றான்.

மணிமேகலை பதில் சொல்வதற்குள் நந்தினி குறுக்கிட்டு, "ஐயா! இளவரசருடன் இன்னும் யாரேனும் வருகிறார்களா?" என்று கேட்டாள்.

"ஆம்; ஆம்! பார்த்திபேந்திர பல்லவனும் வந்தியத்தேவனும் வருகிறார்கள்..."

நந்தினி மணிமேகலையைக் குறிப்பாகப் பார்த்துவிட்டு, "எந்த வந்தியத்தேவன்? தங்களுடைய சிநேகிதன் என்று சொன்னீர்களே, அவனா?" என்றாள்.

"ஆம்; என்னைப் பின்னாலிருந்து குத்திக் கொல்லப் பார்த்த அந்தப் பரம சிநேகிதன்தான். அவன் எங்கிருந்தோ எப்படியோ வந்து குதித்து வெள்ளாற்றங்கரையில் எங்களோடு சேர்ந்து கொண்டான். இளவரசருடைய தாட்சண்யத்துக்காகப் பார்த்தேன்; இல்லாவிடில் அங்கேயே அவனை என் கத்திக்கு இரையாக்கியிருப்பேன்!" என்றான்.

மணிமேகலையின் முகம் சுருங்கிப் புருவங்கள் நெரிந்தன. "அண்ணா! அவர் உங்கள் முதுகில் குத்தியது உண்மையாக இருக்கும் பட்சத்தில் அவரை எதற்காக இந்த மாளிகைக்குள் வரவிட வேண்டும்?" என்றாள்.

"கண்ணே! நீ பேசாமலிரு! அதெல்லாம் புருஷர்களின் விஷயம். நேற்றைக்குச் சண்டை போட்டுக் கொள்வார்கள்; இன்றைக்குக் கட்டிப் புரளுவார்கள்!" என்றாள் நந்தினி.

கந்தமாறன் புன்னகை புரிந்து "அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. இளவரசரின் முகத்துக்காகப் பார்க்க வேண்டியதாயிற்று. ஓகோ! கூடை கூடையாகப் புஷ்பம் கொண்டு வந்து வைத்திருக்கிறீர்களே! நீங்கள் இங்கிருந்து பொழிகிற மலர் மழையினால் இளவரசரின் கோபம் தணிந்து அவர் சாந்தம் அடைந்து விடுவார்! அதோ வந்து விட்டார்கள்! நான் கீழே போகிறேன்!" என்று சொல்லிவிட்டு, விடுவிடுவென்று மச்சுப் படிகளில் இறங்கிப் போனான்.

அந்த முன் வாசலின் மேல்மாடத்திலிருந்து பார்க்கும்போது கண்ணுக்கெட்டிய தூரம் பரந்திருந்த ஜன சமுத்திரத்தின் நடுவே, சுழிக் காற்றினால் ஏற்படும் நீர்ச் சுழலைப்போல் ஓரிடத்தில் தோன்றிக் கொண்டிருந்தது. அந்தச் சுழலின் மத்தியில் அகப்பட்டுக்கொண்ட நாவாயைப் போல் மூன்று குதிரைகளும் அவற்றின் மேல் வந்த வீரர்களும் சில சமயம் தோன்றினார்கள். மறு கணம் ஜன சமுத்திரத்தின் பேரலைகளினால் அவர்கள் மறைக்கப் பட்டார்கள்.

அவ்விதம் ஏற்பட்ட சுழல் மேலும் மேலும் பிரயாணம் செய்து கோட்டையின் முன் வாசலை நெருங்கிக் கொண்டிருந்தது. கடைசியில், கோட்டை வாசலுக்கே வந்து விட்டது.

கோட்டை வாசலை அடைந்த மூன்று குதிரைகள் மீதும் வீற்றிருந்தவர்கள் ஆதித்த கரிகாலரும் பார்த்திபேந்திரனும் வந்தியத் தேவனுந்தான்.

அவர்களைத் தொடர்ந்து வந்த யானை குதிரை பரிவாரங்கள் எல்லாம் வெகு தூரம் பின்னாலேயே அந்தப் பெரிய ஜன சமுத்திரத்தினால் தடை செய்யப் பட்டு நின்று விட்டன.

குதிரைகள் வந்து மாளிகை வாசலில் நின்றதும், ஒரு பெரிய முழக்கம் எழுந்தது. இருபது பேரிகைகள், இருநூறு கொம்புகள், முந்நூறு தாரைகள், ஐந்நூறு தம்பட்டங்களிலிருந்து எழுந்த அந்தப் பெரு முழக்கத்தைக் கேட்டு அந்த மாபெரும் ஜன சமுத்திரத்தின் பேரிரைச்சலும் ஒருவாறு அடங்கியது.

வாத்தியங்களின் பெரு முழக்கம் சிறிது நேரம் ஒலித்து விட்டுச் சட்டென்று அடங்கி நின்றது.

அப்போது ஏற்பட்ட நிச்சப்தத்தில் கட்டியங் கூறுவோன் மேன் மாடத்தை அடுத்திருந்த ஒரு மேடை மீது நின்று இடி முழக்கக் குரலில் கூவினான் :—

"சூரிய வம்சத்திலே பிறந்த மனு மாந்தாதா, அந்த வம்சத்திலே புறாவுக்காக உடலை அறுத்துக் கொடுத்த சிபிச் சக்கரவர்த்தி, சிபிச் சக்கரவர்த்திக்குப் பின் தோன்றிய இராஜகேசரி, அவருடைய புதல்வர் பரகேசரி, பசுவுக்கு நியாயம் வழங்குவதற்காகப் புதல்வனைப் பலி கொடுத்த மனுநீதிச் சோழன், இமய மலையில் புலி இலச்சினை பொறித்த கரிகால் பெருவளத்தான், நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி, பெருநற்கிள்ளி, குள முற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், குராப் பள்ளி துஞ்சிய கிள்ளிவளவன், எழுபத்திரண்டு சிவாலயம் எடுப்பித்த கோப்பெருஞ்சோழர், இவர்கள் வழி வழித் தோன்றிய தொண்ணூறும் ஆறும் புண் சுமந்த பழையாறை விஜயாலயச் சோழர், அவருடைய குமாரர் ஸஸ்யமலையிலிருந்து புகார் நகரம் வரையில் காவேரி நதி தீரத்தில் எண்பத்திரண்டு சிவாலயம் எடுப்பித்த ஆதித்த சோழர், அவருடைய குமாரர் மதுரையும் ஈழமும் கொண்டு தில்லைச் சிதம்பரத்தில் பொன் மண்டபம் கட்டிய பராந்தக சோழ சக்கரவர்த்தி, அவருடைய குமாரர் இரட்டை மண்டலத்துக் கன்னர தேவன் படைகளை முறியடித்து ஆற்றூர்த் துஞ்சிய வீராதி வீரராகிய அரிஞ்சய தேவர், அவருடைய குமாரர் ஈழம் முதல் சீட்புலி நாடுவரை ஒரு குடை நிழலில் ஆளும் பழையாறைப் பராந்தக சுந்தர சோழ சக்கரவர்த்தி, அவருடைய மூத்த குமாரர்—கோப்பெருமகனார்—வடதிசை மாதண்ட நாயகர்—யுவராஜ சக்கரவர்த்தி—வீரபாண்டியன் தலை கொண்ட ஆதித்த கரிகால சோழர் விஜயம் செய்திருக்கிறார்! பராக்! பராக்! பராக்!" என்று அக் கட்டியங் கூறுவோன் கூறி முடித்ததும் மழை பெய்து இடி இடித்து ஓய்ந்தது போலிருந்தது.

உடனே அவன் அருகிலிருந்த இன்னொரு கட்டியக்காரன் "கொல்லிமலை மன்னன்—ஒரே அம்பில் சிங்கத்தையும் கரடியையும் மானையும் பன்றியையும் சேர்த்துத் தொளைத்த வீரன் வல் வில் ஓரி—அவனுடைய பரம்பரையில் வழி வழித் தோன்றிய ராஜாதிராஜ ராஜ மார்த்தாண்ட வீரகம்பீர சம்புவரையன்-சோழ சக்கரவர்த்தி குலத்திற்கு என்றும் துணைவன்—வீரநாராயண ஏரியின் காவலன்—ஐயாயிரம் வீரப் படையின் தண்ட நாயகன்—தனது சிறு அரண்மனையில் எழுந்தருளியிருக்குமாறு கோப்பெருமகனார் ஆதித்த கரிகால சோழரை மன மொழி மெய்களால் உவந்து வரவேற்கிறான்! சோழ குலத் தோன்றலின் வரவு நல்வரவு ஆகுக!" என்று கூவினான்.

அவன் அவ்விதம் பேரிடி போன்ற குரலில் கூறி முடித்ததும் மேல் மாடியிலிருந்து மலர் மாரி பொழிந்தது. ஆதித்த கரிகாலனும் வந்தியத் தேவனும் அண்ணாந்து பார்த்தார்கள். அங்கே இருந்த பல பெண்களின் சுந்தர முகங்களுக்கு நடுவில் வந்தியத்தேவனுக்கு மணிமேகலையின் மலர்ந்த புன்னகையுடன் கூடிய முகம் மட்டும் தெரிந்தது. வந்தியத் தேவனும் ஒரு கணம் புன்முறுவல் செய்தான். உடனே தன் காரியம் எவ்வளவு தவறானது என்பதை உணர்ந்தவன் போல் வேறு திசையை நோக்கினான்.

அதே சமயத்தில் மேலே நோக்கிய ஆதித்த கரிகாலனின் முகத்தில் முன்னை விடக் கடுகடுப்பு அதிகமாயிற்று. அவன் குதிரை மீதிருந்து கீழே குதித்தான்.

மற்ற இருவரும் குதிரை மீதிருந்து இறங்கினார்கள்.

இதற்குள் மறுபடியும் வாத்தியங்களின் கோஷம் முழங்கத் தொடங்கி விட்டது. சற்று அடங்கியிருந்த ஜன சமுத்திரத்தின் ஆரவாரப் பேரொலியும் மீண்டும் பொங்கி எழுந்து விட்டது.

விருந்தாளிகளும் அவர்களை வரவேற்பதற்கு வாசலில் நின்றவர்களும் கோட்டை வாசலுக்குள் புகுந்தார்கள். உடனே கோட்டை வாசலின் கதவுகள் படார், படார் என்று சாத்தப்பட்டன.

ஆதித்த கரிகாலன் திரும்பிப் பார்த்து விட்டு, "ஏன் இவ்வளவு அவசரமாகக் கதவைச் சாத்துகிறார்கள்? தஞ்சைக் கோட்டையில் என் தந்தையைச் சிறை வைத்திருப்பது போல் என்னையும் இங்கே சிறை வைக்கப் போகிறீர்களா,

என்ன? என்னுடன் வந்த பரிவாரங்கள் என்ன ஆவது?" என்று கேட்டான்.

இரு கிழவர்களும் சில கண நேரம் திகைத்துப் போய் நின்றார்கள்.

பழுவேட்டரையர் முதலில் சமாளித்துக் கொண்டு, "கோமகனே! இந்தச் சோழ சாம்ராஜ்யத்திலுள்ள லட்சோப லட்சம் ஜனங்களின் அன்பு நிறைந்த உள்ளங்களே தங்களையும் தங்கள் தந்தையையும் சிறைப் படுத்தியிருக்கின்றன. தனியாகச் சிறை வைப்பது எதற்கு?" என்றார்.

"இளவரசே! தங்களுடைய தரிசனத்துக்காக வந்திருக்கும் பெருந்திரளான மக்கள் இந்தச் சிறிய குடிசைக்குள் புகுந்தால் என்ன ஆவது? அவர்கள் வெளியில் நிற்கும்போது அக்கம் பக்கமுள்ள தோப்புகள் எல்லாம் குரங்குகள் அழித்த மதுவனம் போல் ஆகிவிட்டன. ஜனக் கூட்டம் கலைந்ததும் தங்களுடன் வந்த பரிவாரங்களை உள்ளே அழைத்து வருகிறோம். அது வரையில் தங்களுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்ய இங்கே பணியாளர்கள் பலர் இருக்கிறார்கள்......" என்றார் சம்புவரையர்.

இச்சமயம் கோட்டை வெளி வாசலில் ஜனங்களின் ஆரவாரம் அதிகமானது போலக் கேட்டது.

கரிகாலன் கந்தமாறனிடம் "முன் வாசல் மேல் மாடிக்குப் போக வழி எங்கே?" என்று கேட்டான்.

கந்தமாறன் மச்சுப்படிகள் இருந்த இடத்தைச் சுட்டிக் காட்டியதும் கரிகாலன் அந்தப் பக்கம் நோக்கி விடு விடு வென்று நடந்து சென்றான். கந்தமாறனும், வந்தியத்தேவனும், பார்த்திபேந்திரனும் உடன் சென்றார்கள்.

சம்புவரையர், பழுவேட்டையரைப் பார்த்து, "இது என்ன? வழியோடு போகிற சனியனை விலைக்கு வாங்கியது போல் வாங்கிக் கொண்டோமே? இவனுடைய மூளை சரியாயிருப்பதாகவே தோன்றவில்லையே? சின்னப் பிள்ளைகளின் பேச்சைக் கேட்டு இந்தக் காரியத்தில் தலையிட்டோம்!" என்றார்.





"அப்படி என்ன மோசம் வந்து விடப் போகிறது? காரியம் நடந் தால் நடக்கட்டும்; நடக்கா விட்டால் போகட்டும்" என்றார் பழுவேட்டரையர்.

"காரியத்தைப் பற்றியே நான் சொல்லவில்லை. நம் வீட்டில் இருக்கும் போது ஏதாவது ஏடாகூடமாக நடக்கக் கூடாது அல்லவா? நிமித்தம் ஒன்றும் சரியாக இல்லை. அவனோ மதம் பிடித்த யானையைப் போல் இருக்கிறான். முகத் தின் கடுகடுப்பையும் நாக்கில் விஷத்தை யும் பார்த்தீர்கள் அல்லவா?"

"சில நாள் பல்லைக் கடித்துக்கொண்டு பொறுமையா யிருக்க வேண்டியதுதான். அந்தப் பல்லவன் பார்த் திபேந்திரன் அவனைக் கட்டுக்குள் வைத்திருக்க உதவியா யிருப்பான். இன்னொரு துஷ்டச் சிறு வன் பின்னோடு வந்திருக் கிறானே, அவனைத்தான் எனக்குப் பிடிக்கவில்லை. அவன் ஒற்றன் என்று கூட எனக்குச் சந்தேகம். முன்னால் நாம் கூட்டம் போட்ட அன்றைக்குக் கூட அவன் இங்கு வந்திருந்தான் அல்லவா? நேற்று மாலை இந்தக் கொட்டகைக்கு வெளியில் மரத்தின் மறைவில் நின்றிருந்தவனும் அவன்தான்!"

"அவன் என் மகனுடைய சிநேகிதன் அல்லவா? ஆகையால் அவனைப் பற்றிப் பயமில்லை. இப்போது எதற்காகப் பெண்கள் இருக்கும் இடத்துக்கு அவசரமாகப் போகிறார்கள்? நாமும் போவோமா?"

இச்சமயம், மச்சுப்படி வரையில்போன பார்த்தி பேந்திரன் திரும்பி வந்து, இரு பெரும் குறுநில மன்னர் பேசிக் கொண்



டிருந்த இடத்தை அணுகினான். சம்புவரையர் கடைசியாகக் கூறிய வார்த்தைகள் அவன் காதில் விழுந்தன.

"ஐயா! இளவரசர் விஷயத்தில் உங்களுக்கு வேறு என்ன சந்தேகம் இருந்தாலும், பெண்கள் சம்பந்தமான சந்தேகம் மட்டும் வேண்டியதில்லை. பெண்களை அவர் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை..." என்று சொன்னான்.

பழுவேட்டரையர் புன்னகையுடன், "அப்படியானால் அவரை நாம் இங்கே அழைத்ததின் நோக்கம் எப்படி நிறைவேறும்?" என்று கேட்டார்.

"அது சம்புவரையர் திருமகளின் அதிர்ஷ்டத்தையும் சோழ சாம்ராஜ்யத்தின் அதிர்ஷ்டத்தையும் பொறுத்தது."

"பார்த்திபேந்திரா! மணிமேகலையின் அதிர்ஷ்டம் ஒரு புறம் இருக்கட்டும்! வரும்போதே எதற்காக இளவரசர் இவ்வளவு கடுகடுத்த முகத்துடன் வருகிறார்? எதற்காக இப்படி விஷமமாகப் பேசுகிறார்? அவரை நீ எப்படியாவது இங்கிருந்து சமாதானமாக அழைத்துப் போனால் போதும் என்று தோன்றுகிறது!" என்றார் சம்புவரையர்.

"வெள்ளாற்றங் கரை வரையில் இளவரசர் சுமுகமாகவும் குதூகலமாகவும் வந்தார். பின்னர் இந்த வந்தியத் தேவனும் வைஷ்ணவன் ஒருவனும் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் ஏதோ சொல்லியிருக்க வேண்டும். அது முதல் இளவரசரின் குணம் மாறியிருக்கிறது..."

"நாங்களும் அப்படித்தான் நினைத்தோம். இப்போது என்ன செய்யலாம்? அந்தத் துஷ்டப் பையனும் உங்களோடு வந்திருக்கிறானே?"

"நீங்கள் கொஞ்சம் பொறுமையாயிருங்கள். நான் எல்லாம் சரிப்படுத்திவிடுகிறேன். அந்தப் பையனுடன் எனக்கும் ஒரு சண்டை இருக்கிறது. அதை நான் சமயம் பார்த்துத் தீர்த்துக் கொள்கிறேன்" என்றான் பார்த்திபேந்திரன்.

* * *

கரிகாலனும் மற்ற இருவரும் முன்வாசல் மேன்மாடத்துக்குச் சென்றபோது அங்கிருந்த பெண்கள் திரும்பிப் படியில் இறங்கி வரும் சமயமாயிருந்தது.

கரிகாலன் கந்தமாறனைப் பார்த்து, "நண்பனே! தாய்மார்களையெல்லாம் நமக்காக இங்கு வந்து காத்திருக்கும்படி செய்யலாமா? அது பெருந்தவறு. நாம் அல்லவா இவர்கள் இருக்குமிடம் சென்று நமது வணக்கத்தைச் செலுத்த வேண்டும்?" என்று கூறிவிட்டுப் பெண்மணிகளுக்கு வணங்கி வழி விட்டு நின்றான். ஒவ்வொருவராக இறங்கியபோது கந்தமாறனிடம் யார் யார் என்று கேட்டுத் தெரிந்து கொண்டான். நந்தினியைப் பார்த்ததும் "ஓ! பழுவூர் இளைய பாட்டி அல்லவா? உண்மையாகவே வந்திருக்கிறார்களா? மிகவும் சந்தோஷம்!" என்றான். நந்தினி ஒன்றும் சொல்லாமல் அவனைத் தன் கூரிய கண்களால் பார்த்துவிட்டுச் சென்றாள். அப்பார்வையின் தீட்சண்யத்தினால் கரிகாலனுடைய உடம்பு சிறிது நடுங்கிற்று. மறு கணமே அவன் சமாளித்துக் கொண்டு, பின்னால் வந்த மணிமேகலையைப் பார்த்து, "ஓகோ! இவள் உன் தங்கை மணிமேகலையாக இருக்க வேண்டும். சித்திரத்தில் எழுதிய கந்தர்வ கன்னிகையைப் போல் இருக்கிறாள். இவளுக்கு விரைவில் ஒரு நல்ல மாப்பிள்ளையைப் பார்த்துக் கலியாணம் பண்ணி வைக்க வேண்டும்!" என்றான். மணிமேகலை வெட்கத்தினால் குழிந்த கன்னங்களுடன் வந்தியத்தேவனைக் கடைக் கண்ணால் பார்த்துவிட்டு மடமட வென்று கீழே இறங்கினாள்.

பெண்கள் எல்லாரும் சென்ற பிறகு கரிகாலன் அந்த மேல் மாடத்தின் முகப்புக்குச் சென்று நின்றான். வாசலில் அப்போதுதான் கலையத் தொடங்கியிருந்த ஜனக் கூட்டத்தினிடையே மறுபடியும் பேராரவாரம் எழுந்தது. ஜனங்கள் திரும்பிக் கோட்டை வாசலண்டை வரத் தொடங்கினார்கள்.

அந்த மேல் மாடத்தையொட்டித் தனியாக நீண்டு அமைந்திருந்த மேடையில் கட்டியங்கூறுவோன் நிற்பதைக் கரிகாலன் கவனித்தான். அவனைச் சமிக்ஞையினால் அருகே வரும்படி அழைத்தான். வந்தவுடன் ஜனங்களுக்குச் சில விஷயங்களை அறிவிக்கும்படி கூறினான். கட்டியங் கூறுவோன் திரும்பிச் சென்று பேரிகையைச் சில தடவை முழக்கினான். பின்னர், ஜனங்களைச் சமிக்ஞையினால் பேசாதிருக்கும்படி கேட்டுக் கொண்டான். ஆதித்த கரிகாலரின் விருதுகளில் சிலவற்றை விடுத்துச் சிலவற்றை மீண்டும் கூறிவிட்டு "அத்தகைய சோழர் குலக்கோமகனார் இந்தக் கடம்பூர் மாளிகையில் ஒருவாரம்—பத்து நாட்கள்வரை தங்கியிருப்பார். சுற்றுப்புறமுள்ள ஊர்களுக்கெல்லாம் விஜயம் செய்வார். அப்

போது அந்தந்த ஊர் மக்களை நேரில் கண்டு அவரவர்களுடைய குறைகளையெல்லாம் கேட்டு அறிந்து கொள்வார்!" என்று கூவினான்.

அவ்வளவுதான்; இதுவரையில் அந்த ஜனக் கூட்டத்தில் எழுந்த ஆரவாரமெல்லாம் நிச்சப்தம் என்று சொல்லும்படியாக அவ்வளவு பெரிய பேரிரைச்சல் கிளம்பியது. குதூகலக் குரல்களும் வாழ்த்தொலிகளும் கரகோஷ ஓசையும் சேர்ந்து கலந்து எழுந்து சுற்றுப் பக்கம் வெகுதூரம் சென்று வீரநாராயண ஏரியிலிருந்து எழுபத்து நாலு கணவாய்களின் வழியாகப் பாய்ந்த தண்ணீர் வெள்ளத்தின் ஓசையையும் அமுங்கி விடும்படி செய்தன.

* * *

சம்புவரையரும் பழுவேட்டரையரும் பார்த்திபேந்திரனும் அவர்கள் முன்னால் நின்ற இடத்திலேயே நின்று கொண்டிருந்தார்கள். ஆதித்த கரிகாலன் அவர்கள் நின்ற இடத்தை நெருங்கியதும், "பார்த்திபேந்திரா! ஏது நீ இங்கேயே நின்று விட்டாய்? இந்தக் கிழவர்களுடன் சேர்ந்து நீயும் சதியாலோசனை செய்யத் தொடங்கி விட்டாயா?" என்று கேட்டான்.

கிழவர்கள் இருவரும் திடுக்கிட்டுக் கரிகாலனுடைய முகத்தைப் பார்த்தார்கள். அவன் முகத்தில் புன்னகை தவழ்ந்து கொண்டிருந்தது.

சம்புவரையர் சிறிது சமாளித்துக் கொண்டு, "கோமகனே! சற்று முன் சிறை என்றீர்கள். இப்போது சதி என்கிறீர்கள். இந்தக் குடிசையில் தாங்கள் விருந்தாளியாகத் தங்கியிருக்கும்போது தங்களுக்கு அணுவளவேனும் தீங்கு நேராது என்று ஆணையிட்டுக் கூறுகிறேன். அவ்விதம் நேர்வதற்கு முன்னால் என் உடலிலிருந்து உயிர் பிரிந்து போயிருக்கும்!" என்றார்.

"ஐயா! எனக்குத் தீங்கு நேரும் என்று நான் அஞ்சுவதாக எண்ணினீர்களா? ஒரு லட்சம் பாண்டிய நாட்டுப் பகைவர்களின் மத்தியில் இருக்கும் போதே எனக்குத் தீங்கு நேரும் என்று நான் அஞ்சியதில்லை. என் அருமைச் சிநேகிதர்களின் மத்தியில் இருக்கும் போது அஞ்சுவானேன்? ஆனால் தங்க

னுடைய இந்த மாளிகையைக் குடிசை என்று மட்டும் கூற வேண்டாம்! ஆகா! இதைச் சுற்றியுள்ள மதில் சுவர்கள் எவ்வளவு உயரம்? எவ்வளவு கனம்? தஞ்சாவூர்க் கோட்டை மதிலை விடப் பெரியதாகவல்லவா இருக்கிறது? எந்தப் பகைவர்களை முன்னிட்டு இவ்வளவு பந்தோபஸ்தாகக் கோட்டை கட்டியிருக்கிறீர்கள்?" என்றான் கரிகாலன்.

"இளவரசே! எங்களுக்கென்று தனிப்பகைவர்கள் யாரும் இல்லை. சோழ குலத்தின் பகைவர்கள் எங்கள் பகைவர்கள்; சோழ குலத்தின் நண்பர்கள் எங்களுக்கும் நண்பர்கள்."

"தங்கள் வாக்குறுதி எனக்கு மிக்க மகிழ்ச்சி அளிக்கிறது. இதைத் தங்கள் குமாரன் கந்தமாறனிடமும் சொல்லி வையுங்கள். என்னுடைய நண்பனாகிய வாணர் குலத்து இளவரசனைக் கந்தமாறன் தன்னுடைய பகைவன் என்று கருதி வருகிறான். இது பெரும் பிழையல்லவா?" என்று ஆதித்த கரிகாலன் கூறியபோது, கந்தமாறன் தலையைக் குனிந்து கொண்டான். (தொடரும்)

# படித்துப் பாருங்கள்!

## நமது தலைநகரம்

பிரயாண நூல் என்றாலே யாருக்கும் படிப்பதற்குத் தனி ஆர்வம் உண்டாகும். தூர தூர தேசங்களில் வாழும் மக்களைப் பற்றியும் அவர்களது வாழ்க்கை, மொழி, பழக்க வழக்கங்கள் இவற்றையெல்லாம் பற்றி அறிந்து கொள்ளும் ஆர்வம் இல்லாதவர்களே இல்லை என்றே கூறலாம்.

நமது பாரத தேசத்தின் தலைநகரமான டில்லியைப் பற்றி எத்தனை பேருக்குத் தெரியும்! டில்லிக்குப் போய் வந்தவர்கள் கூட அந்நகரத்தைப் பற்றி அறிந்து கொண்டிருக்க மாட்டார்கள்.

டில்லிக்குப் போய் வந்தவர்களை பார்த்துச் சில கேள்விகள் கேட்டால் அவர்களுக்குப் பதில் சொல்லத் தெரியாது.

புதுடில்லிப் பெண்கள் எப்படி விரும்பார்கள்! புது டில்லியில் என்னென்ன மிருகங்களைச் சாதாரணமாகக் காணலாம்! குதுப் மினாரின் உயரம் எவ்வளவு அடி! அந்தச் சரித்திரப் பிரசித்தி பெற்ற சிகரத்தின் உச்சியை அடைய எத்தனை படிகள் ஏற வேண்டும்! புதுடில்லியில் எத்தனை பத்திரிகை நிருபர்கள் இருக்கிறார்கள்! புது டில்லியில் இல்லாதவை என்னென்ன! புது டில்லியில் தடுக்கி விழுந்தால் யார்மீது விழுவோம்!—இந்தக் கேள்விகளுக்கெல்லாம் இந் நூல் ஆசிரியரான சோம. லெ. இலக்குமணச் செட்டியார் பளிச்சுப் பளிச்சென்று பதில் தருகிறார்.

இதேமாதிரி பம்பாய், புதுச்சேரி, யாழ்ப்பாணம் முதலிய நகரங்களைப் பற்றியும் இந்நூலில் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. புதுச்சேரியைப் பற்றிப் படிக்கும்போது சென்னைக்குச் சமீபத்தில் இருக்கும் இவ்வூரைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டியது இவ்வளவு இருக்கிறதா என்று அதிசயிக்கத் தோன்றுகிறது.

யாழ்ப்பாணத்தைப் பற்றிக் கூறும்போது இந்நூல் ஆசிரியர் மிகவும் சுவாரஸ்யமாக ஒரு விஷயத்தைக் கூறுகிறார்.

"யாழ்ப்பாணத்தில் உள்ள ஆடவர் பெண்டிரின் பெயர்களை நாம் அறிந்து இன்புறலாம். ஓரே வகையான இறுதிச் சொல் இவற்றில் இருப்பதைப் பாருங்கள். அம்மனுக்குப் பூசை ஆனந்தானே சாமிக்குப் பூசை ஆகவேண்டும்! ஆகையினால் முதலில் பெண்களுடைய பெயர்களைச் சொல்லுவோம்:—ராஜேசுவரி, மகேசுவரி, அகிலாண்டேசுவரி, புவனேசுவரி, சத்தியானந்த ஈசுவரி, நித்தியானந்த ஈசுவரி; ஆடவருள் செல்வநாயகம், ராஜநாயகம், குணநாயகம், அரியநாயகம், தனிநாயகம், பேரின்பநாயகம், சபாநாயகம், நாகலிங்கம், ராஜலிங்கம், பரமலிங்கம், சுந்தரலிங்கம், அரியரத்தினம், ராஜரத்தினம், நவரத்தினம், கனகரத்தினம்......" என்று மிகச் சுவாரஸ்யமாகக் கூறிக்கொண்டே போகிறார். இதேமாதிரி மற்ற நகரங்களைப் பற்றியும் ருசிகரமான தகவல்களைத் தந்திருக்கிறார்.

"ஆகையினால் நாமெல்லோரும் நம் வீட்டுத் தோட்டத்தில் முருங்கை பயிரிடுவது சாலச் சிறந்தது. கம்பளிப் பூச்சி வருமென்று பயப்பட வேண்டுவதில்லை. பினைல் கலந்த நீரைத் தெளிக்கலாம்—உடம்பில் அல்ல, மரத்திலே!"

இந்தமாதிரி ரஸமான கட்டங்கள் இந்நூலில் நிறைய இருக்கின்றன.

*பிரசுரம்: இன்ப நிலையம், மயிலாப்பூர்; சென்னை 4; விலை ரூ. 1—8—0.*

## நல்ல நண்பர்கள்

தமிழ் நாட்டுக் குழந்தைகளுக்குச் சமீபகாலத்தில் ஒரு அதிர்ஷ்டம் அடிக்க ஆரம்பித்திருக்கிறது. தமிழ் மொழியில் குழந்தைகளுக்கான புத்தகங்கள் ஏராளமாய் வெளியாகின்றன. இப்போதெல்லாம் சிறுவர்களிடம், "ஏதாவது சாக்லேட், பப்பர்மிண்ட் வாங்கிச் சாப்பிடு" என்று 4 அணா கொடுத்தால், அவர்கள் நிச்சயமாய் அந்தப் பெயர் கொண்ட புத்தகங்களுடனோ அல்லது ஒரு டமால், டுமீல், டும்டும் என்ற புத்தகங்களுடனோதான் திரும்பி வருவார்கள்.

இந்த "நல்ல நண்பர்கள்" என்ற புத்தகம் கண்ணைக் கவரும் அழகான மேலட்டையுடனும், வழவழப்பான ஆர்ட் காகிதத்தில் பெரிய எழுத்தில் பல படங்களுடனும் அச்சடிக்கப் பட்டிருக்கிறது. குழந்தைகளுக்கென்று ஆங்கில நாட்டில் வெளியாகும் புத்தகங்களை ஒத்திருக்கிறது.

கதையும் எளிய நடையில் அமைந்திருக்கிறது. ஒரு நாய், ஒரு வாத்து, இரண்டு குழந்தைகள் இவர்களிடையே ஏற்பட்டிருந்த நட்பைப் பற்றி அழகாகச் சொல்லப்பட்டிருக்கிறது. உள்ளத்தை உருக்கும் முடிவைக் கொண்ட இக்கதை நட்பின் பெருமையைக் குழந்தைகளுக்கு விளக்குகிறது.

இனிமேல் சிறுவர் சிறுமிகளுக்கும் பிறந்த நாள் பரிசு என்ன கொடுப்பது என்று யாரும் கவலைப் பட வேண்டியதில்லை. இதோ இருக்கிறது "நல்ல நண்பர்கள்." இம்மாதிரி உயர்ந்த முறையில் சிறந்த பதிப்பாக இன்னும் பல புத்தகங்கள் வெளியாக வேண்டும் என்று விரும்புகிறோம்.

எழுதியவர் அழ. வள்ளியப்பா, விலை; ரூ. 1-8-0 பிரசுரம்: பழனியப்பா பிரதர்ஸ், சென்னை-திருச்சி.

# அகில இந்திய பைசைக்கிள் மகாநாடு, 1952.

**சென்னை சைக்கிள் இறக்குமதியாளர் சங்கம், சென்னை.**
**பம்பாய் சைக்கிள் வியாபாரிகள் சங்கம், பம்பாய்.**
**இந்திய சைக்கிள் வர்த்தகர்கள் சங்கம், கல்கத்தா.**
**வட இந்தியா சைக்கிள் இறக்குமதியாளர் சங்கம், டெல்லி.**

ஆகியோரின் ஆதரவில் கூட்டப்படுகிறது.

## மகாநாடு 1952 நவம்பர் 8, 9 தேதிகளில் சென்னையில் அரமனைக்காரத் தெரு கோகலே ஹாலில் நடைபெறும்

**கனம் டாக்டர் பு. கிருஷ்ண ராவ். சென்னை சர்க்காரின் தொழில் போக்குவரத்து மந்திரி மகாநாட்டை ஆரம்பித்து வைக்க அன்புடன் இசைந்துள்ளார்**

**ஸிம்ப்ஸன் தொழில் ஸ்தாபனங்கள் கோஷ்டி சேர்மனும் சென்னை நகர ஷெரீப்புமான ஸ்ரீ எஸ். அனந்தராம கிருஷ்ணன் தலைமை வகிப்பார்**

இந்த மகாநாட்டில் வர்த்தகப் பிரதிநிதிகள் சைக்கிள்களை உபயோகிக்கும் பொது ஜனங்களையும் தயாரிப்பாளர்களையும் சந்தித்து, பொதுப் பிரச்னைகளைப் பற்றி விவாதம் நடத்துவதால் முக்கூட்டுக் கட்சி அடிப்படையில் இந்த மகாநாடு கூட்டப் படுகிறது. முதலில் பொதுஜனங்கள் விஷயத்தில்தான் கவனம் செலுத்த வேண்டும். ஏனெனில் அவர்களின் தேவைகள் முக்கியமானவை; அவர்களின் எண்ணிக்கையும் அதிகரித்துக் கொண்டே போகிறது. அவர்கள் விலைகள் நியாயமற்று இருக்கின்றன வென்றும், தெரிந்தெடுப்பதற்கான ரகங்கள் குறைவாக உள்ளன வென்றும் சில இனங்களில் மிகவும் மட்ட ரகமான சரக்குகள் இருக்கின்றன வென்றும் ஆக்ஷேபிக்கிறார்கள். அதே சமயத்தில் நாட்டில் பைசைக்கிள் சப்ளை போதுமான அளவுக்கு ஒரு காலும் அடைய முடியாத நிலைமையை உணர்ந்து அதற்கேற்றவாறு இறக்குமதிகள் அனுமதிக்கப்படுவதில்லை என்று ஸ்திரம் பெற்ற இறக்குமதி வியாபாரிகள் கருதுகின்றனர்; மேலும் கட்டுப் படுத்தப்பட்ட இறக்குமதிகளும் நியாயம் தவறியும் பெரும் அளவிலும் இதரர்களுக்கு வழங்கப் படுகின்றன என்று கருதப்படுகிறது. உள்நாட்டு உற்பத்தியாளர் இந்த விஷயத்தில் ஏற்கெனவே ஆக்ஷேபணையை எழுப்பியுள்ளார்கள். இவர்களின் ஆரம்பதசையில் இருக்கும் தொழிலுக்கு இன்னல்களைச் சமாளிக்கப் போதுமான பாதுகாப்பு அளிக்கவில்லை என்று இவர்கள் கூறுகிறார்கள்.

இதில் உண்மை என்ன!

இந்த மகாநாட்டின் ஆதரவாளர்கள் இந்த விஷயத்தில் சிரத்தையுள்ள அனைவரையும் சந்தித்து பல பிரச்னைகளில் கருத்துக்களைப் பரிமாறிக் கொண்டு முடிவு காண அல்லது பரஸ்பரம் புரிந்து கொள்ளவாவது விரும்புகிறார்கள்.

**ஆர். எஸ். ராமசுப்ப அய்யர், பி. ஏ. (ஹானர்ஸ்)**
சேர்மன், உபசரணைக் கமிட்டி

# அதிகப்படி தென்பு



## நீங்களும் பெறுக

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்



தென்புடன் விளங்குக — உங்கள் தினசரி போஜனத்துடன் வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிட்டு வருக...... அது சுருசுருப்பூட்டுவதும் ருசிமிகுந்ததுமான ஒரு டானிக். அதிகப்படி தென்பை வளர்க்க உதவுவதில் நிச்சயகுணமுள்ளது. வாட்டர்பரீஸ் காம்பவுண்டு உங்களுக்கு அத்யாவசியமான புஷ்டிபதார்த்தங்களை வழங்கி, உங்களுக்கு சோர்வு, ஜலதோஷம், இருமல், எதுவும் ஏற்படாத வாறு எதிர்ப்பு சக்தியை அதிகரிக்கும். வயது வந்தவர், இளைஞர் யாவருக்கும் தேக வலிமை பெற இன்றியமையாதது.




# WATERBURY'S
## COMPOUND
## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

உங்களை தென்புடன் வைத்திருக்கும்

MAS 744

தமிழ் நாட்டில் சிறந்த இலக்கிய மேதைகளில் ஒருவரும் கலா ரஸிகருமான ஸ்ரீ வி. வி. சீனிவாசய்யங்கார் அவர்கள் கீழ்க்கண்ட அருமையான கட்டுரையைக் ''கல்கி'' தீபாவளி மலருக்காக எழுதி உதவினார்கள். சிறிது காலந் தாழ்ந்து வந்தபடியால் தீபாவளி மலரில் பிரசுரிக்க முடியாமற் போயிற்று. அதற்குப் பதிலாக இந்த இதழில் மிக்க மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறோம். — ஆசிரியர்.

# மைசூர் சமஸ்தானத்து முதல் திவான்

**வி. வி. சீனிவாச ஐயங்கார்**

தென்னிந்தியா முழுதும் பெயரும் புகழும் பெற்று விளங்கிய திவான் ரங்காச்சார்லுவின் பெயரைக் கேள்விப்படாதவர் இருக்க முடியாது. அவர் மறைந்து இன்றைக்கு எழுபது வருஷங்கள் ஆகியும், அவரது பெயர், புகழ் வானில் மங்காத ஒளியுடன் பிரகாசித்து வருகிறது.

பிரிட்டிஷ் சர்க்கார் அந்தக் காலத்தில் மைசூர் ராஜகுடும்பத்தினரிடம் மைசூர் ராஜ்யத்தை ஒப்புவித்த பின் முதல் திவானாக இருந்தவர் ஸ்ரீ ஸி. வி. ரங்காச்சார்லுதான்.

பிரிட்டிஷார் ஹைதரையும் திப்பு சுல்தானையும் தோற்கடித்து மைசூர் ராஜ்யத்தைக் கைப்பற்றினர். பிறகு அந்த ராஜ்யத்தைத் தங்களுடைய நேர் நிர்வாகத்திலேயே வைத்துக் கொண்டு விடுவது என்ற உத்தேசம் அவர்களுக்கு இருந்தது. எனவே, பிரிட்டிஷார் மேற்படி ராஜ்யத்தை உடனே தாங்களாக ராஜ குடும்பத்தினரிடம் ஒப்புவித்து விடவில்லை. மகத்தான கிளர்ச்சிக்குப் பின் மிகுந்த தயக்கத்துடன்தான் அதைப் பிரிட்டிஷார் அவர்களிடம் ஒப்புவித்தனர்.

மைசூர் ராஜ்யம் பிரிட்டிஷ் கமிஷனரின் நிர்வாகத்தில் இருந்தபோது ரங்காச்சார்லு பிரிட்டிஷாரிடம் வேலை பார்த்து வந்தார். பிரிட்டிஷார் மைசூர் ராஜ்யத்தை ராஜ குடும்பத்தினரிடம் ஒப்புவிப்பதற்குப் பேருதவி புரிந்தவர் ரங்காச்சார்லுவே. அதன் சம்பந்தமான தஸ்தாவேஜைப் பிரசுரித்து, அதன் பிரதிகளைப் பிரிட்டிஷ் பார்லிமெண்டு அங்கத்தினர்களுக்கு வழங்கியவர் ரங்காச்சார்லுதான். அவ்வாறு செய்ததாலேயே மைசூர் ராஜகுடும்பத்தினரிடம் பிரிட்டிஷார் மேற்படி ராஜ்யத்தை ஒப்புவிப்பதற்குப் பிரிட்டிஷ் பார்லிமெண்டின் ஆதரவு கிடைத்தது.

மைனராக இருந்த மகாராஜா சாமராஜேந்திர உடையாருக்குப் பதினெட்டு வயது பூர்த்தியானதும் அவரிடம் மைசூர் ராஜ்ய நிர்வாகம் ஒப்புவிக்கப் பட்டது. அந்த வயதில் மேற்படி நிர்வாகத்தை ஏற்றுக் கொள்ளுவதற்கு மகாராஜா சாமராஜேந்திர உடையாரின் கல்வியும் பயிற்சியும் அவருக்கு உறுதுணையாக இருந்தன.

மகாராஜா ராஜ்ய நிர்வாகத்தை ஏற்றுக் கொள்வதற்குப் பூர்வாங்கமாகப் பூர்ண பயிற்சி அளிக்கும் விஷயத்தில் ரங்காச்சார்லு தாமே நேரடியாக மிகுந்த சிரத்தை எடுத்துக் கொண்டார். தங்கள் கையில் நிர்வாக அதிகாரங்களை வைத்துக் கொண்டிருந்த பிரிட்டிஷ் அதிகாரிகள் ஆங்கிலேயரின் கொள்கைகளுக்கு இணங்க மகாராஜாவுக்குப் பயிற்சி அளிக்க வேண்டும் என்பதில் அக்கறை கொண்டிருந்தனர்.

ஆனால், அப்போது மைசூர் அரண்மனையின் மானேஜராக இருந்த ரங்காச்சார்லு அதற்கு இடம் கொடுக்கவில்லை. இளைஞரான மகாராஜா தேச ஆச்சாரங்களைக் கைவிட்டு ஆங்கிலேயரின் ஆச்சாரங்களைப் பின் பற்றாமல் தடுக்க முற்பட்டார். மகாராஜாவுக்குத் தர்மத்திலும் புராதன இந்தியப் பண்பாடுகளிலும் பற்றுதல் ஏற்படும்படி செய்வதில் மிகுந்த சிரமம் எடுத்துக் கொண்டார். எனவே, அத்தகைய திறமையும் உயர்ந்த குணங்களும் வாய்க்கப்பட்ட ரங்காச்சார்லுவை மகாராஜாவும் பிரிட்டிஷ் அதிகாரிகளும் ஏக மனதாக மைசூர் சமஸ்தானத்தின் முதல் திவான் அல்லது பிரதம மந்திரியாகத் தேர்ந்தெடுத்ததைக் குறித்து ஆச்சர்யப்படுவதற்கில்லை.

அக்காலத்தில் கூட 'மைசூர் மைசூர்க்காரர்களுக்கே' என்ற கோஷம் இருக்கத்தான் செய்தது. ஆனால் அத்தகைய எதிர்ப்பை ரங்காச்சார்லு சமாளித்து வெற்றி பெற்றார். அத்தகைய எதிர்ப்பு இயற்கையானதே என்று அவர் கருதி, எதிர்ப்பாளர்கள் விஷயத்தில் சகிப்புத் தன்மையுடன் நடந்து கொண்டார். அதே சமயம், சமஸ்தானத்தின் பொதுஜன நன்மையையே தமது இலட்சியமாகக் கொண்ட உதாரண புருஷரான நிர்வாகத் தலைவர் என்ற புகழை ஸ்தாபித்துக் கொண்டார்.

ரங்காச்சார்லு 1831-ம் ஆண்டில் கொளத்தூர் என்ற கிராமத்தில் ஜனனமானார். அவரது தந்தை செங்கல்பட்டை அடுத்துள்ள செட்டி புண்யம் என்ற கிராமத்தைச் சேர்ந்தவர்.

ரங்காச்சார்லு கல்வி கற்பதற்காகச் சென்னைக்கு வந்தார். சென்னையில் அவர் ஹைஸ்கூலில் முதன்மையாகத் தேறித் தமது திறமையை வெளிப்படுத்தினார். பல பரிசுகளும் பெற்றார். கலாசாலையிலும் அவர் ஏராளமான பரிசுகள் பெற்று எல்லோருடைய பாராட்டுதலுக்கும் பாத்திரரானார்.

ரங்காச்சார்லு, புகழ் பெற்ற பவ்வல் என்ற ஆங்கிலப் பேராசிரியரிடம் கல்வி கற்ற மாணவர். பேராசிரியர் பவ்வலின் சிலை இன்றும் பிரஸிடென்ஸி கலாசாலையை அலங்கரித்துக் கொண்டிருப்பதைக் காணலாம்.

பதினைது ரூபாய் மாதச் சம்பளத்தில் தமது உத்தியோக வாழ்க்கையை ஆரம்பித்த ரங்காச்சார்லு, தம்முடைய இணையற்ற மேதையினால் அக்காலத்தில் இந்தியாவிலேயே சிறந்த நிர்வாகியாகவும் ராஜதந்திரியாகவும் திகழ்ந்தார். ரங்காச்சார்லுவை அப்போது பல பிரமுகர்கள், பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்து உலகப் பிரசித்திபெற்ற கிளாட்ஸ்டனுடன் ஒப்பிட்டுக் கூறினார்கள். மைசூர் சரித்திரத்தில் புகழ்பெற்ற ஸர் டி. மாதவராவ், சேஷையா சாஸ்திரி, ராமய்யங்கார் போன்ற பிரபல திவான்களைக் காட்டிலும் ரங்காச்சார்லுவே பல விதத்திலும் மேலானவர் என்று கூறவேண்டும்.

***

ரங்காச்சார்லுவின் வாழ்க்கையில் நிகழ்ந்த பல சம்பவங்கள் அவரது ஒப்பற்ற மேதையை



ஸ்ரீ எஸ். வி. ரங்காச்சார்லு

யும் உயர்ந்த குணங்களையும் நிதர்சனமாகக் காட்டுகின்றன.

ஒரு சமயம் தென் ஜில்லாக்களிலிருந்து சென்னைக்கு வந்து கொண்டிருந்த ரங்காச்சார்லு செங்கல்பட்டில் தங்க நேர்ந்தது. அப்போது ஏதோ சட்டப் பரீட்சைக்கு எழுதுவதற்காக அவரது நண்பர்களும் உறவினர்களும் செங்கற்பட்டுக்கு வந்திருந்தார்கள்.

"அப்படியானால் நானும் அந்தப் பரீட்சைக்கு எழுதட்டுமா!" என்று கேட்டார் ரங்காச்சார்லு.

மற்றவர்கள் அவரது கூற்றைக் கேட்டுப் பரிகாசம் செய்தார்கள். உடனே ரங்காச்சார்லு அவர்களிடமிருந்து சட்டப் புத்தகங்களைக் கடனாகக் கேட்டு வாங்கிச் சில நாட்களில் வாசித்து முடித்து விட்டார். பிறகு அவர் பரீட்சைக்கும் எழுதினார். மேற்படி பரீட்சையில் அவர் முதலாவதாகத் தேறியதைக் கண்டதும், முதலில் அவரைக் கேலி செய்த நண்பர்கள் அவரது அபார மேதையையும் இணையற்ற உறுதியையும் குறித்துப் பிரமித்துப் போயினர்.

ஒரு சமயம் ரங்காச்சார்லுவின் மேஜைமீது பல வைத்தியப் புத்தகங்கள் வைக்கப்பட்டிருந்தன. அங்கு வைத்தியப் புத்தகங்கள் வரக் காரணம் என்னவென்று நண்பர்கள் அவரைக்கேட்டனர்.

ரங்காச்சார்லுவுக்கு ஒரு நாள் ஜலதோஷம் பிடித்துக்கொண்டது. அவர் சிகிச்சைக்காக ஒரு டாக்டரிடம் சென்றபோது டாக்டர் ஒரு மருந்தைக் கொடுத்தார்.

அந்த மருந்தில் என்னென்ன கலந்திருக்கிறது என்று ரங்காச்சார்லு கேட்டார். "இதெல்லாம் சொன்னால் உங்களுக்குப் புரியாது. கொடுத்த மருந்தைச் சாப்பிடுங்கள்" என்று டாக்டர் சொல்லி விட்டார். அவ்விதம் டாக்டர் கூறியது தம்மை அவமதிப்பது போல் ரங்காச்சார்லுவுக்குத் தோன்றியது. அவ்வளவுதான். அதிலிருந்து வைத்திய புத்தகங்களைத் தாமே வாசித்துத் தேர்ச்சி பெற ரங்காச்சார்லு முனைந்துவிட்டார்!

இவ்விவரங்களை யெல்லாம் ரங்காச்சார்லுவிடமிருந்து கேட்ட அவரது நண்பர்கள் அதைக் குறித்து ஆச்சரியப்பட வில்லை. ஏனெனில், அவருடைய உறுதியும் மேதையும் அவர்கள் ஏற்கெனவே அறிந்திருந்ததுதானே!

***

மகா மேதாவியான ரங்காச்சார்லுவின் ஏகாக்ரசித்தம் மிகவும் வியக்கத் தக்கது. அவர் ஒரு விஷயத்தில் கவனத்தைச் செலுத்திக் கொண்டிருக்கும் போது அவரது கண்களுக்கு வேறு எதுவும் தென்படாது.

ஒரு நாள் அவர் தமது குமாஸ்தாவுக்கு ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார். அவர் கூறியதைக் குமாஸ்தா எழுதிக் கொண்டிருக்கையில் முத்துஸ்வாமி ஐயர் (பிறகு ஹைகோர்ட் நீதிபதி பதவிக்கு வந்தவர்) ரங்காச்சார்லுக்கு எதிரே வந்து சுமார் அரை மணி நேரம் நின்று கொண்டிருந்தார். ரங்காச்சார்லுவின் கண்கள் அப்போது திறந்திருந்தும் கூட, அவர் மனம் முழுவதும் குமாஸ்தா எழுதும் விஷயத்தில் சென்றிருந்ததால், அவர் முத்துஸ்வாமி ஐயரைக் கவனிக்கவில்லை. கடைசியாகக் குமாஸ்தாவுக்குக் கூற வேண்டிய விஷயமெல்லாம் முடிந்த பின் தான், முத்துஸ்வாமி ஐயர் நிற்பது ரங்காச்சார்லுவின் கண்களுக்குத்தெரிந்தது. உடனே அவர் பதறிப்போய், "தாங்கள் எப்போது வந்தீர்கள்! தயவுசெய்து உட்காருங்கள்" என்று கூறி தமது வருத்தத்தைத் தெரிவித்துக்கொண்டாராம்.

ரங்காச்சார்லு கிணற்றிலிருந்து தாமே தண்ணீர் இழுத்து ஸ்நானம் செய்வதற்கு மிகவும் பிரியப் படுவார். ஒரு சமயம் அவர் அவ்வாறு குடத்தில் தண்ணீரை இழுத்து ஸ்நானம் செய்து கொண்டிருந்தார். ஒரு தடவை இரண்டு கைகளாலும் குடத்தைத் தூக்கித் தலையில் தண்ணீரை விட்டுக் கொண்டவர், பிறகு மறுபடியும் குடத்தைக் கீழே கொண்டு வராமல் மேலே தூக்கியபடியே சிலையைப்போல் வெகு நேரம் கிணற்றடியிலேயே நின்று கொண்டிருந்தார். அப்போது அவரது மனம் எங்கேயோ சென்று விட்டது. அவருக்கு அருகில் சென்று அவரது நிலையை அவரிடம் எடுத்துக் கூற உறவினர்கள் பயந்தனர். கடைசியாக, போலீஸ் ராகவாச்சாரியாரின் மூத்த பெண்ணான கிழவி வந்து அவரிடம் மெதுவாகப் பேச்சுக் கொடுக்கவே, ரங்காச்சார்லு அப்போது தான் தாம் இருக்கும் நிலையை உணர்ந்தார்!

அவர் சாப்பிடும்போது யோசனையில் ஆழ்ந்து விடுவது உண்டு. பிறகு வயிறு புடைக்கச் சாப்பாடு போட்டு விட்டதாகச் சமையற்காரரைக் கோபித்துக் கொள்வதும் உண்டு.

***

அவர் உடை தரித்துக்கொள்வது வேடிக்கையாக இருக்கும். அப்போது அவரைப் பார்ப்ப

வர்கள் அவர் ஒரு பெரிய சமஸ்தானத்தின் திவான் என்று சொல்ல முடியாது.

எல்லோருடைய நன் மதிப்புக்கும் மரியாதைக்கும் பாத்திரரான ரங்காச்சார்லு பல சமயங்களில் குழந்தைபோல் நடந்து கொள்வார்.

அவர் சென்னைக்கு வரும்போது தமது நெருங்கிய உறவினரின் குழந்தைகளை யெல்லாம் அழைத்துக் கொண்டு பார்க் கண் காட்சிக்குச் செல்வது உண்டு. அப்போது அவர் தாமும் அந்தக் குழந்தைகளில் ஒன்ருக ஆகி விடுவார். அந்தக் குழந்தைகளுடன் ஊஞ்சல் ராட்டினங்களில் கலந்து கொண்டு குதூகலம் அடைவார்.

அவர் தமது உறவினர்களின் கிராமங்களுக்குச் சென்ருல், அங்கு ஒவ்வொரு வீடாகச் சென்று குருடர், செவிடர்களைக்கூட விடாமல் எல்லோருடைய க்ஷேம லாபங்களையும் பற்றி அன்புடன் விசாரிப்பது வழக்கம்.

* * *

ஸ்ரீ ரங்காச்சார்லுவின் உறவினர் ஒருவர் ஆங்கிலக் கம்பெனி யொன்றில் நல்ல சம்பளத்தில் துபாஷாக இருந்தார். ஆனல் அந்திய காலத்தில் அவரது கை கொடுத்து விட்டது. அவர் இறந்த பின் தங்கள் கடனுக்கு ஏதாவது வழி செய்தாலன்றிச் சவத்தை எடுத்துச் செல்லக் கூடாது என்று கடன்காரர்கள் தடுத்து விட்டார்கள். அந்த இடத்தில் பல வக்கீல்கள் இருந்தனர். எனினும் மேற்படி பிரச்னையைத் தீர்க்க வழி என்ன என்று அவர்களுக்குத் தோன்றவில்லை.

பிறகு அங்கு ரங்காச்சார்லு வந்ததும் அவருக்கு விஷயம் தெரிந்தது. சட்ட நுணுக்கங்களில் மேதாவியான ரங்காச்சார்லு ஒரே விநாடியில் அந்தப் பிரச்னையைத் தீர்த்து விட்டார்.

"மாண்டவரின் சொத்துக்களில் தங்களுக்கு எவ்வித பாத்தியமும் இல்லை என்று அவரது வாரிசுதாரர்கள் கூறுகின்றனர். எனவே, மாண்டவர் கொடுக்க வேண்டிய கடன்களுக்கும் அவர்களுக்கும் எத்தகைய பாத்தியமும் இல்லை" என்று ரங்காச்சார்லு கூறிவிட்டார். இதைக் கேட்டதும் கடன்காரர்கள் பேசாமல் வந்த வழியே திரும்பிச் சென்று விட்டார்கள்.

* * *

ஸ்ரீ ரங்காச்சார்லு மைசூர் சமஸ்தானத்தின் முதல் திவான் பதவியை ஏற்றுக் கொண்டதும் அவர் முதல் காரியமாகத் தமது சம்பளத்தைக் குறைத்துக் கொண்டு, சர்க்கார் நிர்வாகச் செலவில் சிக்கனம் செய்வதற்கு வழி காட்டினர்.

இதைத்தவிர அவர் திவான் பதவி யேற்று முதல் மாதச் சம்பளம் பெற்றதும், அதைத் தம் கிராமத்தில் உள்ள ஏழைகளான தமது உறவினர்களுக்கெல்லாம் அனுப்பிவிட்டார்.

ரங்காச்சார்லுவின் எளிய வாழ்க்கைக்கும் அனுதாப உணர்ச்சிக்கும் இதுபோல் இன்னும் எத்தனையோ உதாரணங்கள் கூறலாம்.

ஒரு சமயம் மைசூரில் நடந்த ஒரு திருவிழாவை முன்னிட்டு ரங்காச்சார்லுவின் வீட்டுக்கு அவரது உறவினர்களில் பலர் வந்திருந்தனர். ஒருநாள் மாலை அவர்கள் வண்டிகளுக்கு ஏற்பாடு செய்து ஸ்ரீரங்க பட்டணத்துக்குப் புறப்பட்டுச் சென்றனர். அவர்களில் ஒருவர் மாத்திரம் வண்டிகளில் இடம் இராத காரணத்தினலோ, அல்லது ஏழைமைத்தனம் காரணமாகவோ பின் தங்கும்படி நேர்ந்து விட்டது.

திவான் ரங்காச்சார்லு மாலை வீட்டுக்கு வந்ததும், மேற்படி உறவினர் மாத்திரம் மற்றவர்களுடன் ஸ்ரீரங்க பட்டணத்துக்குப் போகமுடியாத காரணத்தைத் தெரிந்து கொண்டார். உடனே ரங்காச்சார்லு ஒரு பெரிய மாட்டு வண்டிக்கு ஏற்பாடு செய்து, உறவினருடன் தாமும் அந்த வண்டியிலேயே புறப்பட்டார்.

இரவில் இருவரும் வண்டியிலேயே தூங்கி விட்டனர். விடியற்காலம் டபேதார் வண்டிக்குள் பார்த்தபோது திவான் விழித்துக் கொண்டிருப்பதையும், அவர் எழுந்திருக்க முடியாமல் அவர் மீது உறவினர் காலையும் கையையும் போட்டுக்கொண்டு தூங்குவதையும் பார்த்தான். உடனே அவன் அந்த உறவினரை எழுப்ப முயற்சித்த போது. "தூங்குகிறவரை ஏன் சிரமப் படுத்துகிருய்!" என்று திவான் கடிந்து கொண்டார். இந்தப் பேச்சுக் குரலைக் கேட்டு உறவினர் விழித்துக் கொண்டபோது, தாம் செய்த தவறை உணர்ந்து ரங்காச்சார்லுவிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். ரங்காச்சார்லுவோ, மேற்படி உறவினர் எத்தகைய தவறும் செய்யவில்லையென்றும் தூங்கும்போது அவ்விதம் நேருவது யாருக்கும் இயற்கையென்றும் கூறிவிட்டார்.

கல்யாணம் முதலிய சுபகாலங்களில் ரங்காச்சார்லு குழந்தைகளைப் போல் மிகவும் குதூகலமாக அவற்றில் பங்கெடுத்துக் கொள்வார். அவரது நாலாவது பெண்ணுக்கு விவாகம் நடந்தபோது, வழக்கம்போல் மாலை ஊஞ்சலில் புது தம்பதிகளை உட்கார வைத்துப் பெண்கள் பாடுவதற்கு ஏற்பாடு செய்தனர். கல்யாணத்துக்கு வந்திருப்பவர்களும் ஒவ்வொரு தம்பதிகளாக ஊஞ்சலில் உட்காருவது வழக்கம். அவ்வாறு உட்காரும்படி ரங்காச்சார்லு அங்கிருந்தவர்களிடம் கூறியபோது, ஒருவர் வேடிக்கையாக, "முதலில் நீங்கள் உட்கார்ந்து மற்றவர்களுக்கு வழி காட்டுங்கள்" என்ருர்.

உடனே ரங்காச்சார்லு சிறிதும் தாமதிக்காமல் தமது மனைவியைக் கூப்பிட்டுத் தாமும் அவளுடன் ஊஞ்சலில் உட்கார்ந்து கொண்டார். உடனே கல்யாணத்துக்கு வந்திருந்தவர்கள் ய வரும் கை கொட்டிச் சிரித்துக் குதூகலம் அடைந்தார்கள்.



* * *

ஸ்ரீ ரங்காச்சார்லு இரண்டு வருஷகாலம் கூட மைசூர் திவானுக இல்லை. இருபத்திரண்டு மாத காலம்தான் அப் பதவியில் இருந்தார். அந்தக் [குறுகிய காலத்துக்குள் அவர் நிர்வாக சம்பந்தமான எத்தனையோ அரிய பெரிய காரியங்களைச் சாதித்தார். பாமர ஜனங்களும், பூமியை உழுது உழைப்பவர்களும், தேகத்தினுல் உழைக்

கும் தொழிலாளர்களும் வறுமையினால் கஷ்டப்படாமல் க்ஷேமமாக இருப்பதே சிறந்த சர்க்காருக்கு அடையாளம் என்ற இலட்சியத் துடன் ரங்காச்சார்லு தமது பதவியைத் திறம்பட வகித்தார். விவசாயம் பெருகவும், ஜனங்களுக்கு உணவுப் பொருள்கள் ஏராளமாகக் கிடைக்கவும் அவர் அக் காலத்திலேயே பாடு பட்டார். மேற்படி சமஸ்தானத்தில் பல் வேறு தொழிற்சாலைகள் அபிவிருத்தி அடைய வேண்டிய விஷயத் திலும் மிகுந்த சிரத்தை எடுத்துக் கொண்டார். ரயில்வே அபிவிருத்தி அடைவதற்காக அவர் காட்டிய அக்கறையும் போற்றத் தக்கது. அதற்காக அவர் இரவில் தாமே பல இடங்களுக்கு நேரில் சென்று முகாம் போட்டது உண்டு. சமஸ்தானத்தில் கல்வி அபிவிருத்திக்கான முக்கியத் திட்டங்களையும் அவர் அலட்சியம் செய்யவில்லை.



ரங்காச்சார்லு திவான் பதவியை ஏற்றதும், அவர் மகாராஜாவிடமும் சமஸ்தானத்திடமும் விசுவாசத்துடன் நடந்து கொள்ள முற்பட்டார். இதைப் பிரிட்டிஷ் அதிகாரிகள் விரும்பவில்லை. ரங்காச்சார்லு திவான் பதவியிலிருந்து கொண்டு தங்களுடைய நலன்கள் அபிவிருத்தி அடைவதற்கு உதவி செய்வார் என்று அவர்கள் எதிர்பார்த்தனர். ஆனால் அவ்விதம் மறைமுகமாகப் பிரிட்டிஷாருக்கு உதவியாக இருக்க ரங்காச்சார்லு மறுத்துவிட்டார்.

இளைஞரான மகாராஜா பட்டத்துக்கு வந்த பின் அப்போது இந்தியா வைஸ்ராயாக இருந்த லார்டு லிட்டன் மைசூருக்கு விஜயம் செய்தார். அவர் ரங்காச்சார்லுவின் போக்கைக் குறித்துத் தமது ஏமாற்றத்தை ரங்காச்சார்லுவிடமே பகிரங்கமாக வாய் விட்டுக் கூறினாராம்.

ஆனால் அதற்கெல்லாம் ரங்காச்சார்லு மசியவில்லை. வைஸ்ராய் வற்புறுத்தும் பட்சத்தில் தாம் திவான் பதவியை ராஜிநாமா செய்துவிட்டு, இங்கிலாந்துக்குச் சென்று மைசூர் ராஜ்யத்தின் சார்பில் கிளர்ச்சி செய்யத் தயாராக இருப்பதாக அவர் லார்டு லிட்டனிடம் கூறிவிட்டாராம்.

1881-ம் வருஷம் ரங்காச்சார்லு திவானாக இருந்த காலத்தில்தான் மைசூரில் அவரால் ஜனப் பிரதிநிதிச் சபை அமைக்கப்பட்டது. இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபை ஏற்படுவதற்கு நாலு வருஷங்களுக்கு முந்தியே மைசூரில் ஜனப் பிரதிநிதிச் சபை முறையை ரங்காச்சார்லு பரிசோதித்துப் பார்க்க முற்பட்டது ஆச்சரியமாகும். அதிலிருந்து அவரது ராஜ தந்திரத்தையும் அரசியல் அறிவையும் அறிந்து கொள்ளலாம். எனவே, ஒரு விதத்தில் இந்தியாவில் முதன் முதலாக ஜனநாயக சர்க்காருக்கு விதை விதைத்தவர் ரங்காச்சார்லு தான் என்று கூற வேண்டும்.

ரங்காச்சார்லு திவானாக இருந்தபோதே காலமானார். அவர் சிகிச்சை செய்து கொள்வதற்காக அவரது மைத்துனரான சர் வி. பாஷ்யம் ஐயங்கார் வீட்டுக்கு வந்தார். 1883-ம் வருஷம் ஜனவரி மாதம் 23-ந் தேதி அவர் இவ்வுலகை நீத்தார். அவர் தமது ஆரோக்கியத்தைப் பொருட்படுத்தாமல் ராஜ்யவிசுவாக அலுவல்களைக் கவனித்ததே அவரது அகால மரணத்துக்குக் காரணம்.

தமக்கு அந்தியகாலம் நெருங்கிவிட்டது என்பதை உணர்ந்ததும் அவர் மகாராஜாவுக்கு ஒரு கடிதம் எழுதியதாகத் தெரிகிறது. சர் கே. சேஷாத்ரி ஐயரை, தமக்குப் பின் திவான் பதவியில் நியமிக்க வேண்டும் என்று அக் கடிதத்தில் அவர் கேட்டுக்கொண்டிருந்தாராம், அதற்கிணங்க திவானாக நியமிக்கப்பட்ட சேஷாத்ரி ஐயர் பதினாறு வருஷகாலம் திவான் பதவியைத் திறம்பட வகித்து, பொதுஜன க்ஷேமார்த்தமான பல அபூர்வ சாதனைகளை நிறைவேற்றினார்.

ரங்காச்சார்லுவின் மரணத்துக்குப் பிறகு மைசூர் நகரில் ரங்காச்சார்லுவின் ஞாபகார்த்தமாக ஒரு மண்டபம் நிர்மாணிக்கப்பட்டது. மைசூரிலிருந்து பத்து மைல் தூரத்திலுள்ள ஒரு கிராமத்துக்கு அவரது ஞாபகார்த்தமாக ரங்காசமுத்திரம் என்று பெயரிட்டிருக்கிறார்கள்.

அக்காலத்தில் தென்னிந்தியாவிலிருந்து பல சிறந்த ராஜ தந்திர மேதாவிகள் சுதேச சமஸ்தானங்களின் நிர்வாகிகளாகச் சென்றனர். அவர்களில் ரங்காச்சார்லுவின் பெயரும் புகழும் இன்றளவும் மங்காமல் இருந்து வருகின்றன.

ரங்காச்சார்லுவின் குடும்பத்தைச் சேர்ந்த பலர் இன்று பல உயர்ந்த பதவிகளைத் திறம்பட வகித்து வருகிறார்கள்.

கடமையில் பற்றுதல், ஏகாக்ர சித்தம், பெருமுயற்சி, சலியா உழைப்பு, இலட்சியத்தில் உறுதி, தியாக புத்தி போன்ற அரும் பெரும் குணங்களே ரங்காச்சார்லுவின் புகழுக்கும் பெருமைக்கும் காரணம் என்பதில் சந்தேகமில்லை.



## உங்களால் முடியுமா?

●

"என்ன அப்பா, ஸர்வர்! இந்த வடையா ஒரணா! ரொம்பச் சின்னதாக இருக்கிறதே, அப்பா!"

"நீங்கள் முதலிலே அதை முழுக்கச் சாப்பிடுங்கள் பார்க்கலாம்!"

# லீலாவின் மன்னி

கே. ஆர். கௌசல்யா...

உள்ளத்தில் குதூகலம் பொங்க மாடியிலிருந்து வேகமாகக் கீழ் ஹாலுக்கு இறங்கி வந்தாள் பங்கஜம்.

முகத்துக்கு நேராகப் பிரித்து வைத்துப் படித்துக்கொண்டிருந்த புத்தகத்தைத் தாழ்த்திவிட்டு அவளை ஏறிட்டுப் பார்த்தாள் லீலா.

"இந்தா! இது நன்றாக யிருக்கிறதா என்று பார்!..." என்று சொல்லிக்கொண்டே ஒரு சிறு பெட்டியை அவளிடம் நீட்டினாள் பங்கஜம்.

ஆவலுடன் அதைக் கையில் வாங்கித் திறந்து பார்த்தாள் லீலா. அதில் ஒரு ஜோடி தங்க வளையல்கள் புது மெருகுடன் பிரகாசித்துக் கொண்டிருந்தன.

"இது யாருக்கு மன்னி!..." என்று வியப்புடன் வினவினாள் லீலா.

"சீதாவுக்கு..." என்று சொல்லி விட்டு லீலாவின் முகத்தை நிமிர்ந்து நோக்கினாள் பங்கஜம்.

"சீதாவுக்கா! ...... இப்போ என்ன திடீர்னு அவளுக்கு வளையல்!" என்று குரலில் வெறுப்பு தொனிக்கக் கேட்டாள் லீலா. அவளுடைய கேள்வி பங்கஜத்தின் உள்ளத்தைத் துளைத்தது. இருந்தாலும், "எப்போதோ செய்திருக்க வேண்டிய காரியம் இது. இப்போதுதான் வேளை வந்தது" என்று சொன்னாள் பங்கஜம்.

அதற்குள் "அம்மா" என்று பால்காரன் குரல் கொடுக்கவே பால் வாங்கப் பாத்திரம் கொண்டு வரச் சமையலறைக்குச் சென்றாள் பங்கஜம்.

"ஆமாம்! இதற்கெல்லாம் வேளை வரும்!... நான் ஏதாவது கேட்டால்தான் இல்லாத சாக்குப் போக்கெல்லாம்!" என்று கூறி விட்டு லீலா 'விருக்' கென்று நாற்காலியை விட்டு எழுந்து மாடிக்குச் சென்றாள். சிறிது நேரத்துக்கெல்லாம் வெளியே செல்லத் தயாராய் அலங்காரம் செய்து கொண்டு கீழே இறங்கி வந்தாள். நேரே சமையலறைக்குச் சென்ற அவள் பங்கஜத்திடம் "மன்னி! ... நான் கொஞ்ச நேரம் வெளியே போய்விட்டு வருகிறேன்" என்றாள் விறைப்பாக.

"போய் விட்டு வாயேன்..." என்று கூறிய பங்கஜம் சட்டென்று ஏதோ நினைத்துக் கொண்டவள் போல், "ஆமாம் ...... வளையை எடுத்து உள்ளே பத்திரமாய் வைத்துவிட்டாயல்லவா!" என்று கேட்டாள்.

"நான் எடுத்து வைக்க வில்லையே!" என்றாள் லீலா திகைப்புடன்.

"அங்கே மேஜை மேலே அது இல்லையே! நீ அதை எடுத்து வைப்பாய் என்கிற எண்ணத்திலே தான் அதை அங்கேயே வைத்து விட்டு நான் உள்ளே போனேன். உண்மையாகவே நீ எடுத்து வைக்கவில்லையா லீலா! இல்லே, விளையாட்டுக்காகச் சொல்கிறாயா...!" என்று திகைப்புக் கலந்த அன்புடன் கேட்டாள்.

"என்ன மன்னி இது! நான் என்ன சின்னக் குழந்தையா விளையாடுவதற்கு! அதுவும் உன் தங்கைக்கு நீ வாங்கி யிருக்கிற வஸ்துவிலே எனக்கு என்ன சொந்த மிருக்கு எடுத்து வைப்பதற்கு என்று நான் அதை மேஜை மேலேயே வைத்து விட்டு மாடிக்குப் போய் விட்டேனே!" என்றாள் லீலா குத்தலும், ஆத்திரமும் நிறைந்த குரலில்.

கை வேலையை நிறுத்தி விட்டு நிமிர்ந்தாள் பங்கஜம். "பின்னே அந்த வளையல் என்ன ஆச்சு! அங்கே மேஜை மேலே இல்லையே!" என்று திகிலுடன் கேட்டுக்கொண்டே கை வேலையை அப்படியே போட்டு விட்டு முன் ஹாலுக்கு வந்தாள். அவளைப் பின் தொடர்ந்து வந்த லீலாவும் அவளுடன் எல்லா இடங்களிலும் வளைப் பெட்டியைத் தேடினாள். கைகால்கள் தான் சோர்ந்து போயினவே தவிர வளையல் பெட்டி கிடைக்கவில்லை.

"ஐயோ!......பால்காரன், கறி காய்க்காரன், வீடு பெருக்குகிறவள், வண்ணான் இத்தனை பேரும் சோதனை போல் சற்று முன்னாடிதான் ஒருத்தர் பின் ஒருத்தராய் வந்துவிட்டுப் போயிருக்கிறார்களே! அவர்களில் யார் கண்ணிலே அது பட்டு யார் எடுத்துக் கொண்டார்களோ! நாம் என்ன கண்டோம்! இப்போ யாரை என்று நாம் கேட்பது! நீ இருக்கிறாய் என்ற தைரியத்தில் தானே லீலா நான் உள்ளே போனேன்! என்னிடம் ஒரு வார்த்தை சொல்லிவிட்டு நீ மாடிக்குப் போயிருக்கக் கூடாதா!" பொங்கி வந்த அழுகையை சிரமத்துடன் அடக்கிக் கொண்டு கையைப் பிசைந்து கொண்டே கூறினாள் பங்கஜம்.

லீலாவுக்குத் துக்கம் தொண்டையைப் பீறிட்டுக் கொண்டு வந்தது.

'என் அண்ணா பணத்திலே எனக்குக்கூட நகை செய்து போட நினைக்காமல் உன் தங்கைக்கு அக்கறையோடு வளை வாங்கி அனுப்ப ஏற்பாடெல்லாம் செய்ததும் இல்லாமல் இப்போ அது காணாமல் போனதுக்கு என் தலை மேலே பழியை வேறு போடுகிறாயே! நான் ஏன்தான் அந்தச் சமயம் வீட்டிலே இருந்தேனோ! என் சிநேகிதி யார் வீட்டுக்காவது போய்த் தொலைந்திருக்க மாட்டேனா! என் தலைவிதி இப்படி உன்னிடம் அநாவசியமாகப் பழி கேட்டுக் கொள்ள வேண்டும் என்று இருக்கிறதே!" என்று படபடவென்று கூறி ஒப்பாரி வைக்க ஆரம்பித்து விட்டாள்.

அவளுடைய வார்த்தைகள் ஒவ்வொன்றும் பங்கஜத்தின் இதயத்தை ஈட்டி போல் தாக்கின.

"அழாதே லீலா! இது என் அஜாக்கிரதையால் வந்தது தான். நான் அப்பவே அதை உள்ளே எடுத்து வைத்து விட்டுப் போயிருக்கவேணும். போனால் போகிறது. நான் உன்னைச் சொன்னதுக்காகக் கோபித்துக் கொள்ளாதே, லீலா" என்று கூறி அவ்வளவு மன வருத்தத்திலும் லீலாவை அணைத்துக் கொண்டு தேற்றினாள்.

"ஆமாம்! போனால் போகிறது. இப்போ உனக்கென்ன கஷ்டம்! எங்க அண்ணா பணம் தானே பழுத்தது!" என்று கூறித் தன்னை அணைத்துக் கொண்ட பங்கஜத்தின் கையை உதறிவிட்டு மாடிக்குத் தடதடவென்று ஏறிச் சென்றாள்.

வளையல் காணமற்போன வருத்தம் ஒருபுறமிருக்க, லீலாவின் கடுமை நிறைந்த சொற்கள் பங்கஜத்திற்குப் புண்ணில் கோலிடுவது போலிருந்தன. கண்களிலிருந்து பெருகிய கண்ணீரைத் தலைப்பால் துடைத்துக் கொண்டு உள்ளே சென்று சமையல் வேலையில் ஈடுபட்டாள்.

* * *

பங்கஜத்துக்கு மூன்று வயது சிறியவள் சீதா. சிறு வயதிலேயே தன் இரு குழந்தைகளையும

பத்தினி ஜானகியின் காலில் கட்டிவிட்டு அவர்களைத் திக்கற்றவர்களாய் நிறுத்திவிட்டுக் கண்ணை மூடிவிட்டார் தந்தை நாகராஜய்யர்.

நாகராஜய்யர் உயிரோடிருந்த போது ஏதோ சுமாரான சம்பளத்தில் தான் வேலையிலிருந்தார். அதனால் அவர் இறந்தவுடன் ஜானகிக்குத் தன் எதிர்காலம் மிகவும் பயங்கரமாகத் தோன்றியது. தன் இரு பெண்களையும் எப்படிக் காப்பாற்றிக் கரை சேர்ப்பது என்று தெரியாமல் விழித்தாள் அவள். ஆயினும் தான் செய்தாக வேண்டியவைகளில் எதையும் செய்யத் தவறவில்லை ஜானகி. ஊரில் அவள் பெயரில் இருந்த சொற்ப நிலத்தில் ஒரு பகுதியையும், தன் நகைகளில் சிலவற்றையும் விற்று, பங்கஜம் மணப்பருவம் எய்தியதும் ஒரு சுமாரான இடத்தில் விவாகம் செய்து கொடுத்து விட்டாள் அவள்.

இயற்கையிலேயே நல்ல அழகும் அடக்கமும் வாய்க்கப் பெற்ற பங்கஜத்திற்கு அவளுடைய நல்ல குணத்திற்கேற்ற புருஷனாகத் தான் வாய்த்திருந்தான் வாசுதேவன். சிறு வயதிலேயே பெற்றோரை இழந்த அவன் தன் ஒரே தங்கை லீலாவுடன் சென்னையில் இருந்து வந்தான். தன் அருமைச் சகோதரி சீதாவையும், தாயையும் பிரிய மனமின்றிச் சென்னைக்கு வாசுதேவனுடன் குடித்தனம் செய்ய வந்தாள் பங்கஜம்.

வந்த புதிதில் லீலா, ''மன்னி! மன்னி!'' என்று பங்கஜத்திடம் தன் உயிரையே வைத்துப் பழகி வந்தாள். பங்கஜத்தின் மனமும், லீலாவைத் தன் உடன் பிறந்த சகோதரி ஸ்தானத்தில் தான் பாவித்து வந்தது. நாட்கள் பல கடந்தன.

ஜானகியின் தலை மேலிருக்கும் பாரம் முழுவதும் குறைபடச் சீதாவின் விவாகம் ஒன்று பாக்கியாக இருந்தது. பங்கஜத்திற்குச் செலவழித்தது போக மிகுதியாக நின்றிருந்த தன் நகைகளையும், பாக்கி நிலத்தையும் விற்று ஏதோ குறைவில்லாமல் அவளுக்கும் விவாகம் செய்து வைத்துவிட்டாள் ஜானகி. கல்யாணத்தின் போது சீதா தன் கையில் ஒரு ஜோடி தங்க வளையல்தான் போட்டுக் கொண்டிருந்தாள். இன்னும் ஒரு ஜோடி பிறகு செய்து போட்டுவிட வேண்டும் என்று அப்போது முதலே பல்லவி பாட ஆரம்பித்து விட்டாள் சீதாவின் மாமியார். ஜானகியும், கூடிய சீக்கிரமே செய்து போட்டு விடுவதாகச் சொல்லிக் கொண்டே வந்தாளே தவிர அவளால் செய்யச் சாத்தியப் படவில்லை.

திடுமென ஒருநாள் ஜானகி 'டைபாய்டு' ஜுரம் வந்து படுத்தாள். பிழைப்பதே துர்லபம் என்று டாக்டர் கூடக் கையை விரித்து விட்டார். இந்த விஷயமறிந்த பங்கஜமும் சீதாவும் கதறிக் கொண்டு ஓடிவந்தனர். பங்கஜத்தை அன்புடன் தன்னருகில் அழைத்தாள் ஜானகி.

''பங்கஜம்!...எப்படியோ உங்களிருவரையும் என் திக்கற்ற நிலைமையிலும் பராமரித்துக் காப்பாற்றி ஒரு வழியாக உங்கள் வாழ்க்கைப் பாதையை வகுத்துக் கொடுத்து விட்டேன். ஆனால் என் மனத்திலிருப்பது ஒரே ஒரு குறை. அதை நீ கட்டாயம் தீர்த்து வைப்பாய் என்ற நம்பிக்கையில்தான் நான் உன்னிடம் சொல்லுகிறேன். சீதாவுக்குக் கல்யாணத்தின் போது போடச் சக்தியில்லாததால் நாம் போடாமல் விட்டுவிட்ட அந்த ஒரு ஜோடி வளையலை எப்படியாவது நீ செய்து போட்டுவிடு. உனக்குச் செய்து போட்ட அளவு நகைகூட என்னால் சீதாவுக்குச் செய்ய முடியவில்லை......தங்கமான குணம் வாய்ந்தவர் உன் கணவர்......நிச்சயமாக அவர் இதற்கு எவ்விதமான எதிர்ப்பும் சொல்ல மாட்டார் என்று தான் நான் நம்புகிறேன்......'' என்று வருத்தம் தோய்ந்த குரலில் சொல்லி முடித்தாள்.

கண்களில் கண்ணீர் ததும்ப அவ்வாறே செய்வதாக வாக்குக் கொடுத்தாள் பங்கஜம். நிம்மதியுடன் கண்ணை மூடினாள் ஜானகி.

தாயின் மறைவுக்குப் பின் புக்ககம் வந்த பங்கஜம் தன் தாய்க்குக் கொடுத்த வாக்கை மறக்கவில்லை. ஒருநாள் மெள்ளத் தன் கணவனிடம் அதைப்பற்றி வெளியிட்டு வேண்டினாள். வாசுதேவன் அதற்கு எவ்விதமான தடையும் சொல்லாமல் உடனே சம்மதித்து விட்டான்.

தாயும், தந்தையுமற்ற சீதாவுக்கு, அவள் குறைகளைத் தீர்த்துவைக்க அவள் சகோதரி பங்கஜத்தைத் தவிர வேறு யாரும் கிடையாது என்பதை உணர்ந்த வாசுதேவன், எப்படியாவது அவளுக்கு ஒரு ஜோடி வளையல் செய்து அனுப்பி, அவளைப் புக்ககத்தாரின் ஏச்சுப் பேச்சினின்றும் மீட்டு விடுவதாகக் கூறினான். அத்தகைய பெருந்தன்மையான குணம் வாய்ந்த அவனைத் தன் கணவனாகப் பெறத் தான் பூர்வஜன்மத்தில் எவ்வளவோ புண்ணியம் செய்திருக்கவேண்டும் என்று எண்ணி எண்ணி மனம் பூரித்தாள் பங்கஜம்.

இதனிடையில்தான் ஒருநாள் சீதாவின் புக்ககத்தாரிடமிருந்து பங்கஜத்திற்கு ஒரு கடிதம் வந்தது. சீதா ஆறுமாதமாக ஸ்நானம் செய்யாமலிருப்பதாகவும், எப்படியாவது அவளுடைய வளை காப்பிற்காவது முன்பு தாங்கள் கேட்டபடி ஒரு ஜோடி வளையல் செய்து போட்டு விடவேண்டும் என்றும் கண்டிப்புடன் எழுதியிருந்தனர். பங்கஜத்தின் உள்ளம் அந்தக் கடிதத்தைக் கண்டவுடன் மகிழ்ச்சியால் பூரித்தது. அன்று மாலை வாசுதேவன் வந்தவுடன் விஷயத்தை உற்சாகத்துடன் தெரிவித்தாள் பங்கஜம்.

சீதாவுக்கு வளை வாங்குவதைப் பற்றிய பிரஸ்தாபம் வீட்டில் ஏற்பட்டது முதலே லீலாவின் மனத்தில் பங்கஜத்தின் மேலிருந்த அன்பு கொஞ்சம் கொஞ்சமாய்க் குறைய ஆரம்பித்து விட்டது. உண்மையாகவே ஒருநாள் வாசுதேவன் அதை வாங்கிவந்து கொடுத்தவுடன், 'தன் அண்ணனுடைய சம்பாத்தியத்தில் மன்னி தன் தங்கைக்கு வளை செய்து போடுவதாவது' என்று எண்ணி எண்ணிக் குமுறினாள். மேலும் சீதாவைத் தன் எதிரியாகவே பாவித்து வெறுக்க ஆரம்பித்தாள்.

மறுநாளே, பங்கஜம் கேட்ட ஒரு ஜோடி தங்க வளையலை வாங்கி வந்துவிட்டான் வாசுதேவன். உற்சாகத்துடன் அதை அவள் லீலாவிடம் காட்ட வந்தபோதும் பின்பு அது காணாமற் போய் விட்டபோதும் கோரமான சொற்களை வீசி பங்கஜத்தின் மென்மையான உள்ளத்தைப் புண்படுத்தினாள் லீலா. அவளுடைய மனமாற்றத்தை ஒருவாறு ஊகித்துக் கொண்ட பங்கஜம் ரொம்பவும் மனவருத்தப்பட்டாளே தவிர அதற்காக அவளிடம் சிறிதும் முகம் கோணவில்லை.

தன் சிநேகிதன் ஒருவன் வீட்டிற்குப் போய் விட்டு வந்த வாசுதேவன், விஷய மறிந்ததும் வளையல் காணாமல் போனதற்கு அவளுடைய அஜாக்கிரதைதான் காரணம் என்று கூறிப் பங்கஜத்தை நன்றாக வைதான். 'என்றைக்குமில்லாமல் அன்று அவன் கோபத்திற்கு ஆளாகி விட்டோமே' என்று வருத்தத்தாலும் வெட்கத்தாலும் குன்றிப் போனாள் பங்கஜம். ஆனால்

அதை பெல்லாம்கூட அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை அவள். தான் எவ்வளவோ பாடுபட்டு, ஆசைப்பட்டுத் தன் கணவனிடம் சொல்லிச் சீதாவுக்காக...அவளுடைய வளைகாப்பின் போது போட்டுப் பார்க்கவேண்டும் என்று ஆசையுடன் வாங்கி வந்த வளையல் காணமற் போய்விட்டதே என்று நினைத்தபோதுதான் துக்கம் அவள் நெஞ்சை யடைத்துக் கொண்டு வந்தது.

அன்று காலை 'போஸ்ட்' என்ற குரல் கேட்டு வாசலுக்கு ஓடினுள் பங்கஜம். கடிதத்தைப் பிரித்து படித்த அவள் அடுத்த கணம், "ஐயோ!..." என்று வாய்விட்டலறி விட்டாள். அவள் கண்களிலிருந்து கண்ணீர் மடை திறந்த வெள்ளம் போல் பெருகியது. 'என்னவோ, ஏதோ!...' என்று மாடியிலிருந்து திகிலுடன் ஓடிவந்தாள் லீலா. பிரித்தவாறே கீழே கிடந்த கடிதத்தை எடுத்துப் படித்தாள் அவள்.

"...சீதாவுக்கு ஏழு மாதத்தில் குறைப் பிரசவமாகி ஆஸ்பத்திரியில் படுத்திருக்கிறுள். தேக நிலைமை ரொம்பவும் மோசமாக இருக்கிறது. ஆஸ்பத்திரியிலிருந்து நல்லபடியாக வந்ததும் நீங்கள் அவளைக் குறைந்தபட்சம் ஒரு மாதமாவது வைத்துக் கொண்டிருந்து, உடம்பைத் தேற்றி அனுப்பினுல்தான் அவளால் பழைய நிலைமைக்கு வர முடியும்......" என்று எழுதியிருந்தது.

சீதாவின் மாமனுர்தான் கடிதம் எழுதியிருந்தார். கடிதத்தைப் படித்து முடித்த லீலா, பங்கஜத்தை ஒரு கணம் திரும்பிப் பார்த்து விட்டு மாடிக்குச் சென்று விட்டாள். 'மன்னி சீதாவுக்காக ஏற்கெனவே செய்ததெல்லாம் போதாமல் இன்னும் அவளை இங்கேயே வேறு கொண்டு வந்து வைத்துக் கொண்டு உடம்பைத் தேற்றி யனுப்ப வேண்டுமாம். அண்ணுவுக்குத் தலையெழுத்து, இப்படியா இருக்க வேண்டும், யார் யாருக்கெல்லாமோ செய்ய வேண்டுமென்று!......' என்று எண்ணி எண்ணிக் கொதித்தது அவள் உள்ளம். அதே சமயத்தில், கீழே ஹாலில் உட்கார்ந்திருந்த பங்கஜத்தின் இருதயத்திலிருந்து நீண்ட பெருமூச்சொன்று வெளி வந்தது. லீலாவின் மாசற்ற அன்பைப் பெற எவ்வளவோ முயன்றும் அது தமக்குக் கிடைக்கவில்லையே! 'அழாதே' என்று ஒரு தேறுதல் வார்த்தை கூடச் சொல்ல முடியாமல் அவளுக்கு தம்மேல் வெறுப்பு ஏற்படும் படி நாம் என்ன செய்து விட்டோம்' என்று எண்ணிக் கலங்கிக் கண்ணீர் உகுத்தாள் பங்கஜம்.



சீதா சென்னைக்கு வந்து இரண்டு வாரங்கள் ஓடி விட்டன. அவள் அங்கு இருக்கும் வரை ஆகும் செலவுக்காகத் தன் கழுத்துச் சங்கிலியை வாசுதேவனிடம் கொடுத்துப் பாங்கியில் அடகு வைத்துப் பணம் வாங்கி வரச் சொல்லி யிருந்தாள் பங்கஜம். அது அவளுடைய தாயாரால் செய்து போடப் பட்ட நகையாதலால் லீலாவால் அதற்கு எவ்விதமான எதிர்ப்பும் சொல்ல முடியவில்லை.

பங்கஜத்தைப்போல் சீதாவும் லீலாவைச் சகோதரி

பாவத்தில் வைத்துத்தான் அன்பு செலுத்தி வந்தாள். ஆனால் அவளிடம் லீலா மேலுக்கு மிக்க அன்புடன் பழகிவந்தாள், உள்ளுக்குள் பயமாகத்தான் இருந்து வந்தாள்.

அன்று மாலை ஆபீஸிலிருந்து வந்த வாசுதேவன் உடைகளைக் களைந்து கொண்டிருந்தான். தயங்கித் தயங்கி அங்கு வந்து நின்றாள் லீலா.

"அண்ணா!..." என்று ஆரம்பித்தாள் அவள்.

"என்ன லீலா!..." என்று அன்புடன் கேட்டான் வாசுதேவன்.

"வந்து...மோகன்லால் கம்பெனியிலே புது மாதிரியிலே ஒரு சங்கிலி வந்திருக்கிறதாம்" என்று அவள் சொல்லி முடிப்பதற்குள் இடையில் குறுக்கிட்டான் வாசுதேவன்.

"உனக்கு அது மாதிரியிலே ஒன்று வாங்கித் தர வேண்டும்! அவ்வளவுதானே!... ஆகட்டும் பார்க்கலாம்" என்று சொன்னான் அவன் சிரித்துக்கொண்டே.

"'ஆகட்டும்' என்றால் எப்போவாம்!..."

"இன்னும் கொஞ்ச நாள் கழித்து என்று அர்த்தம்! இப்போ கையிலே பணமில்லே."

"ஆமாம்! மன்னி தன் தங்கைக்கு வளை பண்ண வேண்டும் என்றால், 'டாண்'ணு நடந்து விடுகிறது...அதற்கு மட்டும் எப்படியோ பணமும் கிடைத்து விடுமாம்."

"இதோ பார் லீலா!...அந்த வளைதான் காணாமற் போய்விட்டதே! அதைப் பற்றி இப்போ ஏன் பேச்சை யெடுக்கிறாய்! பொறுமைப் படுகிறாய்!"

அதற்கு மேல் பேச்சை வளர்த்த இஷ்டப்படாத லீலா முகத்தை 'உர்' ரென்று வைத்துக் கொண்டு சென்று விட்டாள்.

* * *

அந்தச் சம்பவம் நடந்து ஒரு வாரம் ஓடி விட்டது. மாடியறையில் உட்கார்ந்து பங்கஜமும், சீதாவும் ஏதோ தாழ்ந்த குரலில் பேசிக் கொண்டிருந்தனர். அடிமேல் அடிவைத்து அந்த அறை வாசலில் போய் நின்றாள் லீலா.

"ஆமாம், உனக்கு இன்னும் இரண்டு மாசத்திலே பண்ணிப் போட்டால் போதுமல்லவா! அதற்குள்ளே உனக்கும் உடம்பு நன்றாகத் தேறி விடும். பாங்கியிலே வைத்திருக்கிற என் சங்கிலியும் வந்துவிடும். அதிலே ஒரு வடத்தைப் பிரித்து உனக்கு இரண்டு ஜோடியாகவே பண்ணிப் போட்டு விடுகிறேன்" இது பங்கஜத்தின் குரல்.

லீலா பேச்சை உற்றுக் கவனித்தாள்.

"அதெல்லாம் சரி, அக்கா! ஆனால் இப்போ லீலாவுக்காக வாங்கி யிருக்கிற சங்கிலி என் கையிலே இருந்த ஒரு ஜோடி வளையலை விற்று வாங்கி யிருக்கிறோம் என்பது அவளுக்குத் தெரியவே கூடாது! அதுமட்டுமல்ல; அவள் அண்ணாவிடம் அன்றைக்குச் சங்கிலி வாங்கித்தரச் சொல்லி கேட்டதை நான் கேட்டதனால்தான் இந்த ஏற்



பாடு செய்ததாகவும் அவளுக்குத் தெரியக்கூடாது. ஒருத்தருக்கு நாம் நன்மை செய்யும்போது அவர்களுக்குத் தெரிந்து செய்வதைவிடத் தெரியாமல் செய்வதுதான் நல்லது' என்றாள் சீதா.

"எனக்கு நீ வேறு, லீலா வேறல்ல. உங்கள் சந்தோஷம் தான் எனக்கு எப்போதுமே மன நிம்மதியைக் கொடுக்கும். உங்களில் யார் ஒரு விஷயத்தில் மன வருத்தப்பட்டாலும் குறைப்பட்டாலும் அது என் உள்ளத்தை ரொம்பவும் பாதிக்கும். சீதா! இதை நீங்க இரண்டு பேரும் தெரிந்து கொள்ள வேணும் என்பதுதான் என் ஆசை!" என்று முடித்தாள் பங்கஜம்.

லீலாவின் நெஞ்சை ஏதோ ஒன்று பலமாக அழுத்தியது. மெள்ள உள்ளே எட்டிப் பார்த்தாள். சீதாவின் மாமியார் மற்றொரு ஜோடி வளையல் செய்து போட்டுக் கொண்டுதான் புக்ககம் வரவேண்டும் என்று கண்டிப்பாகச் சொல்லியிருக்கும் சமயத்தில் தன் கையிலிருந்த ஒரு ஜோடி வளையலையும் தன் ஆசைக்காக தனக்குச் சங்கிலி வாங்குவதற்காகக் கழற்றிக் கொடுத்து விட்டு வெறிச் சென்றிருக்கும் கரங்களுடன் நிற்கும் சீதாவின் தோற்றமும், சாந்தமே உருவாயிருக்கும் பங்கஜத்தின் தோற்றமும் லீலாவின் நெஞ்சை உலுக்கியது. கல்லினும் கடினமாக இருந்த அவள் உள்ளம் பாகாய்க் கரைந்தது. விடுவிடு வென்று மேலே ஓடினாள் அவள். சென்று பெட்டியைத் திறந்தாள். நடுங்கும் கரங்களுடன் அதிலிருந்து எதையோ எடுத்துக் கொண்டு மாடிக்கு ஓடி வந்தாள் லீலா.

"மன்னி, மன்னி" என்று கத்திக் கொண்டே ஓடி வந்த அவள், தான் எடுத்து வந்த அந்தப் பொருளைப் பங்கஜத்தின் கரங்களில் வைத்துவிட்டு அவள் காலில் விழுந்து நமஸ்காரம் செய்தாள்

"மன்னி! உங்களுடைய பெருந்தன்மையான குணத்தை அறியாமல் நான் எவ்வளவு பெரிய தப்பு செய்து விட்டேன், தெரியுமா! அன்றைக்குச் சீதாவுக்காக நீ வளையல் வாங்கி விட்டாயே என்ற ஆத்திரத்தில் வேண்டுமென்று தான் ஹாலில் வேலைக்காரி பெருக்குவதற்காக வந்ததைப் பார்த்தும் கூட, வளையலை எடுத்து வைக்காமல் மாடிக்குச் சென்று விட்டேன். பின்பு கொஞ்ச நேரம்



டாக்டர்:—ஸார், இப்பொழுது பணத்துக்கு அவசரமில்லை, ஸார்! நான் உங்களுக்கு ஆபரேஷன் செய்து நீங்கள் சொஸ்தமடைந்த பிறகு 'பில்' அனுப்புவேன். அப்பொழுது கொடுத்தால் போதும்!

அவர்:—நான் என் பையில் கைவிட்டுப் பணத்தை எண்ணியதைப் பார்த்து உங்களுக்குக் கொடுக்கப் போகிறேன் என்று நினைத்து விட்டீர்களா? இல்லை, இல்லை! நீங்கள் எனக்கு மயக்க மருந்து கொடுப்பதற்கு முன்னால் பணத்தை எண்ணி வைத்துக் கொள்வது நல்லது பாருங்கள்! அதற்காகத்தான் பார்த்துக் கொண்டேன்!

கழித்து வளையல் காணவில்லை என்று நாம் தேடிய பிறகு, எனக்குச் 'சட்'டென்று ஒரு சந்தேகம் தோன்றியது. நம் வீட்டு வேலைக்காரி அப்போது தான் வேலையை முடித்துக் கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தாள். மெள்ள அவள் பின்னாலேயே எங்கோ செல்பவள் போல் அவளுக்குத் தெரியாமல் சென்றேன். வேலைக்காரி அடிக்கடி பயத்துடன் சுற்று முற்றும் பார்த்துக் கொண்டு செல்வதைக் கண்டதும் என் சந்தேகம் இன்னும் வலுப்பட்டது. ஒரு சிறிய சந்தில் அவள் நுழைந்து சென்றவுடன் மெள்ளத் தன் இடுப்பில் எதையோ நன்றாகச் செருகிக் கொண்டாள் உடனே தடதட வென்று சென்று நான் அவள் கைகளை கெட்டியாகப் பிடித்துக் கொண்டேன். அவள், தான் யாருமில்லாத சமயமாக இருந்தால் வளையலை எடுத்து விட்டதாகக் கூறி என்னிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு வளையலைக் கொடுத்து விட்டாள்.

"வீட்டிற்கு வந்ததும் என் மனம் பெருத்த குழப்பத்தில் ஆழ்ந்தது. உன்னிடம் வளையலைக் கொடுத்துவிடுவதா வேண்டாமா என்பதைப் பற்றித்தான். கொடுத்தால் நீ அதைச் சீதாவுக்கு அனுப்பிவிடுவாயே என்ற வயிற்றெரிச்சல் என்னைப் பலமாக ஆட்டிவைத்தது. கடைசியில் ஒரு முடிவுக்கு வந்துவிட்டேன். வளையலை ஒசைப் படாமல் என் பெட்டியில் பத்திரமாக பூட்டி வைத்துக்கொண்டு விட்டேன். குமைந்து குமுறிக் கொண்டிருந்த என் உள்ளத்தைப் போலவே, அந்த வளையலும் யாருக்கும் பயன் படாமல் என் பெட்டியினுள் பதுங்கிக் கிடந்தது! மன்னி!...... கெட்ட எண்ணத்தினால் நான் செய்த அந்தக் காரியத்திற்கு எனக்குக் கிடைத்த தண்டனை போதும்! தன் கையிலிருந்த ஒரு ஜோடி வளையலையும் எனக்காகக் கழற்றிக் கொடுத்த சீதா ஒரு தெய்வப் பிறவி!......நான் தெரிந்து சீதாவுக்குத் தீமை செய்தேன்!......ஆனால் எனக்கு அவள் பதிலுக்கு நன்மையே செய்தாள்! நாங்கள் இருவரும் பெண்கள்தான்!......ஆனால் சீதாவின் பெருந்தன்மையில், விசால மனப் பான்மையில், தியாக சித்தத்தில் கால் பங்கு கூட எனக்கில்லை. என்னைக் கண் திறக்க வைத்த தெய்வங்கள் நீங்கள்தான்!......" என்று உணர்ச்சிப் பெருக்கினால் தழுதழுத்த குரலில் கூறி முடித்த லீலாவின் கண்கள் மாலை மாலையாகக் கண்ணீரைச் சிந்தின.

லீலா தன் கையில் கொடுத்த காகிதத்தைப் பிரித்தாள் பங்கஜம். புது மெருகுடன் கூடிய ஒரு ஜோடி தங்க வளையல்கள்—அவள் ஆசையுடன் சீதாவுக்கு வாங்கிய வளையல்கள்—அதில் மின்னிக் கொண்டிருந்தன. அதைக் கீழே வைத்து விட்டு லீலாவை ஆசையுடன் அணைத்துக் கொண்டாள் அவள்.

"லீலா! நீ இவ்வளவு நாட்களுக்குப் பிறகாவது நான் உன்னிடம் வைத்துள்ள அன்பை உணர்ந்தாயே என்று மிகுந்த சந்தோஷமடைகிறேன். தவறு செய்வது மனித குணம்தானே! இதற்காக இவ்வளவு வருத்தப்படுவார்களா! இந்தா! இதைப் போட்டுக் கொள்" என்று கூறி லீலாவுக்காகத் தானும், சீதாவும் வாங்கியிருந்த சங்கிலியை அன்புடன் அவள் கழுத்திலணிவித்தாள்.

சட்டென்று அவள் அணைப்பிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்ட லீலா, அந்த ஜோடி வளையல்களைச் சீதாவின் கரங்களைப் பரிவுடன் பிடித்து அவைகளில் அணிவித்தாள்.

சீதா, பங்கஜம், லீலா ஆகிய மூவர் உள்ளங்களிலும் மகிழ்ச்சி ஊற்றுப் பெருகி ஓடியது.

# சின்ன அண்ணன்

## நீதிபதி ஏ. எஸ். பி. அய்யர்



ஒரு பெரிய காடு இருந்தது. அந்தக் காட்டுக்குப் பக்கத்தில் ஜானகி என்று ஒரு அம்மாள் வசித்து வந்தாள். அந்த அம்மாளுக்கு ராமு என்று ஒரு பையன் இருந்தான். ராமுவுக்கு ஏழு வயது நிரம்பியவுடன் அவனை பள்ளிக்கூடத்துக்கு அனுப்ப வேண்டுமென்று நினைத்தாள். காட்டுக்கு அந்தப்புறம் கல்வி கேள்விகளில் சிறந்த ஒரு குரு நாதர் இருந்தார். பையனை அந்தக் குருவினிடம்தான் பாடம் கேட்க அனுப்ப வேண்டுமென்று தீர்மானித்தாள். ஜானகி தன் விருப்பத்தை ராமுவிடம் சொன்னதும் பையன் பயந்து போய்விட்டான். "அம்மா! நான் எப்படி இந்தக் காட்டைக் கடந்து செல்வேன். எனக்குத் துணையாக நீ தினமும் வருவாயா, அம்மா?" என்று கேட்டான்.



"நான் வரமாட்டேன், கண்ணு! நீ தனியாகத்தான் போகவேண்டியிருக்கும். நான் உன்னுடன் வந்துவிட்டால் இந்த வீட்டு வேலைகளை யார் கவனித்துக் கொள்வார்கள்? யார் நமக்குச் சம்பாதித்துப் போடுவார்கள்? ஆனால் காட்டில் உனக்கு ஒரு சின்ன அண்ணன் இருக்கிறான். உனக்குப் பயமாக இருக்கும் போது, 'சின்ன அண்ணா' என்று கூப்பிட்டாயானால் அவன் உனக்குத் துணையாக வருவான்" என்றாள் தாயார்.

"அந்தச் சின்ன அண்ணா ஏன் அம்மா எப்போதும் காட்டிலேயே இருக்கிறான்?" என்று கேட்டான் ராமு.

"ஏனென்றால் அவனுக்குக் காட்டிலேதான் இருக்கவேணும் போலே இருக்கிறதாம். அதனாலேதான் அங்கேயே இருக்கிறான். நீ போய், அவனை இந்த விஷயத்தைப் பற்றிக் கேட்டு வைக்காதே! பிறகு அவன் நீ கூப்பிட்ட குரலுக்கு வராமற் போனாலும் போய் விடுவான்" என்று எச்சரிக்கை செய்தாள் அவன் தாயார்.



ராமன் பள்ளிக்கூடம் போகப் புறப்பட்டான். அவன் காட்டுக்குள் அடியெடுத்து வைத்ததும் அவன் மனசு திக்திக் என்று அடித்துக் கொண்டது. உடனே 'சின்ன அண்ணா! சின்ன அண்ணா!' என்று உரத்த குரலில் கூப்பிட்டான். பதினாறு வயதுச் சிறுவன் ஒருவன் கையில் புல்லாங்குழலுடன் வந்து, "உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டான்.

"இந்தக் காட்டைக் கடந்து, அப்பாலுள்ள பள்ளிக்கூடத்துக்குப் போக வேண்டும். நான் பள்ளிக்கூடம் போய்ச் சேரும் வரை எனக்கு நீ துணை வரவேண்டும்" என்றான் ராமு.

"சரி" என்று கூறி ராமுவுடன் புல்லாங்குழல் வாசித்துக் கொண்டே காடு முழுதும் நடந்து சென்றான். ராமு காட்டைக் கடந்ததும், அவனுடைய சின்ன அண்ணன் மறைந்து விட்டான். ராமு பள்ளிக்கூடத்துக்குப் போனான். குருவும் அவனைத் தம் மாணவனாக ஏற்றுக் கொண்டார்.

குரு ராமுவினிடம் ஒரு கேள்வி கேட்டு வைத்தார். "குழந்தை, நீ எப்படியப்பா தனியாகக் காட்டைக் கடந்து வந்தாய்?" என்று கேட்டார்.

"இல்லையே, நான் தனியாக வரவில்லை! காட்டுப் பாதை முழுதும் என் சின்ன அண்ணன் எனக்குத் துணை வந்தானே?" என்று கூறினான் ராமு.

"அவன் என்ன செய்கிறான்?" என்று கேட்டார் குரு.

"அவன் காட்டில்தான் வசிக்கிறான்; மாட்டை மேய்க்கிறான்" என்றான் ராமு.

"ஓகோ. அப்படியா சமாசாரம்" என்று கேட்டுப் பெரிதும் வியந்தார் குருநாதர்.

அதற்குப் பிறகு தினம் ராமு பள்ளிக்கூடம் போகலானான். அவனுடைய சின்ன அண்ண

னும், காட்டுப் பாதை முடியுமட்டும் ராமுவுக்குத் துணையாக வந்து கொண்டிருந்தான்.

இப்படி நாட்கள் சென்று கொண்டிருந்தன. ஒருநாள் குருவினுடைய பெண்ணுக்குக் கல்யாணம் நடக்கப் போகிறது என்று அறிவிக்கப்பட்டது. கல்யாணத்தில் குருவின் புதல்விக்கு ஒவ்வொரு மாணவனும் ஏதாகிலும் பரிசு கொடுக்க வேண்டும் என்று விரும்பினான். ஆகவே, அன்று மாலை அவன் தன் தாயார் ஜானகியினிடம் போய், "அம்மா! என் குருநாதரின் பெண்ணுக்குக் கல்யாணமாம். என் வகுப்பில் படிக்கும் மாணவன் ஒவ்வொருவனும் மணப் பெண்ணுக்குப் பரிசளிக்கப் போகிறான். நீ ஏதாகிலும் கொடுத்தால், அதை மணப் பெண்ணுக்குக் கொடுத்து குருவினிடம் எனக்குள்ள மதிப்பும் மரியாதையையும் காண்பித்துக் கொள்வேன்" என்றான்.

ஜானகி சொன்னாள்: "அப்பா, குழந்தை! நான் பரம ஏழை; என்னிடம் கொடுக்க என்ன இருக்கிறது? ஒன்றுமே இல்லை. நீ காட்டிலுள்ள உன் சின்ன அண்ணனிடம் கேள். அவன் உனக்கு ஏதாகிலும் பரிசுப் பொருள் கொடுப்பான்."

"சரி, அவனையே கேட்கிறேன்" என்று கூறினான் ராமு.

மறுநாள் ராமு காட்டுக்குப் போனதும், அவனுடன் சின்ன அண்ணன் வந்து சேர்ந்து கொண்டான். ராமு தன் குருவின் புதல்விக்குக் கல்யாணம் வருகிற விஷயத்தைக் கூறி அவளுக்குப் பரிசு வழங்கத் தான் விரும்புவதாகவும் அதற்கு ஏதாகிலும் பரிசுப் பொருள் கொடுக்கும்படியும் கேட்டான். சின்ன அண்ணன், ஒரு கொட்டாங்கச்சி நிறையப் பாலைக் கொடுத்து, "இதை உன் குருவுக்குக் கொடு" என்றான். ராமு அதை வாங்கிக் கொள்ளச் சற்றும் கூச்சப்படவில்லை. இந்த உதவி செய்ததற்காக நன்றி செலுத்தி விட்டு, அதைக் கையில் ஏந்திக் கொண்டு குருகுலத்துக்குச் சென்றான்.

அவன் குருகுலத்தை அடைவதற்கும் முகூர்த்த நேரம் நெருங்குவதற்கும் சரியாக இருந்தது. முகூர்த்தப் பந்தலில் மணமகனும் மணமகளும் மற்ற பந்துக்களும் உறவினர்களும் கூடியிருந்தனர். ராமுவுடன் படித்த மற்றப் பையன்கள் யாவரும் விலையுயர்ந்த பண்டங்களாகப் பரிசு கொடுத்தனர். அவர்களில் ஒருவன் ராஜகுமாரன். அவன் தங்கச் சங்கிலியைக் கொடுத்தான். மற்றொருவன் பெரிய வியாபாரியின் மகன். அவன் ஒரு விலை மதிப்பற்ற முத்து மாலையைப் பரிசளித்தான். வேறொருவன், ஒரு வண்டி பூசணிக்காயைக் கொடுத்தான். மற்றொருவன் குடம் குடமாகத் தயிர் கொடுத்தான். இப்படிப் பலப் பல பரிசுகள் வந்து குவிந்தன. இவற்றையெல்லாம் பார்த்து ராமு, தான் கொண்டு வந்திருக்கும் பரிசு எவ்வளவு அற்பமானது என்று நினைத்துச் சற்றும் கூச்சப் படவில்லை.

"இது என்னப்பா, குழந்தை?" என்று குரு அன்புடன் கேட்டார்.

"இதுதான் நான் கொடுக்கப் போகும் பரிசு" என்றான் ராமு.

அந்தப் பெரியவர் சிரித்தார். "ரொம்ப சந்தோஷம்" என்று ராமுவுக்குச் சொல்லிவிட்டு, அங்கிருந்தவர்களிடம், "அவனுடைய தாயார் பரம ஏழை. அவனால் இதைவிட உயர்ந்த பரிசு ஒன்றும் கொடுத்துவிட முடியாது" என்று காதோடு காதாகச் சொன்னார்.

பின்னர் அவருடைய ஆட்களில் ஒருவனைக் கூப்பிட்டு, "இந்தா, இந்தப் பாலை, பால் பாத்திரத்தில் கொண்டு போய்ச் சேர்த்துவிடு. அன்புடன் கொடுக்கப்படும் எந்தப் பொருளையும் அலட்சியம் செய்யக் கூடாது!" என்றார்.

அந்த வேலைக்காரன், ராமு கொண்டுவந்து கொடுத்த பரிசைப் பற்றி எள்ளி நகையாட வேண்டுமென்று, காலி கங்காளத்தில் அந்தக் கொட்டாங்கச்சிப் பாலைக் கொட்டினான். ஆனால் என்ன அதிசயம்! கொட்டாங்கச்சியிலிருந்து பால் ஓயாமல் ஊற்றிக் கொண்டேயிருந்தது. இதைக்கண்டு எல்லோரும் வியப்புற்று நின்றனர்.

குரு ராமுவைப் பார்த்து, "குழந்தை பாலோடுகூடிய இந்தக் கொட்டாங்கச்சியை யாரப்பா உனக்குக் கொடுத்தார்கள்?" என்று மிகுந்த அன்புடன் கேட்டார்.

"காட்டில் மாடுமேய்த்து, குழல் ஊதிவரும் என் சின்ன அண்ணன் தான் கொடுத்தான்."

"அவன் பெயர் என்ன?"

"எனக்குத் தெரியாதே! அவன் எங்கள் வீட்டுக்கே வருவதில்லை" என்றான்.

'அப்படியானால் அவன் அந்தக் கண்ணபிரானாகத்தான் இருக்க வேண்டும். நான்



இத்தனை யாண்டுகள் ஆசார சீலனாக இருந்து கண்ணனை வழிபட்டு வந்திருக்கிறேன் ஒரு நாளாகிலும் எனக்குக் கண்ணனின் தரிசனம் கிட்டவில்லை. ஆனால் இந்தக் குழந்தைக்குத் தினந்தோறும் கிட்டியிருக்கிறது' என்று நினைத்து "குழந்தை! அவன் எங்கேயிருக்கிறான்? எனக்கு அவனைக் காட்ட முடியுமா?" என்று கேட்டார் குரு.

"கட்டாயம் காண்பிக்கிறேன். நீங்கள் என்னுடன் வாருங்கள்" என்றான்.

குரு அவனைப் பின் தொடர்ந்து சென்றார். கல்யாணத்திற்கு வந்திருந்தவர்கள் அனைவரும் சென்றனர். அவர்கள் காட்டை அடைந்தவுடன் ராமு, "சின்ன அண்ணா! சின்ன அண்ணா!" என்று இரைந்து கூப்பிட்டான். யாரையும் காணவில்லை. மறுபடியும் "சின்ன அண்ணா! சின்ன அண்ணா! நீ எங்கே இருக்கிறாய்? நான்தான் ராமு கூப்பிடுகிறேன். வா, அண்ணா!" என்று கூவினான். அவன் கண்களில் மாலை மாலையாக் கண்ணீர் பொழியத் தொடங்கி விட்டது.

அப்பொழுது வெகு தூரத்திலிருந்து ஒரு அசரீரி கேட்டது. "தீனர்களும், ஏழைகளும் எளியவர்களும், பக்தி கொண்டவர்களும் கூப்பிடும்போதுதான் நான் வருவேன். கும்பலாகக் கூடி நின்று என்னை வேடிக்கைப் பொருளாக மதித்துப் பார்க்க விரும்புகிறவர்களிடம் எவ்வளவு அழைத்தாலும் வருவதில்லை. இன்று வரை நீ கபடு சூது அறியாத பாலகனாக இருந்தாய். உண்மையிலேயே நான் உன் அண்ணன் என்று நம்பினாய். அதனால் வந்தேன்; மனித சரீரம் எடுத்து உன்னுடன் விளையாடினேன். இனிமேல் அந்தக் காரியம் நடைபெறாது. இனி உன் சின்ன அண்ணனை நீ பார்க்க முடியாது."

# பிச்சைக்காரன்

ஒரு நாள் நான் தெருவின் குறுக்கே நடந்து சென்று கொண்டிருந்தேன். அப்போது உடல் தளர்ந்த கிழப் பிச்சைக்காரன் ஒருவன் என்னைத் தடுத்து நிறுத்தினான்.

அவன் கண்கள் சிவந்திருந்தன. உதடுகள் நீலம் பாய்ந்திருந்தன; உடை அழுக்கு மலிந்து கிழிந்து கிடந்தது.

வறுமைதான் அவனை என்ன பாடுபடுத்தி அவன் உருவத்தையேமாற்றிவிட்டிருக்கிறது!

அவன் தன்னுடைய அழுக்குப் படிந்த கையை என் முன் நீட்டினான்.

அவன் நோயின் காரணமாக முனகிக் கொண்டிருந்தான்; யாராவது உதவ மாட்டார்களா என்று ஏங்கிக் கொண்டிருந்தான்.

ஏதாகிலும் கொடுக்கலாம் என்று என் சட்டைப் பைகளைத் துழாவினேன்......பர்ஸ் காணவில்லை; கடியாரத்தைக் காணவில்லை; என் கைக் குட்டையைக்கூடக் காணவில்லை... ஆம், என்னிடம் ஒன்றுமே இருக்கவில்லை.

ஆயினும் அந்தப் பிச்சைக்காரன் இன்னும் நின்று கொண்டேதான் இருந்தான், நடுங்கும் தன் கரங்களை நீட்டியபடியே.

எனக்கு வெட்கமாகப் போய் விட்டது. என்ன செய்வது ஒன்றும் புரியவில்லை. இருப்பினும் அவனுடைய கரங்களை அழுத்திப் பிடித்துக் கொண்டு, "ஐயா, தவறாக நினைத்துக் கொள்ளாதே! உனக்குக் கொடுப்பதற்கு என்னிடம் தற்சமயம் ஒன்றுமே இல்லை என்பதை நினைக்க எனக்கு மிகவும் வருத்தமாக இருக்கிறது" என்றேன்.

அந்தப் பிச்சைக்காரன் தனது சிவந்த கண்களால் என்னையே பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய நீலம் பாய்ந்த உதடுகள் புன்முறுவல் புரிந்தன. அவன் கைகள் என்னுடைய சில்லிட்டுப் போன விரல்களை அழுத்திப் பிடித்தன.

"ஐயா" என்று அவனுடைய கனத்த குரலில் சொல்லத் தொடங்கினான்: "இவ்வளவு சொன்னீர்களே, இதற்கு என் மனமார்ந்த நன்றி. இவ்வளவு சொன்னதுகூடத்தான் நீங்கள் எனக்கிட்ட பிச்சை!"

பிறகுதான் நான் கூட என் சகோதரனிடமிருந்து பிச்சை பெற்றுக் கொண்டேன் என்பதை உணர்ந்தேன். ஐவான் துர்கனீவ்






ஸ்ரீதரம் குருஸ்வாமி

சாரதியின் கடிதத்தைப் பார்த்ததும் காமுவுக்குக் கோபம் பொங்கி வந்தது. இத்தனை நாள் தன்னை அலட்சியம் செய்தவர்கள் இப்போது தன்னை அவமானம் செய்ய விரும்புவதாகவே அவள் நினைத்தாள். சாரதியின் வீட்டிற்குத் தான் போகப் போவதில்லை. அவன் கடிதத்திற்கும் பதில் போடப் போவதில்லை என்றே அவள் தீர்மானித்தாள்.

சாரதியைக் காமு நேரில் பார்த்ததில்லை. அவனையும் அவன் தாயாரையும் பற்றிப் பொதுவாகப் பந்துக்கள் சொல்லித்தான் அவளுக்குத் தெரியும். தங்களுக்குப் பணம் இருக்கிறது என்ற மமதையினால் அல்லவா இத்தனை நாள் அவர்கள் காமுவையும் அவள் தகப்பனாரையும் தங்கள் வாசல்படி ஏறவிடவில்லை! அவள் தகப்பனாருடைய கால் தூசு பெறுமா அவர்களுடைய பணம் அத்தனையும்? தன் தகப்பனாருடைய வறுமை நிலையைப் பரிகசிப்பதற்காகவே இப்போது அவர்கள் தன்னை அங்கே வரச் சொல்லி அழைப்பதாக அவள் மனசுக்குப் பட்டது.

தன் தகப்பனாரின் புலமையையும் அவர் வாழ்க்கை ஆரம்பித்த விதத்தையும் காமு எண்ணிப் பார்த்தாள். அவளுடைய கோபத்தின் நடுவில் ஒரு கர்வமும் மகிழ்ச்சியும் இப்போது கலந்து தோன்றியது.

ஸம்ஸ்கிருத காலேஜில் படித்துத் தேறியதும் சென்னையிலேயே ஒரு கல்லூரியில் ஒரு வருஷம் ஸம்ஸ்கிருத ஆசிரியராக இருக்க நேர்ந்தது காமுவின் தகப்பனாருக்கு. ஸீனியர் இண்டர் மீடியட் வகுப்புக்குக் "குமார சம்பவம்" அவர் பாடம் சொல்லிக் கொடுத்தார். வயதில் இளைஞர்; இலக்கியத்தில் தன்னை மறந்து ஈடுபடும் பருவம் அது. இலக்கணத்தையும் பரீக்ஷைக்கு வரக்கூடிய கேள்விகளையும் பற்றி அவர் கவலைப்பட்டதாகவே தெரியவில்லை. ஒப்புயர்வற்ற ஒரு காவியமாகவே அவர் அந்த நூலைப் பாடம் சொல்லி வந்தார்! அதனால் என்ன? மாணவர்களும் பரீக்ஷையை யெல்லாம் மறந்தார்கள்; கவியின் கற்பனையையே ரஸித்தார்கள். ஈடு இணையற்ற அழகுடன் கூடிய ஒரு உலகத்தில் சஞ்சரிக்கலானார்கள். ஒவ்வொரு நாளும் நடந்த பாடப் பகுதியைப் பற்றி மாணவர்கள் தங்களுக்குள்ளேயே சர்ச்சை செய்தார்கள். அவர்கள் தங்கிய ஹாஸ்டலிலும் வீடுகளிலும் இதே பேச்சுத்தான். மற்ற வகுப்புகளைச் சேர்ந்த மாணவர்களிடையிலும் இந்த நூலின் சொல் நயம் பொருள் நயங்கள் எல்லாம் அவர்கள் மூலம் பிரசாரம் ஆகி வந்தன.

தன்னை மறந்து கவியின் கற்பனை உலகத்துக்குள் மாணவர்களை அழைத்துச் செல்வதற்கு ஒரு தனித்திறமை வேண்டும். எல்லோருக்கும் அந்தத் திறமை அமைந்து விடுவதில்லை. திறமை இருப்பது நல்லது. ஆனால் அந்தத் திறமையிலும் ஒரு ஆபத்து உண்டு.

நாடகம் நன்றாக நடிக்கப்படும் போது நாம் நடிகர்களைக் கூர்ந்து கவனிக்கிறோம். வேஷப் பொருத்தமும் இருந்து நடிப்பும் திருப்தியாக அமைந்து விட்டால், நம் கற்பனை சிறகு விரித்துப் பறந்து செல்கிறது. இடத்தின் மாறுபாடும் காலத்தின் மாறுபாடும் கணநேரத்தில் மறைய, பிற தேசங்களையும் நூற்றாண்டுகளையும் நாம் தாண்டி விடுகிறோம்.

வாரத்தில் மூன்று நாள் மூன்று மணி நேரம் தான். ஆனால் அந்த மூன்று மணி நேரத்தை எண்ணியே மற்றைப் பொழுதை யெல்லாம் கழித்து வந்தார்கள் மாணவர்கள்.

நாடகத்தில் நடிப்பது சிரமந்தான். நடிகன் தன்னை மறந்து தான் நடிக்கும் பாத்திரத்தோடு கலந்து தன் மயமாகி விட வேண்டும். நாடகத்தின் ஆரம்பத்தில் இவன் இன்ன பெயர் கொண்ட நடிகன் என்ற எண்ணம் தான் நாடகம் பார்ப்பவர்கள் மனசில் இருக்கும். காட்சிகள் ஒன்றன்பின் ஒன்றாக உருவாகி நாடகம் முடியும் தறுவாயில், நடிகன் என்ற எண்ணம் மறைகிறது. அவன் ஏற்று நடிக்கும் பாத்திரமே அவன் என்ற உணர்ச்சி உறுதியாக நிலை நிற்கிறது.

ஆனால் ஆசிரியர் அப்படி ஒரே ஒரு பாத்திரத்தோடு ஒன்றிப் போவதில்லை. காவியத்திலும் நாடகத்திலும் தோன்றும் ஒவ்வொரு




“நான் உங்களுக்கு அனுப்பி வைத்த ‘செக்’ வந்து சேர்ந்ததா?”

“ஆகா! இரண்டு தடவை வந்தது.”

“என்ன, இரண்டு தடவையா?”

“ஆமாம், ஸார்! உங்களிடமிருந்து ஒரு தடவை வந்தது. பிறகு பாங்குக்கு அனுப்பியதில் திரும்பி என்னிடமே வந்து விட்டது!”

பாத்திரமாகவும் ஒன்றன் பின் ஒன்றாக முறையே அவர் தன்மயமாகினார்! உணர்ச்சியுடன் இலக்கியத்தைப் போதிப்பது, நாடகத்தில் நடிப்பதைவிட எத்தனை மடங்கு சிரமம்! இருந்தாலும் இளமை, அழகு, தேஜஸ்—மூன்றும் நிறைந்த சிவபிரானாகவே இந்த ஆசிரியர் அவருடைய மாணவர்கள் மனதில் உருவகமாகி வந்தார். அந்த மாணவர்களுக்கு மத்தியில் கமலா ஒரு தனிப் பிறவி. அவளுக்குக் குமார சம்பவம் பாடம் கேட்பதில் இணையற்ற ஆர்வம் இருந்தது. அந்த ஆர்வ மிகுதியில் அவருக்குப் பணிவிடை புரியும், கன்னி பார்வதியாகவே தன்னைக் கற்பனை செய்து கொண்டாள் மாணவி கமலா!

முந்திய தலைமுறையில் தன் பாட்டனார் வக்கீல் தொழில் செய்து சம்பாதித்த செல்வம், பங்களா, தோட்டம், கிராமத்தில் சில நிலங்கள், பாங்கில் பணம், அத்தனையும் துறந்து, தன் பெற்றோர்களால் கைவிடப்பட்டு, ஆசிரியரைக் கைப்பிடிக்கும் அளவுக்குக் கொண்டு வந்து விட்டது கமலாவின் லட்சியக் காதல்.

எட்டே வருஷம் தான் அந்த இன்ப வாழ்க்கை நடந்தது.

காமுவுக்குத் தன் தாயார் கமலாவின் முகம் நன்றாக நினைவில்லை. இருந்தாலும் கமலாவை அப்படியே உரித்து வைத்திருப்பதாகப் பிறர் சொல்வதிலிருந்து, தன் தாயின் சாயல், முக வெட்டு, எப்படி இருந்திருக்கும் என்று அவள் மேலும் ஊகித்திருந்தாள்.

வெளியூரில் வந்து ஆசிரியர் வாழ்க்கையே மீண்டும் துவக்கிய தந்தைக்கு, தன் மனைவியின் பிரிவிற்குப் பின், உடல் நலம் கெட்டது. உத்தியோகத்தைத் தொடர்ந்து வகிக்க முடியவில்லை. சிரம ஜீவனம்தான். தினம் இரவு எட்டு மணி முதல் பத்து மணி வரை பஜனை மடத்தில் ராமாயணம் வாசித்து விளக்கம் சொல்லி வந்தார். காமு வீட்டுக் காரியங்களைக் கவனித்து விட்டுப் பிறகு பள்ளிக்கூடம் போய் வந்தாள். ஒழிந்த நேரத்தில் தகப்பனாருடன் உட்கார்ந்து கம்பன், காளிதாசன், வால்மீகி முதலியவற்றைப் படித்துச் சுவைத்தாள். தன் தந்தை இலக்கியங்களுக்கு விளக்கம் சொல்லி வரும்போது அவர் பாதங்களை அப்படியே கண்ணில் ஒற்றிக் கொள்ளலாம் போல் இருக்கும் காமுவுக்கு!

நாலாவது பாரத்துடன் படிப்பை நிறுத்தி, பள்ளிக்கூட ஆசிரியை ஆவதற்காகப் பயிற்சியும் முடிந்து, காமு இந்த வருஷம் வேலையும் ஒப்புக் கொண்டு விட்டாள்.

“உன்னை என்னிடமிருந்து பிரிக்க மறுபடியும் சூழ்ச்சி செய்கிறாளா உன் மாமி?” என்று கேட்டார் காமுவின் தந்தை, சென்னையிலிருந்து வந்த கடிதத்தைப் பார்த்ததும், “உன் அம்மா செத்துப்போன வருஷம் இப்படித்தான் ஒரு கடிதம் வந்தது. உன்னை அங்கே படிக்க வைத்து நல்ல இடத்தில் கல்யாணமும் செய்து வைப்பதாக அப்போது எழுதியிருந்தாள். இப்போது எனக்குத் தள்ளாமையாக இருக்கும்போது, மறுபடியும் உன்னைத் தன்னோடு சேர்த்துக் கொண்டு விடலாம் என்பது அவள் எண்ணம்” என்றார் அவர்.

“நான் என்றைக்கும் உங்களை விட்டுப் பிரியமாட்டேன், அப்பா!” என்று கண்களில் நீர் ததும்பக் காமு பதில் சொன்னாள்.

“நன்றாக நினைத்துப்பார், காமு. அங்கே உன் மாமாவின் அகத்தில் கஷ்டப்பட்டு வேலை எதுவும் நீ செய்ய வேண்டியதில்லை. ராஜபோகமாக இருக்கலாம். நினைத்ததைச் செய்ய வேலைக்காரர்கள் கையைக் கட்டிக் கொண்டு காத்திருப்பார்கள். ஆனால்— ஆனால்...” அதற்கு மேல் அன்று அவரால் பேச முடியவில்லை.

காவிய உலகில் நினைத்து அனுபவித்த லட்சிய இன்பத்தை யெல்லாம் தன் தாய் மாமன் வீட்டில் காமு காண முடியாது; அங்கே செல்வமும், செல்வத்தால் வரும் குறுகிய நோக்கங்களும்தான் உண்டு என்பது அவருடைய தீர்மானம்.

தான் நினைத்தபடி சாரதியின் கடிதத்துக்குப் பதில் கூட எழுத வேண்டாம் என்ற முடிவே தன் தகப்பனாரும் செய்து விட்டார் என்று எண்ணிச் சந்தோஷப் பட்டாள் காமு.

ஆனால், நவராத்திரி விடுமுறைக்கு முதல் நாள் அவர் சொன்னது காமுவுக்கு ஆச்சரியமாக இருந்தது.

“நீ, எதற்கும் பட்டணத்துக்குப் போய் விட்டு வா காமு. அதுவும் ஒரு விஷயத்துக்கு நல்லதுதான். அவர்களைப் பார்த்துச் சுடச்சுட இரண்டு வார்த்தை சொல்லி விட்டு வந்தாயானால்தான் என் மனசுக்கு ஆறுதல் பிறக்கும். அவர்களுடைய செல்வத்தை நாம் லட்சியம் செய்யவில்லை என்று அவர்

களுக்குத் தெரியவரும். வாழ்க்கையில் ஏழையாக இருந்தாலும் சிந்தனையில் நாம் உயர்ந்தவர்கள் என்று அவர்கள் உணரட்டும்" என்று அவர் சொன்னபோது அதுவும் ஒரு விதத்தில் சரிதானோ என்று காமு யோசிக்கலானாள். யோசனையின் முடிவில் அது சரி என்றே தோன்றியது. உடனே அவள் சென்னைக்குப் புறப்பட்டு விட்டாள்.

எழும்பூர் ஸ்டேஷனில் தன்னை அழைத்துப்போகப் பளபளப்பான சின்ன மோட்டாருடன் வந்திருந்த இளைஞனைக் கண்டதும் காமுவுக்குத் 'திக்'கென்றது.

ஒரு நாள் தான் வேலை செய்து வந்த பள்ளிக் கூடத்தைச் சேர்ந்த கல்லூரியில் ஐரோப்பா சென்று திரும்பிய ஒருவர் தமது அனுபவத்தை விவரிக்கிறார் என்பதைக் கேள்விப் பட்டுக் காமுவும் அவள் தோழி சரோஜாவும் வேடிக்கை பார்க்கச் சற்று நேரம் அங்கே சென்றிருந்தார்கள். கதவு ஓரத்தில் அவர்கள் நின்றபடி மேடையைக் கவனித்தார்கள். கல்லூரித் தலைவர் நின்று பேசிக் கொண்டிருந்தார். அவர் பக்கத்தில் ஒரு இளைஞர் அமர்ந்திருந்தார். அவரை உற்றுக் கவனித்த சரோஜா, காமுவின் தோளைப் பிடித்துக் கொண்டு அவரை அவளுக்குச் சுட்டிக் காட்டினாள்.

"அதோ, அவரைப் பார்த்தாயாடி, காமு? உனக்கு ஆண் வேஷம் போட்டால் அசல் அவர் மாதிரியேதானடி இருக்கும்!" என்று அவள் சொல்லிக் 'களுக்'கென்று சிரித்தாள்.

அந்த இளைஞரும் இந்தப் பக்கம் திரும்பினார். முதலில் எதையோ ஆழ்ந்து யோசிப்பவர்போல் காணப்பட்டார். பிறகு பக்கத்தில் இருந்த ஒரு ஆசிரியரைக் கூப்பிட்டு ஏதோ அவர் கேட்டதும் பிறகு கதவண்டை நின்ற ஆசிரியைகளைப் பார்த்துவிட்டு அந்த ஆசிரியர் ஏதோ பதில் சொன்னதும் இப்போது காமுவுக்கு நினைவு வந்தது.

அந்த இளைஞர்தானா இந்தச் சாரதி! அவரால்தானா தனக்கு இந்த வீட்டிற்கு இப்போது அழைப்பு!

"அம்மா, கமலா! நீயே திரும்பி வந்தாயா? என் மேல் உனக்குள்ள கோபம் தீர்ந்ததா?" என்று கேட்டுக்கொண்டே மாமி காமுவை வரவேற்றாள். பதினெட்டு வருஷங்களுக்கு முன் தன்னை விட்டுப் பிரிந்த கமலாவை வரவேற்பதாகவே அவள் பாவித்துக் காமுவை உபசரித்தாள். மனம் கலங்கிக் கண்ணீர் விட்டு அவளைத் தழுவிக் கொண்டாள்.

தானும் கமலாவும் அந்தக் காலத்தில் பேசியது, விளையாடியது, எல்லாவற்றையும் மாமி விவரித்தாள். அவளுடைய சுபாவத்திலிருந்த இனிமையும் கலகலப்பும் அவளுடைய கள்ளம் கபடமற்ற பேச்சும் காமு மனத்தில் ஏதோ ஒரு கலக்கத்தை உண்டாக்கத்தான் செய்தன. மோட்டாரில் வரும்போது சாரதி அவளுடன் அதிகம் பேசாவிட்டாலும், இப்போது சிரித்த முகத்துடன் ஏதேனும் அவ்வப்போது சொல்லி வந்தான். மற்ற சிநேகிதிகள் இரண்டொருவரோடு காமுவையும் சேர்த்துப் பல இடங்களுக்கு அவன் அழைத்துக் கொண்டுபோய்க் காண்பித்தான். முன்பு ஒரு சமயம், காமு உபாத்தியாயினியாயிருந்த பள்ளிக்கூடத்தைச் சேர்ந்த கல்லூரியில் ஐரோப்பிய அனுபவத்தைப் பற்றிப் பிரசங்கம் செய்தது சாரதிதான் என்று அவன் கூறக் கேட்டு அவள் சந்தோஷமடைந்தாள். முதலில் கல்லூரியில் அவளைப் பார்க்க நேர்ந்த வகையையும் அவள் இன்னாரென்று தான் விசாரித்துத் தெரிந்துகொண்ட விதத்தையும் அவன் ஒப்புக் கொண்டான். அவர்கள் தன் தந்தையிடமிருந்து தன்னைப் பிரிக்கச் சூழ்ச்சி செய்கிறவர்கள்—என்று காமுவால் நம்ப முடியவில்லை. இருந்தாலும் தன் தகப்பனுக்குத் தான் கொடுத்தவாக்கை அவள் நினைத்துக் கொண்டாள்; தன் மனசைக் கல்லாக்கிக் கொண்டாள்.

அன்பும் ஆதரவும் நிறைந்த நாட்கள் பறந்தோடின. காமு ஊருக்குப் புறப்பட்டாள். காமுவை ரயில் ஏற்றிவிடச் சாரதி ஸ்டேஷனுக்கு வந்தான்.

"காமு! நான் பார்த்துப் பழகிய பெண்களுக்குக் கணக்கே இல்லை. ஆனால் ஒவ்



''ஸ்நானம் பண்ணப் போய் மழை வந்து தொலைந்தது!''

வொருத்தியும் ஏதோ வகையில் எனக்கு அன்னியமாகவே பட்டு வந்திருக்கிறாள். உன் மேல் ஏற்பட்ட பாசம் யார்மேலும் எனக்கு ஏற்பட்டதில்லை. உன்னை நான் பார்க்கும் போது என்னையே நான் நிலைக்கண்ணாடியில் பார்த்துக் கொள்வது போல் எனக்கொரு பிரமை ஏற்படுகிறது. என்னுடைய அந்த ராத்மா தான் நீ. உன்னை நான் கல்யாணம் செய்து கொள்ளலாமா என்று அம்மாவைக் கேட்டபோது அம்மாவுக்கு வந்த சந்தோஷம் சொல்லி முடியாது'' என்றான் சாரதி.

காமு பல முறை தனக்குத்தானே சொல்லிச் 'சாதகம்' செய்து வைத்திருந்த பதிலை அவனிடம் இப்போது ஒப்பித்தாள். ''எங்கள் வாழ்க்கையும் போக்கும் வேறு; உங்கள் வாழ்க்கையும் போக்கும் வேறு. நீங்கள் அதில் ஒன்றும் குறுக்கிட வேண்டாம். என் தகப்பனாருக்கு நான் துரோகம் செய்ய மாட்டேன். இதுதான் என் முடிவான பதில். நாளைக்கு நீங்கள் கடிதம் எழுதினாலும் அதைப் பிரித்துக்கூடப் பார்க்க மாட்டேன்!'' என்று அவள் சொல்லி முடித்தாள்.

''உன் தகப்பனாருக்கு நீ எவ்விதத் துரோகமும் செய்ய வேண்டாம், காமு! இன்றைக்கில்லாவிட்டால் என்றைக்காவது என் மீது உனக்கு நல்ல அபிப்பிராயம் ஏற்படலாம். அதுவே என் நம்பிக்கை!'' என்று சாரதி சொல்லி முடிக்கும்போது ரயில் ஸ்டேஷனிலிருந்து புறப்பட்டு விட்டது.

நவராத்திரி விடுமுறை இவ்விதம் கழிந்தது. தீபாவளியும் வந்து போயிற்று. கார்த்திகையும் வந்தது. திருவாதிரையும் வந்தது.

திருவாதிரையன்று நடு ராத்திரியில் திடீரென்று காமுவுக்குத் தூக்கம் கலைந்தது. அவளுக்குத் தூக்கக் கலக்கமே கொஞ்சமும் அப்போது தோன்றவில்லை. காமு படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள். ஏதோ ஒரு வித புது சக்தி அவளை ஊடுருவிப் பாய்வதை அவள் உணர்ந்தாள். உடம்பு முழுவதும் குபுகுபுவென்று ரத்தம் துள்ளி ஓடிப் பாய்வதாக ஒரு ஆனந்தத் தோற்றம். இன்னதென்று அவளால் அதை விவரித்து உணர முடியவில்லை. ஜன்னல் வழியாகச் சந்திரிகை அவள் அறையின் உள்ளே எட்டிப் பார்த்தது; பவள மல்லிகையின் வாசனையும் அவளைச் சூழ்ந்து கொண்டது.]

தான் சாரதிக்கே உரியவள் என்ற ஒரு எண்ணம் எவ்வாறோ மின்னல் போல் பளிச்சென்று அப்போது அவள் மனத்தில் உதித்துத் தாக்கியது!

அவன் அரவணைப்புக்காக அவள் உள்ளம் ஏங்கியது! அதனால் அடுத்த கணம் அந்த மகிழ்ச்சி யெல்லாம் துக்கமாக மாறியது. ''ஐயோ! அவர் கடிதம் எழுதினால் கூடப் பிரித்துப் பார்க்கப் போவதில்லை என்று சொல்லிவிட்டேனே!'' என்று தலையணையில் முகத்தைப் புதைத்துக்கொண்டு அழுதாள். நிர்ஜீவனாகப் போய்விட்டது அவள் உடம்பு.

உலகத்தில் தான் யாருக்கும் பயன்படாத ஒரு சிறு அரும்பு என்ற சிறுமை உணர்ச்சி அவளை ஆட்கொண்டது.

தனக்குக் கிடைத்தது இந்த ஒரு சின்ன வாழ்க்கை. அதையும் தானே இப்படிப் பாழ்படுத்திக் கொள்ளலாமா என்று தன் புத்தியீனத்தைத்தானே நொந்து கடிந்து கொண்டாள் காமு.

காலையில் நிராசையுடன் வாசலில் எட்டிப் பார்த்த அவள் கையில் ஒரு கடிதத்தைக் கொடுத்து விட்டுச் சென்றான் தபால்காரன்.

பரபரப்புடன் உறையைக் கிழித்துப் படித்தாள் காமு.

''நான் கடிதம் எழுதுவதைக் கண்டு நீ மேலும் கோபம் அடையலாம். ஆனால் அப்படி எழுதாமல் இருப்பது எனக்கே நான் துரோகம் செய்து கொள்வதாக ஆகும். என் வாழ்க்கையை மாறவைப்பது உன் பொறுப்பு. காமு! நான் மேற்கொண்டு எவ்வளவோ எழுதலாம். ஆனால் அதெல்லாம் உன் பதில் கடிதத்தைப் பார்த்த பிறகுதான்.

பொங்கல் விடுமுறைக்கு உன் தகப்பனார் அனுமதி பெற்று நீ மறுபடியும் எங்களுடன் வந்து தங்க வேண்டும் என்பது உன் மாமியின் விருப்பம். என் கோரிக்கையும்கூட!

சாரதி.''

இந்தக் கடிதம் காமுவின் மனதில் எத்தகைய ஆனந்தத்தை உண்டாக்கியது என்று சொல்ல முடியாது. தான் வெகு நாட்களாக விரும்பிய பொருள், ஆதுரத்துடன் தன்னையும் அறியாமல் நினைத்து நினைத்து ஏங்கிய பொருள் கிடைத்து விட்டது என்ற குதூகலம் அவள் மனசை அப்படியே ஆக்கிரமித்துக் கொண்டது. பதில் எழுதமாட்டேன் என்று முன்பு அவள் கூறிய சபதம் அவள் நினைவுக்கு மீண்டும் வந்து தலை காட்டியது. ஆனால் எல்லைமீறிய ஏதோ ஒரு உணர்ச்சி அந்த நினைவின் தலையில் பலமாக அடித்து விரட்டி விட்டது. காமுவின் எண்ணம் சுழன்றது. அவள் கரங்கள் அந்தக் கடிதத்துக்குப் பதில் எழுதத் தாமாகவே விரைந்தன.

# ஒவ்வொரு வருடமும் இந்த உபகண்டத்தில் 20 லக்ஷத்திற்கு மேலான ஜனங்கள் மலேரியாவினால் கொல்லப்படுகிறார்கள்

மலேரியாவினால் ஏற்படும் மரணங்கள் ஒருபுறமிருக்க இக்கொடிய வியாதி அதனால் பீடிக்கப்படுபவர்களைப் பலஹீனப்படுத்தி இதர வியாதிகள் தாக்குவதற்கு முன்பே கொன்றுவிடுகிறதென்பதைத் தெரிந்துகொண்டால் இந்த பயங்கரமான எண்ணிக்கை மேலும் முக்கியத்துவம் அடைகிறது. மலேரியாவின் பயம் எப்பொழுதும் உங்களைச் சுற்றியிருக்கிறது. ஏனெனில் அது உங்களுடைய சரீரத்தில் தொற்றிக் கொள்வதற்கு ஒரு கொசுக்கடியே போதும். நீங்கள் இந்த அபாயத்தை ஒருபொழுதும் அலட்சியம் செய்யக்கூடாது.

இப்பொழுது 'பாலுட்ரின்' மலேரியாவிலிருந்து உங்களுக்குப் பாதுகாப்பை அளிக்கிறது. ஒரே அணா விலையுள்ள ஒரு மாத்திரையை வாரம் ஒருமுறை உட்கொண்டு வந்தால், அது அந்த நோயை அணுகவிடாது. நீங்களும் உங்களுடைய குடும்பமும் வாரத்திற்கு, ஒருவருக்கு மிகக் குறைவான ஒரே அணா செலவில் மலேரியாவிலிருந்து உங்களைப் பாதுகாத்துக் கொள்ளலாம். அளவு முறைகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

**அபாயத்தின் சின்னங்களைக் கவனியுங்கள்:**

முதலில் குளிரால் நடுக்கம் உண்டாகும். ஜுரம் ஆரம்பமாகும். இதனால் உடம்பு முழுவதும் வியர்க்கும். தேகம் முழுவதும் வலி உண்டாகும். இந்த அறிகுறிகளை ஒருபொழுதும் அலட்சியம் செய்யாதீர்கள்—உடனேயே டாக்டரின் ஆலோசனையைக் கேளுங்கள். மலேரியா கண்டிருந்தால், 'பாலுட்ரின்' எப்படி உங்களுடைய ஜுரத்தை சில நாட்களில் நீக்குகிறது என்பதையும் எதிர்காலத்தில் மலேரியா உங்களை அணுகாமல் எப்படி பாதுகாப்பை அளிக்கிறது என்பதையும் அவர் சொல்லுவார்.

நம்பிக்கைக்குகந்த 'பாலுட்ரின்' மாத்திரைகள் சுத்தமான, தெளிவாகத் தெரியும் காகித உறைகளில் சுற்றப்பட்டு வருகின்றன. ஒரு மாத்திரை விலை ஒரே அணா தான்.



# 'பாலுட்ரின்'

## மலேரியாவை வீழ்த்துகிறது



### அளவுமுறை

**சிகிச்சைக்கு:** வயதானவர்களுக்கும் 12 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கும் ஒரு மாத்திரை. 6லிருந்து 12 வயது வரையுள்ள குழந்தைகளுக்கு அரை மாத்திரை. 6 வயதிற்கு கீழ்ப்பட்ட குழந்தைகளுக்கு கால் மாத்திரை வீதம் தினந்தோறும் ஜுரம் குணமடையும் வரை கொடுக்கவும்.

**பாதுகாப்பிற்கு:** மேலே குறிக்கப்பட்ட அளவுகளை அனுசரிக்கவும். ஆனால் வாரம் ஒருமுறை அதே தினத்தில் சாப்பிட வேண்டியது.

எப்பொழுதும் 'பாலுட்ரின்' சாப்பாட்டிற்குப் பிறகு அதிக அளவு தண்ணீருடனோ அல்லது பாலுடனோ உட்கொள்ள வேண்டும் என்பதை ஞாபகத்தில் வைத்திருங்கள்.

இம்பீரியல் கெமிக்கல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்.

ICP 71

# பாவம், மங்களம்!

ஆர். எஸ். மணி

“பெண்ணை உனக்குப் பிடித்திருந்தால் நான் வேண்டாம் என்று சொல்லப்போகிறேனா? உனக்குச் சம்மதமானால் சரிதான்!” என்று கூறினான் சங்கரன். பெண் அழகாக இருக்கவேண்டும், நன்றாய்ப் பாடவேண்டும், படித்திருக்க வேண்டும். என்றெல்லாம் சங்கரன் சொல்லுவானோ என்று எதிர்பார்த்த தர்மாம்பாள், இந்தப் பதிலைக் கேட்டு ஆச்சரியப்பட்டுப் போனாள்.

சங்கரன் தர்மாம்பாளுக்கு ஒரே பிள்ளை. சங்கரனுக்கு ஏழு வயதானபோது திடீரென்று அவன் தகப்பனார் இறந்து விடவே சங்கரன் படித்து முன்னுக்கு வந்து தலையெடுக்க ஆரம்பித்து விட்டால் பிறகு சுகமாகக் காலத்தைக் கழிக்கலாம் என்கிற நம்பிக்கையுடன், வயிற்றைக் கட்டி, வாயைக் கட்டி, சங்கரனைப் படிக்க வைத்தாள். தர்மாம்பாள் பட்ட கஷ்டங்கள் வீண் போகவில்லை. சங்கரன் அக்கறையுடன் படித்து பி. ஏ. பரீட்சையில் வெற்றிகரமாகத் தேறினான். தன் தாயாரையும் தன் குடும்பத்தையும் காப்பாற்றுவது தன் பொறுப்பு என்று உணர்ந்த சங்கரன் மிகுந்த பிரயாசையுடன் வேலைக்கு அலைந்தான். படிப்பு முடிந்த வெகு விரைவிலேயே அவனுக்குப் போஸ்டாபீஸில் நூறு ரூபாய் சம்பளத்தில் ஒரு வேலை கிடைத்தது.

சங்கரன் ஒரு நிமிஷம்கூடத் தாயாரை மறந்தவன் அல்ல. தான் ஒரு மனிதனாகி உலகத்தில் உலாவி வருவதற்குத் தன் தாயார்தான் காரணம் என்று நினைக்காத நேரமில்லை. தர்மாம்பாளும் தான் பட்ட கஷ்டமெல்லாம் வீண் போகவில்லை என்ற பெருமையுடன் வாழ்ந்தாள். அவளுக்கு வர வரத் தள்ளாமை அதிகரிக்க ஆரம்பித்து விட்டபடியால் வீட்டு வேலைகளைச் செய்வது கஷ்டமாக இருந்தது. மேலும் தன் மகன் மாலையும் கழுத்துமாக நிற்பதைப் பார்த்து மகிழ வேண்டுமென்ற எண்ணம் தோன்றவே, சங்கரன் கலியாண விஷயமாய்ப் பேச்செடுத்தாள். பல பெண் ஜாதகங்கள் வந்தன. அவள் அவைகளில் மாயூரத்துப் பெண்ணையே தேர்ந்தெடுத்து, பெண்ணைப் போய்ப் பார்த்துவிட்டு வந்தாள். பெண் மங்களம் மாநிறமானவள். அத்தனை பிரமாதமான படிப்பும் இல்லை. பார்வைக்கு அடக்க ஒடுக்கமான பெண்ணாகத் தோன்றவே அந்த வரனையே முடித்து விடுவது என்று தீர்மானித்தாள். சங்கரனும் தன் தாயாரின் விருப்பத்திற்குத் தடை சொல்லாமல் போகவே வெகு விரைவில் மாயூரத்தில் சங்கரனுக்கும் மங்களத்துக்கும் கலியாணம் நடந்தேறியது.

மங்களம் புக்ககம் வந்தது முதல் தர்மாம்பாளிடம் உயிராக இருந்தாள். மாமியார் எந்தக் காரியம் செய்யப் போனாலும், “நீங்கள் ஏன் அம்மா, இப்படிக் கஷ்டப்படணும்? நான் இருக்கிறேனே! இதையெல்லாம் பார்த்துக்கொள்ள மாட்டேனா?” என்று மாமியாரின் கை வேலைகளைப் பலவந்தமாகத் தானே வாங்கிச் செய்து வந்தாள். ஒவ்வொரு சமயம் சங்கரனும், “ஏன் இப்படித் தனியாகக் கஷ்டப்படுகிறாய்? கூடமாட அம்மா ஒத்தாசை பண்ணுவதை ஏன் வேண்டாம் என்கிறாய்?” என்றுகூடக் கேட்பான். கணவனின் பேச்சையும் தட்டிக் கழித்துத் தானே வீட்டு வேலைகளை எல்லாம் செய்து வந்தாள்.

ஆனால் தர்மாம்பாளோ தன் மாட்டுப் பெண்ணின் வேண்டுகோளையும் நிராகரித்து வேலைகளைச் செய்துதான் வந்தாள். சங்கரனுக்குச் சமைத்துப் போட்டு விட்டுத் துணிமணிகள் துவைக்கக் கிணற்றடிக்குச் செல்வாள் மங்களம். அப்போது தர்மாம்பாள், “ரொம்ப நன்னா இருக்கு நீ செய்கிற காரியம். சிறுககள் வேளா வேளையிலே சாப்பிடாவிட்டால் உடம்பு என்னத்துக்கு ஆகும்? சமையல் ஆகிறதற்கு முன்னே ஒருவாய் சாப்பிடு. நானே துணிமணிகளைத் தோய்த்து வைக்கிறேன்” என்று அன்போடு கூறுவாள் தர்மாம்பாள். தன் மாமியார் கஷ்டப்படக் கூடாது என்று மங்களம் நினைத்தாள். தன் மாட்டுப் பெண் கஷ்டப்படாமல் இருக்க வேண்டுமென்று தர்மாம்பாள் நினைத்தாள். இப்படி மாமியார் மாட்டுப் பெண் பரஸ்பரம் அன்னியோன்னியமாக இருப்பதைப் பார்க்க யாருக்குத்தான் பொறாமை ஏற்படாது?

அப்படிப் பொறாமைப் பட்டவர்களில் அடுத்த வீட்டில் குடி இருந்த அலமேலுவும் ஒருத்தி. அன்று மத்தியானம் தண்ணீர் கொண்டு வர மங்களம் அலமேலுவின் வீட்டிற்குப் போனபோது மிகவும் பரிதாபமான குரலில் பேச ஆரம்பித்துவிட்டாள் அலமேலு.

“பாவம்! நீ நாள் முழுவதும் மாடு மாதிரி உழைக்கிறாய்! ஆனால் இந்தக் காலத்தில் நல்லது செய்தால் யார் அதை நினைக்கிறார்கள்? உன்னைப் பார்த்தால் எனக்குப் பரிதாபமாக இருக்கிறது. அது சரி, உன் மாமியாரோடு நீ எப்படிக் காலம் தள்ளுகிறாய்? அவள் ஒரு ராக்ஷஸி யாச்சே!” என்றாள் அலமேலு.

இந்த வார்த்தைகளைக் கேட்டவுடன் மங்களத்தின் மனசில் ‘திக்’கென்றது. இவ்வளவு நாட்களாக உயர்வாக மதித்து வந்த தன் மாமியார் அத்தனை பொல்லாதவளா?

“இரண்டு நாளைக்கு முந்தி உன் மாமியார் இங்கே வந்திருந்தாள். உன்னைப் பற்றி என்னென்ன சொன்னாள் தெரியுமா! அப்பப்பா! அதை நினைச்சாலே நாக்கைப் பிடுங்கிண்டு

சாகலாம் போல இருக்கு! எல்லா வேலையையும் மாமியாரைச் செய்யச் சொல்லிவிட்டு நீ நாய்யாக இருக்கிறாயாம்! நானாக இருந்தால் அவளை வீட்டை விட்டு அனுப்பி விட்டு மறுவேலை பார்த்திருப்பேன். எப்படியோ நீ அவளோடு காலந் தள்ளுகிறாயே! நீ ஒரு தெய்வம் தாண்டி அம்மா'' என்று முடித்தாள்.

இந்த வார்த்தைகள், ஒரு பால் குடத்தில் ஒரு துளி விஷம் கலந்தது போல் ஆகி விட்டது. ஒரு கண நேரத்தில் மங்களம் தன் மாமியாரின் மீது வைத்திருந்த மேலான அபிப்பிராயங்கள் எல்லாம் தவிடு பொடியாகின. தண்ணீருடன் வீட்டிற்குச் சென்ற மங்களத்தைப் பார்த்து ''ஏண்டி மங்களம்! ஜலம் கொண்டு வரப்போனால் இத்தனை நேரமா? அடுப்பிலே பாலை வைத்து விட்டு வெளியே போகலாமா? பால் பொங்கி வழிந்து விட்டதே!'' என்றாள் தர்மாம்பாள். அவள் இந்தக் கேள்வியைச் சகஜமாகத்தான் கேட்டாள். ஆனால் இந்த வார்த்தைகள் அவள் காதுகளில் நாராசம் போல் பாய்ந்தன. 'ஆம்! அலமேலு சொன்னது உண்மைதான்! உண்மையில் இவள் ஒரு ராக்ஷஸிதான்' என்று தீர்மானித்துக் கொண்டு துக்கம் பீறிட்டுவர, புடவை முன் தலைப்பினால் முகத்தை மூடிக் கொண்டு விசித்து விசித்து அழுதாள் அவள்.

அதற்குப் பிறகு தர்மாம்பாள் என்னென்னவோ கேள்வி கேட்டாள். ஒரு கேள்விக்குப் பதில் சொன்னாள் மங்களம். பிறகு முகத்தைக் கடுகடுவென்று வைத்துக் கொண்டிருந்தாள். ஏதோ யந்திரம் போல் வீட்டு வேலைகளைச் செய்து வந்தாளே தவிர ஒருவித உற்சாகமோ, சந்தோஷமோ அவளிடம் காணப்படவில்லை. கொஞ்ச நாட்களாக மங்களத்தி-



ஒருவர்:—அடாடா, என்னமாப் பாடுகிறார்! என்னிடம் லக்ஷ ரூபாய் இல்லை; இருந்தால் அப்படியே அந்தப் பாடகருக்குக் கொடுத்து விடுவேன்.

மனைவி:—ஓஹோ! கொடுத்து விடுவேனோ என்னமோ? நல்ல காலம்-இல்லை. அப்புறம் கொடுத்து விட்டு எங்க எல்லோரையும் சோற்றுக்குத் தவிக்க விட்டிருப்பேள்!

னிடம் ஏற்பட்ட மன மாறுதலுக்குக் காரணம் புரியாமல் தவித்தாள் தர்மாம்பாள். சில தினங்களுக்கு முன்பு தர்மாம்பாள் அடுத்த வீட்டு அலமேலுவுடன் பேசிக் கொண்டிருந்தது என்னவோ வாஸ்தவம்தான்.

''ஏன் மாமி! இந்தப் பக்கமே வரதில்லே! மாட்டுப் பெண் வந்ததும் உங்களுக்கு ஒழிவு ஏற்படவில்லையா?'' என்று அவள் கேட்டதற்கு, ''என்ன செய்யறது அலமு! வீட்டிலே ஒழிவு ஏற்பட்டால் தானே! மங்களத்துக்கு அவள் வேலையைப் பார்க்கவே நேரமில்லே! என்ன இருந்தாலும் சிறுசுகள், சிறுசுகள் தான்'' என்று சகஜமாகத்தான் சொன்னாள். ஆனால் அந்த வார்த்தைகள் இத்தனை விபரீதத்தில் கொண்டு வந்து விடும் என்று அவள் கண்டாளா என்ன? நாட்கள் செல்லச் செல்ல மங்களத்தின் வெறுப்பு அதிகமாகியது. வரவரத் தள்ளாமையும் தலைசுற்றலும் அதிகமாகத் தர்மாம்பாளுக்கு வீட்டு வேலை ஒன்றும் செய்ய முடியவில்லை. 'இப்படி மாடு மாதிரி உழைத்துப் போடத்தானா நான் பெண் ஜன்மம் எடுத்தேன்?' என்று உள்ளுறப் பொருமினாள் மங்களம்.

அன்று மாயூரத்திலிருந்து மங்களத்துக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் அவளுடைய அம்மாவுக்குப் பெண்ணைப் பார்க்க வேண்டும் போலிருக்கிறதென்றும் மாப்பிள்ளையுடன் வந்து ஒருவாரம் இருந்துவிட்டுப் போகும்படியும் எழுதி இருந்தது. இந்த விஷயத்தை அறிந்த தர்மாம்பாள், ''எனக்கோ ரொம்பத் தள்ளாமையா இருக்கு! இந்தச் சமயத்திலே நீயும் அவனும் போய் விட்டால் என் கதி என்ன ஆவது? என் உடம்பு கொஞ்சம் குணம் ஆன பிறகு பார்த்துக் கொண்டு போகலாமே!'' என்றாள்.

மங்களத்துக்கு ஆத்திரமும் அழுகையும் பீறிட்டுக் கொண்டு வர, 'சே! இவள் ஒரு மனுஷியா? இவளுக்கு ஒரு பெண் இருந்தால் இப்படிச் சொல்வாளா?' என்று எண்ணி மனம் புழுங்கினாள்.

அன்று மத்தியானம் மங்களம் காப்பி சாப்பிடவில்லை. அதனால் தலைவலி கண்டது. ஜுரம் வேறு வந்து விட்டது. சுருண்டு சுருண்டு படுத்துக் கொண்டிருந்தாள். தர்மாம்பாள் எத்தனை கெஞ்சியும் ஒரு வாய் தண்ணீர் கூட அவள் குடிக்கவில்லை.

சங்கரன் ஆபீஸிலிருந்து திரும்பியவுடன் மனைவியின் அலங்கோல நிலையைக் கண்டு திகைத்துப் போனான்.

''இன்றைக்கு மத்தியானம் மாயவரத்திலிருந்து, அவளைப் புறப்பட்டு வரச் சொல்லிக் கடுதாசி வந்திருந்தது. நான் இப்போ எதுக்குப் போகணும்? அப்புறம் போகலாம் என்று சொன்னேன். அப்போதிலிருந்து அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக இருக்கிறாள். நான் சொன்னது தப்பாயிருந்தால் என்னை மன்னித்து விடச் சொல்லு, அப்பா!'' என்று கண் கலங்கக் கூறினாள் தர்மாம்பாள்.

சங்கரன் மங்களத்தைச் சமாதானப் படுத்த முயன்றபோது, "இனிமேல் ஒரு நிமிஷம் கூட இந்த வீட்டிலே என்னால் இருக்க முடியாது. நான் என்ன வேலைக்காரியா! இப்பவே மாயவரத்துக்கு ஒரு டிக்கட்டு வாங்கிக் கொடுங்கோ! நான் என் அம்மா வீட்டுக்குப் போய் விடுகிறேன். அப்புறம் அம்மாவும் பிள்ளையும் ஆனந்தமா யிருக்கலாம்" என்று விசித்து அழுதவாறு கூறி முடித்தாள்.

சங்கரனுக்கு அன்று ஆபீசில் மேலதிகாரியுடன் ஏற்பட்ட சிறிய மனஸ்தாபத்தின் காரணமாக மனம் சரியாக இல்லை. ஆகவே வீட்டில் ஏற்பட்டிருந்த கலவரம் அவன் கோபத்தையும் ஆத்திரத்தையும் அதிகரிக்கச் செய்தது. "ஆபீசில்தான் தொல்லை என்றால் வீட்டுக்கு வந்தாலும் நிம்மதி இடையாது. இந்த வீட்டில் வயசானவர்களுக்குக் கூட புத்தி இல்லையே! நீ எதற்காக ஊருக்குப் போகணும்? அந்தக் காலத்திலே 'தம்பி தம்பி' என்று உயிரை விட்டு மாமாவுக்கு வாரி வாரிச்செய்தாளே! அங்கே போய் ஒரு பத்து நாள் இருந்து தொலைவதுதானே!" என்று அம்மாவைப் பற்றி மனைவியிடம் கடிந்து கொண்டு சாப்பிடாமல் கூடப் படுக்கப் போய் விட்டான் சங்கரன்.

சங்கரனின் வார்த்தைகளைக் கேட்ட தர்மாம்பாள் சர்ப்பம் தீண்டியவள் போலானாள். உயிருக்கு உயிராக மதித்து வாஞ்சை வைத்திருந்த தன் பிள்ளையே இப்படி உதாசீனம் செய்து விட்ட பிறகு அவளுக்கு உலக வாழ்க்கையே வெறுத்து விட்டது. தன் தம்பி மனைவி எத்தனைதான் பொல்லாதவளான போதிலும் அங்கேயே போய் விடுவது என்று தீர்மானித்து விட்டாள். தன் பிள்ளை மாட்டுப் பெண்ணின் சுகவாழ்வுக்காக, கையில் சேர்த்து வைத்திருந்த பணத்துடன் தன் தம்பியின் ஊரான மதுரைக்குக் கிளம்பி விட்டாள் தர்மாம்பாள்.

மாமியார் மதுரைக்குப் போன பிறகுதான் மங்களம் உற்சாகத்துடன் இருந்தாள். ஆனால் சங்கரனின் போக்குத்தான் மாற ஆரம்பித்து விட்டது. முன் கோபத்தினால் தாயாரின் மனம் புண்படும்படி பேசி விட்டோமே என்கிற எண்ணம் அவன் உள்ளத்தில் தோன்றி அவனைச் சித்திரவதை செய்தது. ஏதோ ஒரு குற்றம் செய்து விட்டது போல் அவன் மனச்சாட்சி அவனை உறுத்தியது. மாமி மிகவும் பொல்லாதவள் ஆயிற்றே? அம்மா அங்கு என்ன கஷ்டப்படுகிறாளோ! என்று நினைக்கும்போதெல்லாம் அம்மாவைப் போய் அழைத்துக் கொண்டு வந்து விட்டால் என்ன என்று கூட எண்ணுவான். ஆனால் மங்களத்தின் நினைவு அந்த எண்ணத்தைச் சிதறச் செய்யும். இப்படி இருதலைக் கொள்ளி போல் ஏங்கித் தவித்தான் சங்கரன். ஆகவே வேறு ஏதாவது வேலையில் கவனம் செலுத்தினால் மனசு சற்று நிம்மதி அடையுமோ என்கிற நம்பிக்கையுடன் ஒரு வாரம் லீவு போட்டு விட்டு



வீட்டை வெள்ளையடிக்கும் வேலையை மேற்பார்வை செய்வதில் முனைந்தான் சங்கரன்.

வீட்டை வெள்ளையடிக்கும் வேலைக்கார முனுசாமியுடன் வேடிக்கையாகப் பேசிக் கொண்டும், அவ்வப்போது அவனை அதிகாரம் செய்து கொண்டும் பொழுது போவதே தெரியாமல் நேரத்தைக் கழித்தான் சங்கரன்.

அன்று மத்தியானம் முனுசாமி வேலை செய்து விட்டுப் பகல் சாப்பாட்டிற்குச் சென்றான். சங்கரன் கூடத்தில் இருந்த ஊஞ்சலில் படுத்துச் சற்றுக் கண்ணயர்ந்தான்.

பலமான குரலில் யாரோ கத்துவதும் வேறு யாரோ 'ஐயோ அப்பா' என்று கத்திக் கொண்டே அழுவதும் போன்ற ஓசை கேட்டுத் திடுக்கிட்டு எழுந்த சங்கரன் தோட்டத்தை நோக்கி விரைந்தான். முனுசாமி தனக்குச் சாப்பாடு கொண்டு வந்திருந்த மனைவி கண்ணம்மாவை அடித்துக் கொண்டிருந்தான் அவன் மனைவிதான் அலறிக் கொண்டிருந்தாள். "என் முகத்திலே முழிக்காதே! போ வெளியே!" என்று கத்தினான். கண்ணம்மா விசும்பிய வண்ணம் அழுது கொண்டே சென்று விட்டாள். மனைவியை அடித்த முனுசாமியின் முரட்டுத் தனத்தைக் கண்டித்த சங்கரனைப் பார்த்து "உங்களுக்கு விஷயம் தெரியாது சாமி! அவளை இத்தோட விட்டதே தப்பு! அவள் செஞ்சிருக்கிற காரியத்துக்கு அவளைச் சாகடிக்க இருக்கலாம்" என்று கூறி விட்டுச் சங்கரனைத் தன் வீட்டுக்குள் அழைத்து வந்து விவரமாகக் கூறினான் முனுசாமி.

சின்னம்மாவுக்கும் முனுசாமிக்கும் கலியாணம் ஆகி இரண்டு மூன்று வருஷங்கள் தான் ஆகின்றன. முனுசாமி கூலி வேலை

செய்து சம்பாதித்த சொற்ப வருவாயில் தன் மனைவியையும், தாயாரையும் காப்பாற்றி வந்தான். கலியாணமாகி வந்ததிலிருந்து கண்ணம்மாவுக்கு மாமியாரைக் கண்டால் வேம்பாக இருந்தது. ஆகவே தன் புருஷனிடம், மாமியாரைப் பற்றி ஏதாவது புகார் சொல்லிக் கொண்டே இருந்தாள். ஆனால் அப்போதெல்லாம் முனுசாமி, "அம்மா சொல்லுகிறபடிதான் நீ நடக்கணும்! என்னைப் பெற்றெடுத்து அன்போடு வளர்த்தவங்க இல்லையா? அம்மா சில சமயம் கோபித்துக் கொண்டாலும் நீ அதை மனசில் வைக்கப்படாது! என்ன இருந்தாலும் அவுங்க வயசானவங்க பாரு?" என்று சொல்லி வந்தான். கண்ணம்மா மாமியாரை மறைமுகமாகத் துன்புறுத்தி வந்தாள். வேளைக்குச் சரியாகச் சோறு போடுவதில்லை. வீண் பழியைச் சுமத்தி அவள் மனசு புண்ணாகும்படி பேசிவந்தாள். இவ்வளவு இருந்தும் தன் மகன் எங்கே மனைவியுடன் வீணைச் சண்டை போடப்போகிறானோ என்று இந்த விஷயங்களை எல்லாம் முனுசாமியிடம் சொல்லாமல் இருந்தாள் அவன் தாயார்.

நாளுக்கு நாள் தன் தாயாரின் உடம்பு மெலிந்து மோசமாகி வருவதற்குக் காரணம் புரியாமல் தவித்தான் முனுசாமி. தன் தாயாரிடம் அவன் வைத்திருந்த அளவு கடந்த அன்பு காரணமாக அவன் பட்ட சிரமம் கொஞ்ச நஞ்சமல்ல. தினந்தோறும் அவன் வேலைக்குப் போய் விட்டுத் திரும்பி வரும்போதெல்லாம் தன் தாயாருக்குப் பிடித்தமான பண்டம் எதையாவது வாங்கி வருவான். அவளிடம் அதை வந்ததும் வராததுமாகத் தானே கொடுப்பான். அவன் இவ்வளவு அன்பு காட்டியும் அவன் தாயாரின் உடம்பு துரும்பாக இளைத்து வந்தால் அவன் மனசுக்கு வேதனையா யிருக்காதா?

அன்று காலை வேலைக்குப் புறப்படுவதற்கு முன்பு, நிறையக் காய் கறிகளை வாங்கிக் கொண்டு வந்து கொடுத்து, "அம்மாவுக்குக் கத்திரிக்காய் ரொம்ப பிடிக்கும். பொரியல் செய்து போடு, பாவம்! வயசு ஆயிடுச்சு" என்று சொல்லி விட்டு வெளியே போனான். பகல் பதினொரு மணிக்குத் தான் வேலை செய்து கொண்டிருந்த இடத்துக்குத் தன் தாயார் தள்ளாடி நடந்து வருவதைக் கண்ட முனுசாமி, "என்ன அம்மா! என்ன விஷயம்! சோறு சாப்பிட்டாயா?" என்று கேட்டான்.

"உன் பெண்சாதி காலையிலே கதவைப் பூட்டிக்கிட்டு எங்கோ வெளியே போயிடுத்து. இத்தனை நேரம் வாசல் திண்ணையிலே உட்கார்ந்து பார்த்தேன். பசி காதை அடைக்குது. கண் ஒரே பஞ்சா இருக்குது. உன்னையாவது பார்க்கலாம்னு வந்தேன்" என்று கூறிவிட்டு, 'கோ' வென்று அழுதாள் அவள்.

முனுசாமியின் கண்கள், கலங்கின. கண்ணம்மாவின் மீது ஆத்திரம் பொங்கியது. கையிலிருந்த காசை யெடுத்துத் தாயாருக்கு ஏதோ வாங்கிக் கொடுத்து அனுப்பி விட்டு மனக் கொதிப்புடன் வேலை செய்து கொண்டிருந்தான்.

ஒரு மணி சுமாருக்குத் தலையில் சோற்று மூட்டையுடன் கண்ணம்மா வந்து சேர்ந்தாள். அவளைப் பார்த்தவுடன் கண்களில் தீப் பொறி பறக்க, "அம்மாவுக்குச் சோறு போட்டையா?" என்று கேட்டான்.

கண்ணம்மா புன்னகை பூத்தவாறு, "எல்லாம் போட்டேன்! ஒரு படி சோறு தின்னுப்புட்டு தெருத்திண்ணையில் படுத்துக்கிட்டு இருக்குது" என்று கூறினபோது, ஆத்திரமும் ஆவேசமும் கொதித்து எழ, "சீ கழுதே! பொய் சொல்லாதே! நீ நேற்று வந்தவள். அம்மாவைப்பத்தி இவ்வளவு அலட்சியமாய்ப் பேச உனக்கு என்ன துணிச்சல்?" என்று கூறிக் கொண்டே, அவள் கொண்டு வந்திருந்த சோற்றைத் தூக்கி எறிந்து விட்டு அவள் முகத்திலும் கன்னத்திலும் பளீர், பளீர் என்று அடித்து விரட்டினான் முனுசாமி.

"இப்போ சொல்லுங்கோ நான் செஞ்சது நியாயமா தப்பான்னு! உங்க வீட்டிலே இது போல ஏதாவது நடந்தால் நீங்க என்ன செய்வீங்க?" என்று சொல்லி முடித்தான்.

அவ்வளவுதான்! சங்கரனின் தலை பம்பரம் போல் சுழன்றது. 'சே! தாயாரின் மீது ஒரு வேலைக்காரன் வைத்திருக்கும் அன்புகூட நான் வைக்கவில்லையே!' என்று வருந்தினான். "காப்பி ஆறிப்போகிறது" என்று மங்களம் சொன்ன வார்த்தைகளையும் காதில் போட்டுக் கொள்ளாமல் தாயாரை அழைத்து வருவதற்கு அன்று வண்டிக்கே மதுரைக்குப் புறப்பட்டு விட்டான் சங்கரன்.



பத்திரிகை ஆசிரியர்:—உங்கள் கதையை எப்படி ஸார் படிப்பது? உங்கள் கையெழுத்து புரியவே இல்லையே. கதையை 'டைப்' அடித்தாவது கொண்டு வந்திருக்கக் கூடாதா?

கதை எழுதியவர்:—டைப் அடிக்கத் தெரிந்திருந்தால் கதை எழுதவே துணிந்திருக்க மாட்டேனே, ஸார்!




துணிகளை அடித்துத்துவைக்காமலே வெண்மையாகவும் பிரகாசமாகவும் சலவை செய்கிறது!

L.180-50 TM



## 11. வாழ்க்கைப் பரிசீலனை

அந்த இரவில் ஒரு ஜீவன் நித்திரையின்றிப் படுக்கையில் புரண்டு புரண்டு படுத்த வண்ணம் ஏதேதோ சிந்தனையில் மனத்தை அலைய விட்டுக் கொண்டிருந்தது. அது வேறு யாருமல்ல. ஆனந்தன்தான்.

மறுநாள் பொழுது விடிந்ததும், தினமும் அவன் படுக்கையை விட்டு எழுந்ததும் தன் ஒன்று விட்ட சகோதரன் கோவிந்தனைப் பார்க்கப் போவதுபோல் போகவில்லை. அவன் மனத்தில் எவ்விதக் குறிக்கோளுமில்லாமல் ஏரிக் கரையை நோக்கி நடந்தான். அவன் ரஸ்தாவைத் தாண்டி மேடிட்டு உயர்ந்திருக்கும் ஏரிக்கரையின் ஒற்றையடிப் பாதை வழியாக நடந்தான். சற்றுத் தூரத்தில் ஏரிக்கரையை ஒட்டினாற்போல் இருந்த மைதானத்தில் தங்கியிருந்த நாடோடிகளின் குடிசைகள் அவன் கண்களில் பட்டன. அவனுடைய கவனமெல்லாம் அந்தக் குடிசைகள் உள்ள பக்கத்திலேயே இருந்தது. உயரமான ஏரிக் கரையிலிருந்து பார்க்கும்பொழுது அந்தக் குடிசைகளெல்லாம் கொலுவில் வைக்கப்பட்டிருக்கும் பொம்மைகள் போன்று வரிசையாகக் காட்சி யளித்தன. மாடுகளும் ஆடுகளும் ஏரிக் கரையில் அங்குமிங்குமாக மேய்ந்து கொண்டிருந்தன. குழந்தைகளும் நாய்களும் அந்த மைதானத்தைச் சுற்றி வித்தியாசமில்லாமல் விளையாடிக் கொண்டிருந்தன. ஆண்களும் பெண்களும் மிகவும் சுறுசுறுப்பாக அங்குமிங்கும் போவதும் வருவதுமாக இருந்தனர். அவர்களுடைய அழுக்கடைந்த சாதாரண உடைகள்கூடத் தூரத்திலிருந்து பார்ப்பதற்கு அழகாய்த்தா னிருந்தன. விடியற்கால வேளையில் அந்தக் காட்சிகளெல்லாம் பார்ப்பதற்கு அழகாகவும் மனத்திற்கு நிம்மதி அளிப்பதாகவும்தான் இருந்தன.

ஆனந்தன் மெதுவாக நடந்து வந்து கொண்டிருந்தான். தன் நினைவில்லாமல் நடந்து வந்து கொண்டிருக்கும் அவன் கண்களை ஒரு காட்சி கவர்ந்தது. அவன் சட்டென்று பிரமிப்படைந்து நின்று விட்டான். அங்கொரு மரத்தடியில் ஒரு பெண் படுத்து உறங்கிக் கொண்டிருந்தாள். சித்திரப் பதுமைபோல் படுத்து உறங்கும் அப் பெண்ணின் அழகு அவனை மதி மயங்க வைத்ததென்றாலும் அதில் ஆச்சரியமொன்றுமில்லை. அப் பெண்ணை அவனுக்குத் தெரியும். அவளை அவனால் எப்படி மறக்க முடியும்! அவள்தான் அந்த நாடோடிகளின் ராணி தங்கம். காலைச் சூரியனின் இளம் வெய்யிலில் அவள் தங்கக் கொடி துவண்டு கிடப்பதுபோல் அந்த மரத்தடியில் படுத்து உறங்கிக் கொண்டிருந்தாள்.

அந்த ராணிக்கு அம்ச தூளிகா மஞ்சமோ, பட்டு மெத்தையோ இல்லை. இலைச் சருகுகள் உதிர்ந்து கிடக்கும் அந்த மரத்தடியில், மண் தரையில் கையைத் தலையணையாக மடக்கி வைத்துக் கொண்டு படுத்து நித்திரை செய்து கொண்டிருந்தாள். அவள் உடுத்தியிருந்த பாவாடையில் போடப்பட்டிருந்த பல வகையான வர்ணக் கோடுகள் மனத்தைக் கவருவதாக இருந்தன. ஓலைக் கூடையிலிருந்து தாமரை மொட்டு அரை குறையாக வெளியே தெரிவதுபோல் அவளுடைய பாதங்கள் பாவாடை விளிம்பிலிருந்து அரை குறையாக வெளியே தெரிந்து கொண்டிருந்தன. தலைக் கொண்டை அவிழ்ந்ததினால் தோளில் திரி திரியாக விழுந்து புரண்டு கொண்டிருந்த கரிய கூந்தல் கருநீலக் கடலின் அலைச் சுருள்போலிருந்தது. அந்தச் சமயத்தில் அந்த அழகைக் கண்ட எந்த மனிதனும் மதிமயங்காமல் இருக்கமுடியாது.

அவன் மெதுவாக அவள் படுத்துக் கொண்டிருக்கும் இடத்தை நெருங்கி அவளைப் பார்த்துக் கொண்டே நின்றான். மெய் மறந்து தூங்கும் அவளை எழுப்பி அந்த அழகைக் குலைக்க விரும்பவில்லை அவன். அரை குறையாகத் திறந்திருந்த அவளுடைய செவ்விதழ்களிடையே பவளத்திடையே பதிய வைத்த வெண் முத்துப் போல் பற்கள் மின்னின. களங்கமற்ற முகமும், கொடி போல் துவண்டு கிடக்கும் உடலழகும் அவன் உள்ளத்தை உணர்ச்சிப் பரவசத்திற் குள்ளாக்கி உலுக்கி வைத்தன.

திடீரென்று அவள் ஏதோ சொப்பனம் கண்டு விழித்தெழுகிறவள் போல் பதட்டத்தோடு எழுந்து உட்கார்ந்தாள். பிறகு கண்களைத் துடைத்துக் கொண்டு மருள மருள விழித்த வண்ணம் நான்கு புறமும் பார்த்தாள். தன் எதிரில் ஆனந்தன் வந்து நிற்பதைப் பார்த்ததும் அவள் வெட்கத்தோடும் பதைபதைப்போடும் எழுந்து நின்றாள். ஆனந்தன் வியப்போடும் ஆர்வத்தோடும் அவளையே பார்த்துக் கொண்டு நின்றான். அவன்

முன்பே தனக்கு அறிமுகமானவன் என்ற நினைவு அவளுக்கு நன்றாக இருந்தது.

அவன் அவளை வியப்போடு பார்த்தான். அவள் ஆழ்ந்த நித்திரையி லிருக்கும்போது, தான் அந்த இடத்திற்கு வந்ததினால் அவள் நித்திரைக்கு இடையூறு ஏற்பட்டு விட்டதோ என்று அஞ்சினான் ஆனந்தன். அவளுக்கு அதனால் ஏதாவது கோபம் ஏற்பட்டு விடுமோ என்று அவனுக்குக் குழப்பம் ஏற்பட்டது. "நான் உன்னைத் தொந்தரவு செய்துவிட்டேன். மன்னித்து விடு" என்றான்.

"இல்லை, இல்லை! நீங்கள் ஒன்றும் தவறு செய்ய வில்லை. நான்தான் இப்படிச் சோம்பேறித்தனமாய் இத்தனை நேரம் தூங்கிவிட்டேன். என்னை எழுப்பினதில் எனக்கும் ரொம்ப சந்தோஷம்தான்!" என்றாள் குழைந்த குரலில் சிரித்துக் கொண்டே.

"உன் வாழ்க்கையிலே நீ இவ்வளவு அமைதியாகவும் சுகமாகவும் இருப்பதைப் பார்க்கும் பொழுது எனக்குக் கொஞ்சம் பொறாமையாய்த் தானிருக்கிறது. நீ தூங்கிக் கொண்டிருந்ததைப் பார்த்ததும் ஏதோ வேறொரு உலகத்திலிருந்து வந்த தேவதைதானோ என்று திகைப்படைந்து நின்று விட்டேன்!" என்றான் ஆனந்தன் சிரித்துக் கொண்டே.

"அப்படித்தான் தோன்றும்! ஆனால் நீங்க..." என்று சொல்ல ஆரம்பித்தவள் இலேசாகச் சிரித்து ஒரு பெருமூச்சு விட்டாள். பிறகு "ஆமாம், நாங்களெல்லாம் வேறொரு உலகத்திலே இருக்கிறவர்கள் போலத்தான் உங்களுக்குத் தோன்றும். ஆனால் உங்களிடமிருந்து நாங்கள் எத்தனையோ விஷயங்களைத் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது!" என்றாள்.

"என்னிடமிருந்து ஏதேனும் தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் தாராளமாய்க் கேள்! நான் சொல்லுகிறேன்" என்றான் ஆனந்தன்.

அப்பொழுது அவள் கண்களில் ஒரு பிரகாசம் ஏற்பட்டது. அவள் மனத்தில் நெடுநாளாய் உறுத்திக் கொண்டிருக்கும் கேள்விகளைப் பயித்தியக்காரத்தனமானது என்று நினைத்துப் பரிகாசம் செய்யாமல் பதில் சொல்லக்கூடிய ஒருவரைத்தான் அவள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். "நீங்கள் வீடு, குடும்பம் என்று சொல்லுகிறீர்களே, அது எப்படி இருக்கும்! அதை மாத்திரம் விவரமாய்ச் சொல்லுங்கள், அதுவே போதும்!" என்று கேட்டாள்.

ஆனந்தனுக்கு இந்தக் கேள்வி ஆச்சரியத்தை அளித்தது. அவளுடைய ஆர்வம் நிறைந்த முகத்தைப் பார்த்தான். அப்பொழுது அவளுடைய முகம் ஏதோ புதிர் போட்டு விட்டு ஆர்வத்தோடு அதற்கு விடையை எதிர்பார்ப்பது போலிருந்தது. "சரி, இப்படி உட்காரு, சொல்லுகிறேன்" என்று சொல்லி அந்த மரத்தடியிலேயே உட்கார்ந்தான். அவளும் அவனுக்குச் சமீபமாக அமர்ந்து அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

"எதற்காக எங்களுடைய சாதாரண வாழ்க்கையை எல்லாம் பற்றி நீ தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறாய்......எங்களுடைய வாழ்க்கையை விட உங்களுடைய வாழ்க்கையில்தான் எவ்வளவோ சந்தோஷமும் நிம்மதியும் இருக்கிறது. நிச்சயமாக நீ எங்கள் வாழ்க்கையில் எவ்வித சுகமும் நிம்மதியும் இருக்கிறதைப் பார்க்க முடியாது. குழந்தைப் பருவத்திலிருந்து வாலிபனாகும் வரை படிக்க வேண்டும். படித்து முடித்த பிறகு வேலை தேடித் திரிய வேண்டும். இதற்கிடையே பெண்டாட்டி—பிள்ளை, வீடு, வாசல், என்று கிழவனாகிற வரையில் பணத்திலேயே குறியாக இருந்து ஓடியாடிச் சம்பாதிக்க வேண்டும். கிழவனான பிறகு சாவு எப்பொழுது வரும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். எங்கள் வாழ்க்கை வெளியே பார்ப்பதற்கு ஆடம்பரமாகத்தா னிருக்கும். எங்களுக்குள்ள சட்டதிட்டம், கட்டுப்பாடு, வாழ்க்கை முறை, சம்பிரதாயம் எல்லாம் மனத்திற்கு நிம்மதி யளிப்பதே இல்லை. உங்களைப்போன்ற நாடோடிகள் சுதந்திரமானவர்கள். கிடைத்ததைக் கொண்டு உண்டு, உடுத்தி, வாழ்ந்து சுகப்படுகிறவர்கள். நீங்கள்



எங்கு வேண்டுமானாலும் போவீர்கள். ஆற்றங் கரையோ, ஏரிக்கரையோ, மலையடிவாரமோ எங்கு வேண்டுமானாலும் கவலையில்லாமல் உங்கள் குடிசையைப் போட்டுக் கொண்டு விடுவீர்கள். அப்படியல்ல, எங்கள் குடித்தனம். வெளியே உயர்ந்த மனிதர்களைப் போலப் பெருமையாக இருந்தாலும் நீங்கள் பொறாமைப்படக் கூடிய அளவில் எங்களிடம் எதுவுமே இல்லை'' என்றான்.



"இருக்கிறது......'' என்றாள் தங்கம் சிரித்துக் கொண்டே. "எங்கள் வாழ்க்கையில் ரொம்பச் சுகமிருப்பதாக நீங்கள் நினைப்பது தவறு. அப்படி எதுவுமிருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. எங்களுக்கு நீங்கள் நினைப்பதுபோல் எந்தச் சுதந்திரமும் இருப்பதாக நான் நினைக்கவில்லை. எங்களையும் அடக்கிக் கண்டிப்பாக ஆளப் பல பேர் இருக்கிறாங்க. என்னைப்போல இருக்கிறவங்களெல்லாம் அவங்க சொல்லுக்கு அடங்கித்தானாக வேணும். உங்களைவிட எங்கள் சமூகத்திலே அதிகாரமும் கட்டுப்பாடும் அதிகம்...'' என்றாள்.

ஆனந்தன், "இருக்கலாம். ஆனால் உண்மையாக நீ உணர்ந்திருந்தால் எங்கள் வாழ்க்கையை விரும்பவே மாட்டாய்......'' என்றான்.

தங்கம் தலையை ஆட்டிக்கொண்டே, "நான் இதுவரையில் என் மனத்திலுள்ளதை ஒருவரிடமும் சொன்னதே இல்லை. உங்களிடம் சொல்லுகிறேன். எனக்கு நெடுநாளாய் இந்த நாடோடிகள் கூட்டத்தி லிருக்கவே பிடிக்கவில்லை. இப்படி ஊர் ஊராகச் சுற்றுவதைவிட ஒரு இடத்திலேயே எனக்கென்று ஒரு வீட்டில் நிரந்தரமாக இருந்து குடித்தனம் செய்ய வேண்டுமென்றுதான் ஆசைப்படுகிறேன். உங்கள் வீடுகளெல்லாம் எவ்வளவு அழகாக இருக்கிறது! அப்படி நாம் இருப்போமா என்பதுதான் என் நினைவு......'' என்றாள்.

"தங்கம்! நீ அப்படி நினைக்கலாம். ஆனால் உனக்கு அந்த வாழ்க்கையில் அலுப்பும் வெறுப்புந்தான் தோன்றும், அனுபவித்துப் பார்த்தால்.''

"அப்படி எல்லாம் ஏற்படாது...சிறு குழந்தையாக இருக்கும்போதிலிருந்தே நான் என் தாயாரைப்போல ஏதாவது ஒரு வீட்டில் வேலை செய்தாவது பிழைக்க வேண்டும் என்று தீர்மானித்திருக்கிறேன். இந்த வாழ்க்கையில் இன்பமிருந்தால் என் தாயார் இந்தக் கூட்டத்தினரை விட்டுப் போவாளா...! நான் பிறந்தவுடனேயே என்னை இவர்கள் கையில் ஒப்படைத்து விட்டு இந்த வாழ்க்கையிலேயே வெறுப்புக்கொண்டு, ஏதோ ஒரு பணக்காரர் வீட்டில் வேலைக்காரியாகப் போய் விட்டாளாம் என் தாயார். தன் வயிற்றில் பிறந்த குழந்தையாயிற்றே என்று என்மீது துளிக்கூட இரக்கப் படாமல் என்னை இவர்களிடம் விட்டு விட்டுப் போயிருந்தால் என் தாயாருக்கு இந்த வாழ்க்கையில் எவ்வளவு வெறுப்பு இருக்குமென்று தெரியவில்லையா? அவள் எங்கு இருக்கிறாளோ...! எனக்குத் தெரியாது. ஆனால் அவள் இருக்குமிடத்திற்குப் போய் அவளைப்போல ஏதாவது வேலை செய்தாவது பிழைக்க வேண்டு மென்றுதான் ஆசை......'' என்று சொல்லி ஒரு பெரு மூச்சு விட்டாள் தங்கம்.

"இவ்வளவுதானே......! நீ விரும்பினால் அது கிடைப்பது ஒன்றும் பிரமாதமில்லை. ஒரு வீட்டில் வேலைக்காரியாகப் போக வேண்டாம். ஒரு வீட்டின் எஜமானியாகக்கூடப் போகலாம் ...ஆனால் நீ ஏன் உன் மனிதர்களிடம் உன் தாயாரிடம் உன்னை அழைத்துக் கொண்டு போய் விட்டு விடும்படி சொல்லக் கூடாது......!'' என்றான் ஆனந்தன்.



ஒருவர் (கோபத்துடன்):—என்ன ஐயா தையற்காரரே, சட்டைக்கு ஒரு மைல் நீளம் கையை வைத்து விட்டீரே!

டெய்லர்:—கோபித்துக் கொள்ளாதீங்க! இதோ சரி பண்ணித் தருகிறேன். எவ்வளவு வெட்டணுங்க?

அவர்:—அரை அங்குலம் வெட்டுங்க, போதும்!

"அவன் எங்கிருக்கிறான் என்று எனக்குத் தெரியவில்லை. அவர்களுக்கும் தெரியுமோ, தெரியாதோ......! அவளுக்கு என் மீது அன்பு இருந்தால் என்னைக் குழந்தைப் பருவத்திலேயே இரக்கமில்லாமல் இப்படி விட்டு விட்டுப் போவாளா...!" என்றாள் துயரத்தோடு.

"இப்படிப்பட்ட காரியம் ஒரு தாய் செய்யக் கூடியதாக எனக்குப் படவில்லை" என்று ஆனந்தன் பச்சாத்தாபத்தோடு கூறி விட்டு, "ஆனால் இப்போது நீ சிறு குழந்தை இல்லை, பார்! ஏன் நீ இப்பொழுது இவர்களிடமிருந்து தப்பி ஓடி விடக் கூடாது!" என்று கேட்டான்.

"அதுதான் முடியாது. எல்லோரையும்விட எனக்குத்தான் அவர்கள் வைத்திருக்கும் காவல் கட்டுப்பாடுகளெல்லாம் அதிகம். ஏன் தெரியுமா...! நான் அவர்கள் ராணியாம். இப்படி ஒரு ராணியை நீங்கள் பார்த்திருக்கவே முடியாது. அவர்களெல்லாம் நான்தான் அவர்களையெல்லாம் ஆட்சி செய்கிறேனென்று சொல்லிக் கொள்வார்கள். அது எப்படியாவது போகட்டும். நான் ராணி என்பதனால் மற்றவர்களைவிட என்னைத்தான் அவர்கள் மிகவும் கண்டிப்பாக நடத்துகிறார்கள்..." என்று அவள் சொல்லிக் கொண்டிருந்தபோதே "தங்கம், தங்கம்! எங்கே இருக்கே! இங்கே வா உடனே!" என்று கடுமையாக யாரோ உரக்கக் கூப்பிடும் குரல் கேட்டது. அந்தக் குரலைக் கேட்டதும் தங்கம் அங்கிருந்து போவதற்காகத் துடித்தாள். "என் அத்தை கூப்பிடுகிறாள், நான் போகணும்...காலை வேளையில் அவளுக்காக நான் விறகு சுள்ளி பொறுக்கிக் கொண்டு போய்க் கொடுக்கணும். இல்லாவிட்டால் நன்றாக அடித்து விடுவாள். நான் போகிறேன். போகட்டுமா! இல்லாவிட்டால் அவள் இங்கே வந்து விடுவாள். நான் உங்களோடு பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்தால் ஏதாவது தவறுதலாக நினைப்பாள்!" என்று சொல்லிக் கொண்டே நடந்தாள்.

"சரி, போ, மறுபடியும் உன்னை நான் எப்போது சந்திக்கிறது!" என்று கேட்டான் ஆனந்தன்.

நான்கு ஐந்தடி முன்னால் சென்ற தங்கம் சட்டென்று அவனைத் திரும்பிப் பார்த்து, "உங்களிடம் இன்னும் எவ்வளவோ பேசணும். மறுபடியும் எப்போ சமயம் வாய்க்குமோ! கடவுள் புண்ணியத்திலே சமயம் கிட்டட்டும்" என்று சொல்லி ஒரு பெருமூச்சு விட்டுக் கொண்டே நடந்தாள். அப்பொழுது அவள் கண்களில் ஆழ்ந்த சோகக் குறி தென்பட்டது.

அவள் தன் கண் பார்வையிலிருந்து மறையும் வரையில் அவளையே பார்த்துக் கொண்டிருந்து விட்டுத் தன் வீட்டை நோக்கி நடந்தான் ஆனந்தன். கைக்கெட்டிய பெரும் புதையலை நழுவ விட்டு விட்டது போன்ற உணர்ச்சிதான் அப்பொழுது அவனுக்கு ஏற்பட்டது.

அன்று மாதவியிடம் ஏதோ ஒரு மாறுதல் இருப்பதைக் கண்டு வள்ளி சிறிது ஆச்சரியமடைந்தாள். எப்பொழுதும்போல் இல்லாமல் மாதவி வள்ளியிடம் அளவுக்கு மீறிய அடக்கத்தோடும் பணிவோடும் நடந்து கொள்ளத் தொடங்கியது தான் அவளுக்குச் சிறிது ஆச்சரியத்தைக் கொடுத்தது. மாதவியின் கண்கள் எப்பொழுதும் போல் பிரகாசமாகவும் சந்தோஷமாகவும்தா னிருந்தன.

மாதவி அன்று சிறு குழந்தையைப் போலப் பல கேள்விகள் கேட்டதும் வள்ளிக்குச் சிறிது ஆறுதலாகத்தா னிருந்தது. வீட்டில் தரிக்காமல் அங்கு மிங்கும் ஓடிக் கொண்டிருக்கும் மாதவி அன்று வள்ளியின் பக்கத்திலேயே இருக்கத் தொடங்கினாள். வள்ளி தனது இளமைப் பருவத்தில் நாடோடி வாழ்க்கையில் அடைந்த அனுபவங்களையெல்லாம் பற்றி மாதவி கிளறிக் கிளறிக் கேட்கும் போது அவளுக்கு மிகவும் ஜாக்கிரதையாகவே பதில் சொல்லி வந்தாள் வள்ளி.

வள்ளியின் சிறிய அறையில் அவளோடு மாதவி உட்கார்ந்து ஏதோ பேசிக் கொண்டிருக்கும் பொழுது வேலைக்காரன் ஒருவன் வந்து "வள்ளியம்மா, உன்னைப் பார்க்கணும்னு யாரோ ஒருத்தன் வந்து காத்திருக்கான்" என்றான்.

"என்னைப் பார்க்கவா! என்னைப் பார்க்க யார் வரப் போறாங்க! யாரது!" என்றாள் வள்ளி ஆச்சரியத்துடன்.

"ஏரிக் கரையிலே வந்து குடிசை போட்டிருக்காங்களே கழைக் கூத்தாடிங்க, அவங்கள்லே ஒருத்தன், கிழவன். அவன் பேரு பெத்தண்ணனாம். நான் அவனைத் திருப்பி அனுப்பி விடலாமின்னு நினைச்சேன். ஆனால் அவன் பேசுகிற தினுசிலே ரொம்ப மரியாதைப்பட்ட மனுசனாகத் தெரிஞ்சது. அதனாலே இரு என்று சொன்னேன்!" என்றான் வேலைக்காரன்.

இதைக் கேட்டதும் வள்ளியின் முகத்தில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. பெத்தண்ணனை அவள் எப்படி மறந்திருக்க முடியும்! ஆனால் அவள் தன்னுடைய இருளடைந்த வாழ்க்கை அனுபவங்களைச் சிறிது மறந்திருக்கும் போது அதை மறுபடியும் நினைவுப்படுத்துவது போல் பெத்தண்ணன் வந்ததுதான் அவளுக்கு மிகவும் சங்கடத்தைக் கொடுத்தது.

"சரி! இதோ வந்து நான் பார்க்கிறேன்" என்றாள் வள்ளி.

இதையெல்லாம் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த மாதவி, "வள்ளி! உன்னைப் பார்க்க வந்தவங்களை வெளியே நிறுத்தாதே, உள்ளே கூப்பிடு. அவன் உன்னோடு என்ன பேசுகிறான் என்பதை நானும்தான் கேட்கிறேனே!" என்றாள் ஆவலோடு.

"உனக்கு அதெல்லாம் தகுதி இல்லை மாதவி. நான் அவனோடு தனித்துப் பேசணும். உன்னைப் போலப் பெரிய இடத்துப் பெண் இந்தமாதிரி நாடோடிகளைப் பார்ப்பதே பிசகு" என்று சொல்லிவிட்டுச் சென்றாள் வள்ளி. (தொடரும்)




# வலியினின்றும் நிச்சய நிவாரணம் ஸாரிடன்

ஸ்விட்ஜர்லாந்து, பாஸல் நகரத்தைச் சேர்ந்த உலகப் பிரசித்திபெற்ற 'ரோஷ்' ரசாயனசாலைகளால் கண்டுபிடிக்கப்பட்ட ஸாரிடன், வலிகளிலின்றும் உங்களுக்கு நிச்சயமான, துரிதமான நிவாரணம் தருகிறது.

தலைவலி, பல்வலி, முடக்கு வாதம், கீல் பிடிப்பு, நரம்புவலி மற்றும் ஜுரம் உள்ள நிலைமைகளில் இது விரைவாக பயனளிப்பதில் புகழ் பெற்றது. ஆஸ்பிரினோ மயக்க மருந்துகளோ இதில் கிடையாது. ஸாரிடன் உட்கொள்வதனால் பிற்பாடு பாதக விளைவுகளும் ஏற்படுவதில்லை

**வலிக்கு**

ஸாரிடன் துரிதமாக வேலை செய்து, தலைவலி, பல்வலி, ஸ்திரீகளுக்கு மாதவிடாய் காலங்களில் ஏற்படும் வலிகள், தசை மற்றும் நரம்பு வலிகளை நீக்கிவிடுகிறது.

**ஜுரத்திற்கு**

ஸாரிடன் ஜுரத்தை மிதப்படுத்தும்; ஜுரத்தினால் ஏற்படும் சோர்வையும் வலிகளையும் நிவர்த்திக்கும். அது சௌமியமாக வேலைசெய்து, புத்துணர்ச்சியும் ஊட்டும். வியர்த்தல் கொட்டாது, ஜீரணமும் பாதகமடைவதில்லை.

**சௌமியமாக ஊக்கும் தன்மையுடையது**

ஸாரிடன் சௌமியமாக ஊக்கும் தன்மையுடையது, ஆகையால் தூக்கமின்மை, வலி அல்லது 'மனக்கவலை' இவற்றால் ஏற்படும் தேகச் சோர்வு, மனச் சோர்வுகளை போக்கிவிடும்.

# ஊமைப் பெண்

துரோணன்

போலீஸ் இலாகாவில் அடிவைத்த மூன்று வருஷங்களாக ராமலிங்கம் இவ்வளவு கஷ்ட மடைந்ததில்லை. ஆனால், கடந்த இரண்டு தினங்களாக அலைந்திருந்த அலைச்சல்களும், சலிப்பும் அவன் கால்களுக்கும் உள்ளத்திற்கும்தான் தெரியும். ஏறக்குறைய அந்திப் பொழுது நெருங்கிக் கொண்டிருந்த அந்தத் தருணத்தில்தான் அவன் கொள்ளிடத்துப் படுகையில் நடந்து கொண்டிருந்தான். அந்தச் சனியன் பிடித்த ஊரில் ஏனென்று கேட்பதற்கு ஒரு நாதியுண்டா? இல்லை, காசைக் கொடுத்தாலும் ஒரு கப் 'கரம் சாயா'வுக்கோ, ஒரு கவளம் சோற்றுக்கோ வழியுண்டா? எல்லாவற்றையும்விட, அவனுக்கு உயிர் நாடியான வெற்றிலைப் பாக்கு வாங்குவதற்குக்கூட ஒரு கடையில்லை யென்பதை எண்ணியபோதுதான் அவனுக்குத் தன் இலாக்கா மீதே வெறுப்பு ஏற்பட்டது. வெகு நாளாகத் தலை மறைவாக இருக்கும் ஒரு கைதியைப் பற்றி அறிய வேண்டியதுதான் அவனுக்கு இடப்பட்டிருந்த அலுவல்.

வந்த காரியம்தான் ஆகவில்லை. இப்படியே ஆற்றங்கரை மணலில் ஆயாசம் தீரச் சற்றுப் புரண்டு விட்டாகிலும் போகலாம் என்று தீர்மானித்துக் கொண்டே வந்து கொண்டிருந்தான் ராமலிங்கம்.

கூப்பிடு தூரத்தில் ஜலக்கரை யோரமாக, 'சள சள' வென்ற ஸ்திரீகளின் பேச்சுக் குரல்கள் அவனது கவனத்தைக் கவர்ந்தன. நாணல் காட்டையும், படுகையையும் கடந்து அவன் அந்தத் துறைக்குச் சமீபமாக வந்த பொழுது அங்கு பெரும் பரபரப்பு ஏற்பட்டு விட்டது. ஒருவருக்கொருவர் மிரண்ட பார்வையுடன் ஜாடைமாடையாகப் பேசிக் கொள்வதும், விரைவாக ஓடுவதுமாக இருந்தனர். சம்பந்தமில்லாமல் கிராமத்து ஜனங்களின் எதிரில் திடீரென்று ஒரு போலீஸ்காரன் வந்து நின்றால் அவர்களுக்கு எப்படியிருக்கும்? இந்தச் செய்கை ராமலிங்கத்திற்கே சற்று வெட்கமாகக்கூட இருந்தது.

ராமலிங்கம் தன் வெற்றிலை போடாத வாயைச் சப்பிட்டுக் கொண்டே மணலில் சாய்ந்தான். சற்று நேரத்திற்கெல்லாம் பின்புறத்திலிருந்து 'வீல்' என்ற ஒலக்குரல் அவனது சிந்தனையைக் கலைத்தது. திரும்பினான். கையிலிருந்த குடத்தை எறிந்துவிட்டு, ஒரு பெண் திடீரென்று கீழே உட்கார்ந்து தனது வலது காலைப் பிடித்துக் கொண்டாள். அவன் பரபரப்புடன் அவளது சமீபமாக வந்தபொழுது, அந்தப் பெண் பெரும் பதைப்புடன் விசித்துக் கொண்டிருந்தாள். அவளது காலில் ஒரு அழுத்தமான முள் ஏறிக் 'குபுகுப்' வென்று இரத்தம் பெருகிக் கொண்டிருந்தது. சற்று நேரம் அவன் திகைத்தான். ஏனெனில், அங்கலாய்ப்புடன் அவன் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் அவளிடமிருந்து பதிலில்லை. பின்னர், தன் சட்டைப் பையிலுள்ள கொத்துச் சாவியில் ஒரு முள்ளுவாங்கி யிருந்தது ஞாபகம் வரவே, அவன் அதை யெடுத்து அவளிடம் போட்டான். நன்றி நிறைந்த பார்வையுடன் அந்தப் பெண் அதை யெடுத்துக் கால் முள்ளை யெடுக்க ஆரம்பித்தாள்.

"வீட்டுக்குப் போனதுமே, உப்புச் சுடல் அடிக்கணும், தெரிஞ்சுதா?" என்றான் ராமலிங்கம் அவளை நோக்கி.

அவளிட மிருந்து பதில் எதுவுமில்லை. இதையே மீண்டும் ஒரு தரம் கூறினான். அதற்கும் பதில் இல்லாது போகவே, அவனுக்குச் சற்று அருவருப்பாகவும் இருந்தது. தலை குனிந்தவாறே அவள் தன் காரியத்தில் தான் கண்ணாக இருந்தாள். ராமலிங்கம் சுற்று முற்றும் ஒருதரம் ஆராய்ந்து விட்டு, "நான் சொல்றது தெரியல்லே? நீ என்ன செவிடா?" என்றான் சற்று உரக்கவே. அதற்கும் அவளிடமிருந்து பதிலில்லை!

அடுத்த கணம் ராமலிங்கம் சும்மா இருக்கவில்லை. கீழே உருண்டு கிடந்த குடத்தை யெடுத்துக் கொண்டு நீரோட்டத்தை அடைந்து ஒரு குடம் ஜலத்தை யெடுத்துக் கொண்டு திரும்பினான். ஒருவழியாக, தன் காரியத்தை முடித்துக் கொண்டு அந்தப் பெண் திரும்பும்போது 'பளீ'ரென்ற நிறைகுடம் அவனது கண்களில் பட்டது. கால் அவஸ்தையுடன் இயற்கையும் அவளது விழிகளில் சேர்ந்து பிரகாசித்தன! அவளது நேர்ப் பார்வை தன்மீது விழுந்தவுடனேயே அவனும் சந்தர்ப்பத்தை நழுவ விடவில்லை! "எனக்குப் பதில் உபகாரம் ஒன்றும் கிடையாதா?" என்றான் குறும்புடன். ஆனால் பாவம், அவளால் எப்படிப் பதில் சொல்ல முடியும்? மிரள மிரள விழித்தாள்!

"வெற்றிலை பாக்கு கிடைக்குமா?" என்ற அடுத்த கேள்வியை அவன் சைகையில் பிரயோகித்தான். அவள் பரபரப்புடன் எழுந்து, கொஞ்ச தூரத்திலிருந்த மாடி வீட்டைச் சுட்டிக் காண்பித்துக் கொண்டே, குடத்தை எடுத்து இடுப்பில் வைத்துக் கொண்டாள்.

ராமலிங்கத்தின் பிரம்மசரிய உள்ளம் மனக்கோட்டை கட்ட ஆரம்பித்தது. பின்புறத்து மரத்தின்மீது சாய்ந்த வண்ணமே அவளது திசையை நோக்கிக் கொண்டிருந்தான். காலை அவள் நொண்டி நொண்டி ஊன்றிக் கொண்டு சென்றதுகூட அவனது இளமை உள்ளத்தைப் பைத்தியமாக்கிக் கொண்டிருந்தது. அவளது உருவம் அந்தப் பெரிய வீட்டிற்

குள் நுழைந்து மறைந்தபோது அவனுடைய இயற்கையான அபிலாஷை எல்லை மீறிற்று. பரபரப்புடன் தன் போலீஸ் உடையைக் களைந்து கைப் பைக்குள் திணித்துவிட்டு, உள்ளிருந்த வேஷ்டி சட்டைகளை எடுத்து உடுத்திக் கொண்டு கிளம்பினான்.

ராமலிங்கம் அந்த வீட்டின் அழகான தோற்றத்தையும், உள்ளே முழங்கிக்கொண்டிருந்த இரைச்சலையும் கவனித்துக் கொண்டே நின்றான்.

சற்று நேரத்துக் கெல்லாம் உள்ளிருந்து வந்த வையாபுரி இவனைக் கண்டதும் ஏதோ திக்பிரமை கொண்டவர் போல் நின்று விட்டார். அவனையே சற்று நேரம் ஏற இறங்கக் கவனித்துவிட்டு, "ஏன், தம்பி! என்ன தேடுறீங்க? உள்ளே வாங்களேன்!" என்றார் கனிவான குரலுடன்.

"ஒண்ணுமில்லீங்க! உங்கள் பொண்ணு ஆத்தங்கரைப் பக்கம் வந்து காலிலே பெரிய முள்ளைத் தைத்துக்கொண்டு விட்டது. அது ஒண்ணுமே பதில் பேசலீங்க! அதனாலே வீட்டிலேயாவது சொல்லிவிட்டுப் போகலாமென்று வந்தேன்!" என்று அவன் வார்த்தையை முடிப்பதற்குள்ளாகவே அவர் பேசத் தொடங்கி விட்டார்.

"அதையேன் கேட்கிறீங்க, தம்பி? அதை நானுகவேதான் கண்டு பிடித்தேன். இவ்வளவு நாழியா அதைப்பத்தித்தான் இரைஞ்சுக்கிட்டு இருந்தேன். இதை ஆத்தங்கரைப் பக்கம் போகவேண்டாமின்னு கேட்குதா? பிடிவாதம்தான் பெரிசா இருக்குது. இந்த ஊமைப் பெண்ணை வைச்சுப்பிட்டு அவள் அம்மா மகராசிப் பட்டத்தோடு போய்ச்சேர்ந்துட்டா." இவ்வாறு உரிமையும் வெறுப்பும் பிரதிபலிக்கக் கூறிக்கொண்டே அவர் அவனைப் பெஞ்சியில் உட்காரும்படி சைகை செய்தார்.

ராமலிங்கத்திற்குச் சற்று நேரம் என்ன பேசுவதென்றே புரியவில்லை. "தாகத்துக்கு ஏதானுச்சும் கொண்டு வரட்டுமா, தம்பி?" என்று கூறிக்கொண்டே அவர் எழுந்திருக்கவும், அவனுக்கும் என்ன பேசுவதென்பது உதயமாயிற்று!

"எனக்குத் தாகத்துக்குக் கொண்டு வருவது அப்புறமா ஆகட்டுங்க; முதலிலே அந்த முள்ளு குத்தினகாலிலே கூடல் அடிக்க விடுங்க!" என்றான் பரிவாக.

"அதெல்லாம், அவளது பாட்டிக்காரி செய்துக்கிட்டுத்தான் இருக்கிறாள்" என்று பதில் கூறிக்கொண்டே உட்புறம் சென்றார் பெரியவர்.

ராமலிங்கத்திற்குத் தானிருப்பது எந்த உலகமென்பதே புரியவில்லை! ஏனெனில், வையாபுரி அவனை ரொம்பவும் உபசரித்து, தன்னுடனேயே இருந்துவிட்டுக் காலையில் சாவதானமாகக் கிளம்பலாமென்று ரொம்பவும் கேட்டுக் கொண்டார்.



ஒரு வழியாக, அன்றிரவு விருந்துக்குப் பின் அவனது மனக்குறையும் தீர்ந்தது.

"தம்பி, என்னவோ இன்னிக்கி சாயந்திரம் உன்னைப் பார்த்தவுடனேயே எனக்கு உன் பேரில் ஒரு பாசம் விழுந்துடிச்சி! உன்னை நான் விசாரிக்கக் கூட இல்லை. இப்படி நகர்ந்து வந்து உட்காரு! உன் சொந்த ஊரு எது?" என்றார் வெற்றிலைப் பாக்குப் பெட்டியை அவன் பக்கமாக நகர்த்திக் கொண்டே.

ராமலிங்கம் தான் யார் என்பதையும், தனக்குத் தாய் தகப்பனில்லை என்பதையும் தான் இரண்டு தினங்களாக அல்லல் பட்ட காரியங்கள் எல்லாவற்றையும் சுருக்கமாய்ச் சொன்னான். அவன் ஒரு போலீஸ்காரன் என்பதைக்


தோ, எப்படி உன் கூந்தலை இவ்வளவு சோபையுடன் படிய வாரி முடித்திருக்கிறாய்? எனது கூந்தலோ நார்போல் என்ன வாரினும் படியமாட்டேனென்கிறது!
இதன் இரகசியத்தை என் அன்னையிடமிருந்து கற்றேன். பிரதி தினமும் டாம்கோ பரிமள தேங்கா யெண்ணெ உபயோகிக்கும்படி அவள் கூறினாள்.
பரம்பரை குணமேன்மை
இருபது வருடங்களுக்கு மேலாக டாம்கோ பரிமள கூந்தல் தேங்காயெண்ணெ இந்தியப் பெண்மணிகளுக்கு தங்கள் கூந்தலை சொகுசாயும் மிருதுவாயும் வைத்திருக்க உதவி வந்திருக்கிறது. பரம்பரை குணமேன்மை காரணமாக இவ்வருமை ரகசியம் தாய்மார்களினின்று பெண்கள் வாயிலாக இன்னும் பல்லாண்டு பரிமாறிவரப்படுமென்பதற்கு ஐயமில்லை.
டாம்கோ பரிமள கூந்தல் தேங்கா யெண்ணெ
ரோஜா, மல்லிகை, லவண்டர் என்ற மூவித வாசனைகளில் கிடைக்கும்.
A TATA PRODUCT
டாம்கோ தேங்காயெண்ணெ ஷாம்பூவினால் உங்கள் கேசத்தை வாரம் இருமுறை அலசிக் கழுவுங்கள்.
டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

## தரத்தில் சிறந்த ஸோப்




## அளவில் பெரிய ஸோப்

**ஆகவே உங்களுக்கும் உங்கள் வீட்டினருக்கும் உகந்தது**

காந்தியின் சிறப்புக்குக் காரணம் அது மிக நூதனமான தொடர்ச்சி உற்பத்தி யந்திரத்தில் தயாரிக்கப்பட்டது. இம்மாதிரி யந்திரம் ஆசியாவிலேயே ஒன்றுதான்.

காந்தி பிரசித்திபெற்ற இதர ஸோப்புகளைவிட அளவில் பெரியதாயிருக்கக் காரணம் ஸோப் உற்பத்தியில் அனுஷ்டிக்கப்படும் சிக்கனத்தின் பயனாக உங்கள் பணத்திற்கு அதிக அளவு ஸோப் கிடைக்கின்றது.

காந்தி சிறந்த நறுமணமுள்ளது; சருமத்தில் சுகந்த மணம் வீசச் செய்யும்.

# காந்தி

**ஸ்வஸ்திக் காந்தி டாய்லெட் ஸோப்**

சரும ஆரோக்யத்திற்கும் வாலிப வனப்பிற்கும் உகந்தது

**ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட், வடாலா, பம்பாய்**

SOM 175

கூறியதுமே, மலர்ச்சியுடன் இருந்த வையாபுரியின் முகம் சற்றே சுருங்கியது.

சிறிது நேரச் சிந்தனைக்குப் பின்னர், அவர் அவனது சமீபமாக வந்து உட்கார்ந்து கொண்டார். "தம்பீ, நீ விகல்பமாக ஒண்ணும் நினைச்சுக்க மாட்டாயே? நீ தங்கமான பையன் என்கிறத்தை முதனிலே உன் முகத்தைப் பார்த்தவுடனேயே தெரிஞ்சுக்கிட்டேன். தம்பி! இருந்தாலும் நீ பார்க்கிற உத்தியோகம் இருக்குதே அது எப்படியாப்பட்ட குணம் உடையது! இங்கே பாரு! எனக்கும் கடவுள் ஏதோ நாலு காணி பூமியைக் கொடுத்திருக்கிறார். இன்னை வரைக்கும் ஒரு தப்புத் தண்டா வழிக்கோ, முறை தவறியோ போனது கிடையாது. ஆனால், கண்டிப்புக்காரன் என்கிற ஒரு கெட்ட பேரு மாத்திரம் எனக்கு உண்டு. நான் ஏதுக்கு இதையெல்லாம் ஒங்கிட்ட சொல்ல வர்றேன்னு கேட்டால் இதோ இருக்கிறாளே, ஒரு ஊமைக் குட்டி—இவள் என் மகள் வயிற்றுப் பேத்தி. இவளை ஆறு வயசிலே விட்டுட்டு, அவள் அம்மா காலமாயிட்டாள். அவள் இறந்தபோது எனக்குப் பத்து வயசிலே ஒரு மகன் இருந்தான். சும்மா அப்படியே 'செக்கச் செவே'லுன்னு பையன் ராஜா வாட்டமா இருப்பான். அவன் அல்பாயுசிலே கொள்ளிடத்து மடுவுக்கு இரையாயிட்டான்! அப்புறம் என் மருமகப் பிள்ளை யிருக்கிறானே அந்த துரை, இளையாள் ஒருத்தியைக் கட்டிக் கிட்டவுடனே ஆளே மாறிட்டான். அவன் வார்த்தைக்கு அடிமைப்பட்டு, இந்தத் தாயில்லாப் பெண்ணை ரொம்பவும் கொடுமைப் படுத்தறதும், கொள்ளிடத்து மடுவுலே உயிரோட தள்ளுகிறது போல ஊரிலே இருக்கிற கிழப் பயலுங்களைக் கொண்டுவந்து நிறுத்திக்கிட்டு, கண்ணாலம் பேசி முடிக்கிறதாக நடத்தி யிருந்திருக்கிறான். ஒரு தரம் ஆச்சுது; இரண்டு தரம் ஆச்சுது. இந்த விசயமெல்லாம் பராபரியாக என் காதுலே விழுந்தது. அப்புறம் என்னாலேயும், எங்க வீட்டுக் காரியாலேயும் பொறுக்க முடியவில்லை. நாங்கள் ஒரு நாளைக்கு இவள் அப்பன் வீட்டுக்குப் போய் இந்தப் பெண்ணை இங்கே அழைத்துக் கொண்டு வந்து விட்டோம்."

இவ்வளவு தூரம் கூறிக்கொண்டே வந்த வையாபுரி சற்று நேரம் நிறுத்தி விட்டு ஆழ்ந்த யோசனையுடன் ஒரு நீண்ட பெருமூச்செறிந்தார். பின்னர் இடையே, "தூக்கம் வருதா தம்பி?" என்று ஒரு தரம் கேட்டுக் கொண்டார். அவன் தலை யசைக்கவும் தொடர்ந்து கூறினார்.

"ஏல் தம்பி, நீயுந்தான் பார்க்கிறியே, மான் குட்டி மாதிரி என் பேத்திக்கு என்ன குறை? கிழவனுக்குக் கட்டிக் கொடுக்கும் படியா இப்போ இவளுக்கு என்ன வந்து விட்டது? ஊ~ம்...அப்புறம் என்ன முடிவு செய்தேன்னு கேட்டியானால், என் மருமகன் கிட்டே சண்டை போட்டு 'ஏலே, ராஜா மாதிரி ஒரு பையனைப் பார்த்து நான் இதைக் கட்டிக் கொடுக்கல்லேன்னு நான் ஒரு உத்தமனில்லை என்று சபதம் கூறிக் காளியாத்தாள் மேலே ஆணையும் வெச்சுட்டு வந்துட்டேன். அந்தப் பாவிப் பயல் சும்மா இருந்தானா? அவனும் எனக்கு எதிராகவே வீம்பு பேசிச் சபதமில்லே செய்திருக்கிறான்! அதோட, ரெண்டு வருஷமா நான் ஏற்பாடு செய்திருந்த பிள்ளைங்களை யெல்லாம் கலைச்சு, கண்ணாலத்தையே நிறுத்திப்பிட்டான். அதுலேருந்து, ஒரே வைராக்கியமாகத்தான் இருக்கிறேன். என்னவென்று கேட்டியானால், இந்தக் கலியாணத்தைக் கலியபெருமாள் கோயிலிலே கொண்டு போய் நடத்தி விடுகிறது என்று நிர்மாணித்திருக்கிறேன்."

தன் வார்த்தைகளை ஒருவாறு முடித்து விட்டதுபோல் பெரியவர் ராமலிங்கத்தின் முகத்தை உற்று நோக்கினார். பின்னர், "தம்பி, நானும் கொஞ்சம் வயசானவன்; நீயும் வாலிபமானதுனாலே, சங்கோசப்படறது நியாயம்தான். ஆகையினாலே, நான் ஒரு காகிதத்தை இந்த மாடத்துலே போட்டுட்டு உன்னே படுக்கப் போறேன். நீ அதுக்குப் பதிலெழுதி அதுலேயே வைச்சுடு. அப்புறம் மேலே பேசிக்கலாம். தம்பி, இன்னொண்ணும் கூடச் சொல்கிறேன். நீ உன் மனசுப்படி கூச்சமில்லாமல் எழுதலாம். என்ன, தெரிஞ்சுதா?" என்று கூறிக் கொண்டே எழுந்து அவனுக்குப் படுக்கை கொடுத்துவிட்டு உட்புறம் சென்றுவிட்டார். கொஞ்சம் விளக்கொளியைப் பெரிதாக்கி விட்டு ராமலிங்கம் அக்கடிதத்தை யெடுத்துப் பார்த்தான். "நான் ஒரு தாயற்ற ஊமைப் பெண்; எனக்கு இந்த உலகமே பாட்டனார்தான். அவருடைய ஆசியுடன் என்னை மணந்து கொள்ளத் தங்களுக்கு விருப்ப மிருக்குமா? தங்களுக்கு விருப்ப மில்லாமலிருப்பின், அது தங்களின் குற்ற மில்லை. அது இயற்கை—செங்கமலம்" என்ற மணி மணியான எழுத்துக்கள் அவனது இதயத்தின் அடிவாரத்தில் பதிந்தன! ராமலிங்கம் அதை ஆயிரம்தடவை படித்து விட்டான். அப்புறம்தான் வெள்ளி முளைத்து விட்டதே! பரபரப்புடன் சுருக்கமாக அந்த நாலு வரிகளையும் எழுதி மாடத்தில் போட்ட போது எங்கேயோ கிராமச் சேவல் கட்டியம் கூறிக்கொண்டிருந்தது!

ராமலிங்கத்தின் ஆனந்தமான வைகறைக் கனவைப் பாதியிலேயே குலைத்து விட்டார் பெரியவர்!

முதல் நாள் பழகியதைவிட இன்று ரொம்பவும் அந்நியோன்னியத்துடன் அவனிடம் நடந்து கொண்டார் வையாபுரி. முக்கியமாக, அவனிடமிருந்து ஒரு சத்தியமும் வாங்கிக் கொண்டார். அதாவது, தனக்குக் கலியாணம் என்பதை அவன் யாருக்குமே தெரிவிக்கக் கூடாது, தன் இலாகாவுக்கும் கூடத் தெரிவிக்கக் கூடாது. ஏதாவதொரு காரணத்தைக் குறிப்பிட்டுத் தான் ஒரு வார ரஜாவை யெடுத்துக் கொள்ளவேண்டும்.

ஆமாம். இந்த நிபந்தனைகள் அவனுக்கு ரொம்பவும் கடினமாகத்தா னிருந்தன.

போலீஸ் சார்ஜண்ட் துரை வெறியடைந்த வேங்கைபோல் குறுக்கும் நெடுக்குமாக உலாவிக் கொண்டிருந்தார். காரணம், மேலாவிலிருந்து அன்று அவருக்குக் கிடைத்திருந்த 'பிளாக் மார்க்' ஒன்று. கான்ஸ்டேபிள்களின் சாரமற்ற 'டைரி'களைப் பார்த்தது மற்றொன்று. இத்தருணத்தில் தான் ராமலிங்கம் தன் ஆனந்தமான 'கேம்ப் டியூடி'யை முடித்துக்கொண்டு வந்து சேர்ந்தான். அடுத்த கணம் சார்ஜண்ட் துரை அவன் மீது வேங்கையாகவே பாய்ந்தார்!

"என்ன ரீ தர்ட்டி ஒன்! எங்கேப்பா உன் டைரி? ஏதாவது விசயம் இருக்குதா?"

ராமலிங்கம் பதில் கூறாமல் தன் டைரியை எடுத்து அவரிடம் நீட்டினான். எதிர்பார்த்தபடியே வழக்கமான சீறல் அவரது கண்டத்திலிருந்தும் எதிரொலித்தது. "என்னப்பா, இந்த டைரி? தண்டச் சம்பளமா வாங்குறீங்க? நாலு நாளா கொள்ளிடக் கரையைச் சுத்தி வந்து நரி வேட்டையாடினியா? இல்லே போலீஸ் வேட்டையாடினியா? கடைசியிலே 'நில் ரிபோர்ட்டு'த்தானே?" என்று கூறிக்கொண்டிருக்கும்போதே அவன் டைரி அந்தரத்தில் பறந்தது!

அவன் பதிலொன்றும் கூறாமலே, கீழே கிடந்த தன் டைரியைக் கையில் எடுத்துக் கொண்டு தன் இடத்தில் வந்து அமர்ந்தான். இந்தச் சந்தர்ப்பத்தில் அந்த முரட்டுத் துரையிடம் எப்படித் தன் 'லீவு' விண்ணப்பத்தைச் சேர்ப்பது என்று அவன் மனம் குழம்பினான்.

மறுதினம் சார்ஜண்டு துரையிடம் அவ்வளவு கடுமையில்லை. தன் அறையில் சாவதானமாக உட்கார்ந்து கொண்டு ஏதோ யோசித்துக் கொண்டிருந்தார். சமயமறிந்த ராமலிங்கம் அவசரம் அவசரமாகத் தன் லீவு விண்ணப்பத்தை எழுதித் தன் சட்டைப் பைக்குள் தயாராக வைத்துக் கொண்டான்.

"ராமலிங்கம்!"—இவ்வாறு அதிசயமாகப் பெயரைச் சொல்லி சார்ஜண்ட் துரை அவனை அழைத்தபோது, அவன் உள்ளம் சந்தோஷத்தினால் துள்ளியது. அவரெதிரில் வந்து கம்பீரமாக ஒரு 'சல்யூட்' அடித்து விட்டு நின்றான்.

துரை சற்றுக் குழம்பினார். பின்னர், "என்ன அப்பா? உன்னுடைய ஒத்தாசை எனக்குக் கொஞ்சம் தேவை. நீதான் அதுக்குச் சரியான ஆளு!" என்றார்.

"என்னுங்க?" என்று கேட்டான் பணிவுடன் ராமலிங்கம்.

"என்னுடைய சொந்த வேலை; ரொம்பவும் முக்கியமான காரியம் ஒண்ணு இருக்குது. வருகிற பதினாறும் தேதி உனக்கு லீவு தருகிறேன்; நான் சொல்லுகிற இடத்துக்குப் போய் ஒரு காரியம் செய்யணும்!"

அவன் குழம்பினான். ஏனெனில், அவனுடைய கல்யாணம் வருகிற மாதம் பதினேழாம் தேதிதான் நிச்சயிக்கப் பட்டிருந்தது!

ராமலிங்கம் அசட்டுச் சிரிப்புடன் தன் காகிதத்தை எடுத்து அவரிடம் நீட்டிக் கொண்டே "திருப்பதிக்குப் போகணுங்க; ஒருவார லீவுக்கு—" என்று முற்றுப் பெறாமல் நிறுத்தினான். அவர் அக் காகிதத்தைப் பார்த்துவிட்டு, மீண்டும் சிந்தனையிலாழ்ந்தார். பின்னர், "அது சரி, இதை அடுத்த வாரம் எடுத்துக் கொள்ளேன்" என்றார்.

இதை அவனால் எப்படி ஒப்புக்கொள்ள முடியும்? அவரது முகத்தை நோக்கிச் சற்று தைரியத்துடனேயே கூறினான்: "சொந்தக்காரங்கள் ஏற்பாடெல்லாம் செய்துட்டாங்க; நான் மாத்தறத்துக்கு இல்லீங்க!"

துரை ஒருதரம் நீண்ட பெரு மூச்செறிந்தார். "சரி, நான் என்னமோ நினைச்சேன்... 'த்ரீ நாட் எய்ட்'டையாவது கூப்பிட்டுக்கிறேன்" என்று முடித்துக் கொண்டே அவனது மனுவை வாங்கிக் கொண்டார்.

போலீஸ் காம்பவுண்டைக் கடந்து வரும்போது, ராமலிங்கத்தின் உள்ளம், 'ஒரே இரவில் நான்கு கொலையாளிகளைப் பிடித்து விட்டது'போல் புளகாங்கித மடைந்தது.

குறிப்பிட்ட சுபமுகூர்த்தத்தில், கலியப் பெருமான் சன்னதியில், செங்கமலத்தின் கழுத்தில் மூன்று முடிச்சுகளை ராமலிங்கம் போட்டுக் கொண்டிருக்கும் போதெல்லாம், வையாபுரியின் பூட்டியிருந்த வீட்டினெதிரில் திமிலோகம் நடந்து கொண்டிருந்தது! செங்கமலத்தின் தகப்பன் தன் சகாக்களுடன் நின்று அட்டகாசம் செய்து கொண்டிருந்தான்.

அன்று மாலை புது மணமக்கள், தம் குடும்பம், புரோகிதர் சகிதம் வையாபுரி வண்டியை விட்டு இறங்கும் போது, யாவரும் திடுக்குற்றுத்தான் நின்றனர். ஆனாலும், வையாபுரி இதை எதிர்பார்த்ததுதானே?

"என்ன தம்பி. சௌக்கியமா? ஏதோ 'இவர்'னு தெய்வ சங்கல்பத்துலேதான் இத்தக் கண்ணாலம் நல்லபடியா நிறைவேறிச்சு!" என்று கூறிக்கொண்டே, ராமலிங்கத்தை நோக்கி, "ஏன் தம்பி, உங்க மாமனாரு வந்திருக்கிறாரு! இரண்டு பேருமா போய்க் காலுலே விழுந்து கும்பிடுங்க!" என்றார் வையாபுரி. அவரது தொனியில் வெற்றிச் செருக்கும், மகிழ்ச்சியும் பொங்கின.

ராமலிங்கம் ஒரே கணத்தில் எல்லாம் அறிந்து கொண்டு விட்டான். அவன் இதயத்தில் வெட்கம், ஆச்சரியம், ஏன்? ஓரளவு பயமுங்கூடப் போரிட்டுக் கொண்டிருந்தன.

சார்ஜெண்ட் துரைக்கும் ஒரே ஆச்சரியமாகத்தான் இருந்தது. இது அவர் சிறிதும் எதிர்பாராத தாக்குதல் அல்லவா? ராமலிங்கமே தமக்கு மருமகனாக வருவான் என்பதை அவர் கனவில் கூட நினைத்ததில்லையே! சார்ஜண்டு துரையின் கண்களிலிருந்து ஆனந்தபாஷ்பத் துளிகள் உருண்டு விழுந்தன!

அன்றிரவு நடந்த விருந்துக்குப் பின் ராமலிங்கத்தின் பெண் வேட்டையைப் பற்றி ஒரு பெரிய பிரசங்கமே செய்து கொண்டிருந்தார் மாமனாரான சார்ஜண்டு துரை!

# கள்ளிக்கோட்டை பண்டு லிமிடெட்

(இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்டது)

கிளை ஆபீஸ்:

9, செம்புதாஸ் தெரு, மதராஸ்-1

தந்தி: 'KALLIFUNDS'

வியாபாரிகளுக்கு ஓர் வரப்பிரசாதம்—ஏழை, பணக்காரர் யாவரும் சேர்ந்து சேமித்து நல்ல லாபமடையும் மாதாந்திர சிட்டுகள்.

தீபாவளி விழா நெருக்கடியிலும் அக்டோபர் வரிசையில் இடம் பெறாத விண்ணப்பதாரர்களின் நலனை உத்தேசித்து எங்கள் நவம்பர் மாத சீட்டு வரிசையை ஆரம்பித்துள்ளோம் என்பதை மகிழ்ச்சியுடன் அறிவித்துக் கொள்ளுகிறோம்.

நவம்பர் மாதச் சீட்டு வரிசை ([illegible])

## மாத சீட்டு வகைகள்:

சந்தா செலுத்த கடைசி தேதி: 20-11-52

முதல் ஏலத் தேதி: 23-11-52

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| D | ரூ. 50/- | ரூ. 1500/- |
| E | ரூ. 25/- | ரூ. 750/- |
| F | ரூ. 20/- | ரூ. 600/- |
| G | ரூ. 15/- | ரூ. 450/- |
| H | ரூ. 10/- | ரூ. 300/- |
| 30 சந்தாதாரர்கள் | | 30 மாதங்கள் |

தெளிவாக விலாசத்தை எழுதி விண்ணப்பித்துக் கொள்பவர்களுக்கு, கம்பெனியின் நிபந்தனைகள் வகையரா இலவசமாக அனுப்பப்படும். ரூ. 25/-க்கும் அதற்கு மேற்பட்ட தொகைக்கும் இந்தியாவிலுள்ள அங்கீகரிக்கப்பட்ட பாங்குகளின் பேரில் செக் பெற்றுக் கொள்ளப்படும்.

சீட்டில் சேர்த்துக் கொள்வதிலோ மறுப்பதிலோ கம்பெனிக்குப் பூரண அதிகாரம் உண்டு. வியாபாரிகளுக்கான விசேஷ சலுகைகளுக்கு சட்டம் 21ஐ கவனிக்கவும்.

(போர்டார் உத்திரவுப்படி)

எம். வி. விஸ்வநாதன், மானேஜிங் டைரக்டர்




# 40. யோகமுத்திரா

## பழகும் விதம்

மேலே இருக்கும் முதல் சித்திரத்தில் உள்ளபடி பத்மாசனம் போட்டு உட்காரவும். இரண்டு உள்ளங்கைகளையும் இரண்டு குதிகால்களின்மேல் வைத்து இரண்டாவது சித்திரத்தில் உள்ளபடி வைத்துக் கொள்ளவும். நிமிர்ந்து மார்பு விரித்து நேராய் உட்காரவும். நுரையீரல் நிறைய மட்டும் நன்றாய் மூச்சை இழுத்துக் கொள்ளவும். இப்பொழுது மூச்சை மெதுவாய் விட்டுக் கொண்டே முன் பக்கம் குனிந்து தரையை மூக்கினால் தொடவும். இந்த நிலையை அடுத்த பக்கத்தில் வெளியாகி யிருக்கும் சித்திரத்தில் பார்க்கவும். இந்நிலையில் ஏழு முதல் பத்து எண்ணும் வரை இருக்கவும். இப்படி இருக்கும் போது மூச்சைச் சௌகரியப்படி விடவும் வாங்கவும் செய்யலாம். மூச்சை அடக்க வேண்டுமென்பதில்லை. பின் மூச்சை இழுத்தபடியே நிமிர்ந்து இரண்டாவது சித்திர நிலைக்கு வரவும். இம்மாதிரி அவரவர்களுக்கு வேண்டியபடி மூன்று முதல் ஆறு தடவைகள் வரை தொடர்ந்து செய்து வரலாம்.

இது சொல்லுவதற்குச் சுலபமாய் இருந்தாலும், செய்வதற்கு அவ்வளவு சுலபமாய் வந்து விடாது. சிலருக்குப் பத்மாசனமே முதலில் சரியாய்ப் போட வராது. அப்படிப் பட்டவர்கள் பத்மாசனம் போட முயற்சித்துக் கொண்டே யிருக்க வேண்டும். அது வரை சாதாரணமாய் நாம் உட்காருவதைப் போலவே உட்கார்ந்து இரண்டு முழங்கால்களுக்கு மேல் இரண்டு உள்ளங்கைகளை வைத்து அழுத்திக் கொண்டு முன்னுக்குக் குனிந்து மூக்கினால் தரையைத் தொடலாம். அல்லது கைகளைப் பின்னுக்குக் கட்டிக் கொண்டு முன் குனிந்து மூக்கு தரையைத் தொடலாம். அல்லது சுகாசனத்தில் நாம் உட்காருவது போல் இருக்கும் போது பாதங்கள் துடைகளுக்குக் கீழ் இருக்கும். அதன் பெரு விரல்களைக் கைகளினால் பிடித்துக் கொண்டும் குனியலாம். இவைகளெல்லாம் பத்மாசனம் போட வராதவர்களுக்குத் தான். ஆனால் இடையிடையே பத்மாசனமும் போட்டுப் பார்த்துக் கொள்ள வேண்டும். பத்மாசனம் போட வந்தாலும் சிலருக்குச் சித்திரத்திலுள்ளபடி கைகளைக் குதிகால்களின் மேல் வைத்துக் குனிய வராது அதற்காக முயற்சியைக் கைவிடாது பல தடவை செய்து பார்க்க வேண்டும். சரியாய்ச் செய்ய வரும் வரை கைகளைப் பின்னுக்குக் கட்டிக் கொண்டும் குனியலாம். இவ்வாறு சில நாட்கள் தொடர்ந்து செய்து வந்தால் சில தினங்களில் நன்கு செய்ய வரும்.

பத்மாசனம் போட்டபடி குனிவதால் கால்கள் ஒன்றை ஒன்று அழுத்தி வலி எடுக்கும். வலித்தால் பத்மாசனத்தைக் கழற்றி வலியுள்ள இடத்தில் சிறிது தடவி விட்டுக் கொண்டு மறுபடியும் போட்டுப் பழகலாம். எந்த ஆசனம் பழகினாலும் முதலில் வலிக்கத்தான் செய்யும். விடாமல் பழகிவந்தால் ஏழெட்டு நாட்களில் வலி மறைந்துவிடும். சிலருக்கு முன்னுக்குக் குனிந்து மூக்கால் தரையைத் தொட முயற்சி செய்யும் போது புருஷ்ட பாகம் தூக்கிக் கொள்ளும். அப்படித் தூக்காமல் அழுத்தமாய் உட்கார்ந்து பழக வேண்டும். சிலருக்குத் துடை கனமாய் இருப்பதால் முன் குனிந்து தரையைத் தொடக் கஷ்டமாயிருக்கும். சிலருக்கு வயிறு பெருத்து இருப்பதால் குனிய முடியாமல் தடுக்கும். அப்பேர்ப்பட்டவர்கள் மற்ற ஆசனங்களைச் செய்து

வந்தால் சில நாட்களில் நரம்பு தசைகளின் பிடிப்பு விட்டு, வயிறு கரைந்து நன்றாய்ச் செய்ய வரும். வரவில்லையே என்று விட்டு விடக் கூடாது. அவர்களால் முடிந்தவரைக்கும் செய்தாலும் பூர்ண பலன் உண்டு. சிலருக்கு உடல் ஒல்லியாய் இருக்கும். ஆனால் முதுகெலும்பு கட்டை பாய்ந்திருப்பதால் முன்னுக்குச் சரிவரக் குனிய வராது. அவர்களும் விடா முயற்சியுடன் பழகி வந்தால் சில நாட்களில் நன்றாய்ச் செய்ய வரும். முதலில் நெற்றியினால் தரையைத் தொட வந்த பின் மூக்கினால் தொடப் பழக வேண்டும். இம்மாதிரி சுலபமாய்ச் செய்ய வந்த பின் உடம்பைத் தொடப் பழக வேண்டும். நன்கு பழக்கமான பின் யோக முத்ரா நிலையில் கால் முதல் அரை நிமிஷம் வரைக்கும் கூட லேசாய் மூச்சை விட்டுக் கொண்டும் இழுத்துக் கொண்டும் இருக்கலாம்.

யோக முத்திராவை வழக்கமாய்ச் செய்யும் ஸ்திரீகள் கர்ப்பமானால் இரண்டு மாதங்கள் வரைதான் செய்யலாம். அதன் பின் கைகளைக் குதிகால்களின் மேல் வைக்காமல் ஒரு மாதம் செய்யலாம். அதன்மேல் இந்த ஆசனத்தைச் செய்யக் கூடாது. ஆசனங்களையே செய்து பழக்கமில்லாதவர்கள் கர்ப்பகாலத்தில் இந்த யோக முத்திராவைப் பழகவே கூடாது. பத்மாசனத்தில் மட்டும் உட்காரலாம். அதுவும் ஏழுமாதம் வரைக்குந்தான் பத்மாசனத்தில் அவ்வப்போது உட்காரலாம்.

வயிற்றில் ஆப்பரேஷன் செய்து கொண்டவர்கள் யோகாசன நிபுணர்களின் ஆலோசனையின் பேரில்தான் இந்த ஆசனத்தைச் செய்யலாம். குடல் பிதுக்கம் அதாவது இரணியா நோய் உள்ளவர்கள் இதைச் செய்யக் கூடாது.

## கிடைக்கும் பலன்கள்

குனிந்து முன் பக்கம் வளைவதால் முதுகெலும்பின் முறுக்கு நீங்குகிறது. முதுகெலும்புக்கு இளமை ஏற்படுகிறது. அதன் வழி நரம்புகளும், தண்டு நரம்புகளும் இழுக்கப்படுகின்றன. அதனால் நரம்புகள் உணர்ச்சி கொண்டு அதனதன் வேலைகளைச் செவ்வனே செய்யும். சுறு சுறுப்பு, ஆரோக்கியம் எப்பொழுதும் நிலைத்து நிற்கும். முகத்திற்கு அழகு தேஜஸ் ஏற்படும். இடுப்பு வளைவதால் அதன் சம்பந்தப்பட்ட நரம்புகள் ஆரோக்கியம் அடையும். சாதாரணமாகப் பத்மாசனத்தில் உட்கார்ந்தாலே எவ்வளவோ பலன் உண்டு. அதிலும் கைகளைக் குதிக்கால்களின் மேல் வைத்துக் குனிவதால் வயிற்றிலுள்ள உறுப்புகள் நன்றாய் நசுக்கப்படுகின்றன. மண்ணீரல், கல்லீரல், பித்தப்பை, பாங்கிரியாஸ், சிறுகுடல், பெருங்குடலின் மூலைப் பாகங்கள் நசுக்கப்படுகின்றன. சிறு குடலைச் சுற்றிப் பெருங்குடல் ஒரு பெரிய வட்டமாக வருகின்றது. அவ்வட்டத்தின் ஆரம்பத்தில் சிறுகுடல் பெருங்குடலுடன் கலக்கின்றது. அங்கு தொங்குக் குடல் 'அப்பெண்டிஸைட்டிஸ்' ஒன்று வால்போல் இருக்கிறது. அந்த இடம் இவ்வாசனம் செய்யும் போது அழுங்குகிறது. அதனால் அங்கு அழுக்குகள் சேராதவாறு சுத்தமாக்கப்படுகிறது. அங்கு அழுக்குகள் சேருவதனால் தான் மலக்குடல் கட்டி 'அப்பெண்டிஸைட்டிஸ்' வருகின்றது. மத்ஸ்யாசனம் தினசரி தவறாமல் செய்து வருகின்றவர்களுக்கு மலக்குடல் கட்டி உண்டாவதற்கு ஏதுவே இல்லை. அப்படி யிருந்தாலும், ஆரம்ப நிலையிலுள்ளவர்கள் யோக முத்ரா செய்தால் போய்விடும். சர்வாங்காசனம் இதற்குச் சாலச் சிறந்தது. என்றாலும் யோக முத்திராவும் இதற்குத் துணை செய்யும். சர்வாங்காசனம் முற்றிய மலக்குடல் கட்டி உள்ளவர்களையும் குணமாக்கவல்லது என்று முன் அத்தியாயங்களில் விளக்கியுள்ளேன்.

வலது பக்கம் அழுத்துவதைப் போலவே இடது பக்கமும் அழுத்தப் படுகின்றதல்லவா! அந்த இடந்தான் இறங்கும் குடல் கடைசிபாகம் இருக்குமிடம். மலச்சிக்கலுள்ளவர்கள், மற்றும் ஒரு நாள் இரண்டு நாள் ஆனாலும் வெளிக்கே போக முடியவில்லை என்று சொல்பவர்கள் கூட இந்த யோக முத்திராவை ஏழு எட்டு தரம் நன்றாய்ச் செய்தார்களானால் தன்னால் வெளிக்குப் போக வேண்டுமென்ற உணர்ச்சி ஏற்படும். பொதுவாகவே, எல்லா ஆசனங்களும் மலச்சிக்கலை விலக்கும். ஒவ்வொரு ஆசனம் ஒவ்வொரு விதமாய் வேலை செய்து மலச்சிக்கலை விலக்கும். ஆனால் சிலருக்குப் பெருங்குடலின் வேறு எல்லாப் பாகங்களும் சீர்கெட்டுக் கடைசியில் எல்லாம் சேர்ந்து வெளிக்குப் போகும் இடத்தில் இறுகி அடைபட்டுப் போவதுண்டு. அப்பேர்ப்பட்டவர்களுக்கு இந்த யோக முத்திராவானது நல்லதோர் மாற்று ஆகும். யோக முத்திராவில் குனிந்து குனிந்து குனிந்து முகத்தால் தரையைத் தொடும் போது



அந்த மலம் இறுகி அடைபட்ட இடம் பல தடவை அழுந்தி கசக்கப் படுகிறது. எனவே மலம் கலங்கி அந்தக் குடல் பாகம் விழிப் படைந்து உடனே வெளிக்குப் போகத் தூண்டும்.

மலச்சிக்கல் பெருங்குடலின் பல இடங்களில் ஏற்படும். அதற்குப் பல காரணங்கள் உண்டு. அக்காரணங்களைக் கண்டு ஒழிக்க வேண்டும்.

சில மலச்சிக்கலுக்கு எந்த ஆகார சீர்திருத்தம் செய்தாலும் விலகாது. காரணம் வழக்கமாய் மலச்சிக்கல் ஏற்பட்டு ஏற்பட்டு அந்த இடத்தில் மலம் வந்ததும் அதை நகர்த்தித் தள்ளக் குடலுக்குப் போதிய சக்தி யில்லாமையே காரணம். அப்படிச் சக்தியற்றுப் போகும்போது அழுக்குகள் வெகு நிதானமாய் நழுவுகின்றது. அதற்குள் அப் பாகத்திலுள்ள குடல் சுவர்கள் அம் மலத்திலுள்ள சாற்றை இழுத்து விடுகின்றன. உடனே மலம் இறுகி சிக்கலாகி விடுகிறது. இதை ஆகாரத்தினாலும் சீர் செய்ய முடியாது. எந்த பாகத்துக் குடல் இச் சிக்கலுக்குக் காரணம் என்று தெரிந்து அந்த பாகத்துக் குடலுக்கு உணர்ச்சி ஊட்டும் ஆசனங்களைப் பயின்றால் உடனே மலச்சிக்கல் விலகும். தீராத மலச் சிக்கல் தீரும்.

இதை விட்டுவிட்டு எந்த மலச்சிக்கலாய் இருந்தாலும், மலமிளக்கி மருந்துகளைச் சாப்பிட்டு விட்டால் சரியாய்ப் போய்விடும் என்று எண்ணி அநேகர் இம்மருந்துகளைச் சாப்பிடுகின்றனர். அதற்குத் தகுந்தாற்போல் இம்மருந்து வகைகள் இப்பொழுதெல்லாம் எல்லோரும் விரும்பிச் சாப்பிடும் படியாக இனிமையாய்ச் செய்து பொது மக்களை மயக்குகின்றனர். சாக்லேட்டுகள் என்ன! சுவைக்கும் மிட்டாய்கள் என்ன! பாதாம் ஹல்வாக்கள் என்ன! இம்மாதிரி பல ரூபத்தில் கஷ்டமில்லாமல் சாப்பிடக் கூடியதாய்ச் செய்து வருகின்றனர். மக்கள் முன்பின் யோசியாமல் மலச்சிக்கல் என்றால் உடனே அவைகளை வாங்கி உபயோகிக்கின்றனர். முதலில் ஒரு மாத்திரை அல்லது ஒரு மிட்டாயில் விலகின மலச்சிக்கல் நாளடைவில் மூன்று நான்கு உபயோகித்தாலும் ஒரு தடவை கூட சாதாரணமாய் வெளிக்குப் போகமாட்டேன் என்கிறது. உண்மையில் இது மலமிளக்கியாய் இருந்தால் மூன்று நான்கு சாப்பிட்டும் சிலருக்கு இளக்காமல் இருப்பானேன்! இதற்குச் சரியான பெயர் இடவேண்டுமானால் மலமிளக்கி என்பதற்குப் பதில் மலச்சிக்கலை உண்டாக்கும் மருந்துகள் என்று பெயரிட்டால் பொருத்தமாக இருக்கும்.

மூன் பல தடவை, தலைவலி, மற்ற வலிகளுக்குச் சாப்பிடும் மருந்துகளைப் போலவே இதுவும் நாளடைவில் மலங்களை இளக்குவதற்குப் பதில் மலங்களைக் கட்ட உதவுகிறது. இது அவரவர்களின் குடல் கோளாறே தவிர, மருந்துக் கோளாறல்ல என்று சிலர் வக்காலத்து எடுத்துப் பேசலாம். சரி; குடல் கோளாறு என்று தெரியும் போது அதற்கான பயிற்சி கொடுத்துப் பரிகாரம் செய்வதற்கென்ன! சோம்பலே இதற்கெல்லாம் காரணம். மக்களின் மனப்பான்மை மாற வேண்டும். எடுத்ததற்கெல்லாம் மருந்துகளைச் சாப்பிடும் வழக்கம் ஒழிய வேண்டும். மகாத்மா காந்தியடிகள் கூட "நோயினால் மக்கள் மடிவதை விட மருந்தினால் மடிபவர்கள்தான் அதிகம்" என்று பல தடவை சொல்லியிருக்கிறார். எனவே காரண மறிந்து அதைப் போக்கச் சரியான முயற்சி செய்வதுதான் வாழும் வழி. (தொடரும்)


இருமல்களுக்கு
ஸிரோலின்
உட்கொள்ளுங்கள்!
SIROLIN


டன்லப்
மீது
சுக
பிரயாணம்
செய்யுங்கள்
TRADE MARK
DCX-2T

# மாமியாரின் கருணை

## புஷ்யன்

கமலத்தின் உள்ளத்தில் விடுவிக்க முடியாத பெரும் பிரச்னை ஒன்று குடிகொண்டிருந்தது. அவள் அதனால் அடைந்த மனவேதனை சொல்லுந்தரமன்று. எப்படி விடுவிப்பது என்று யோசித்து, யோசித்து மனம் புழுங்கினாள். அது ஒரு விசித்திரமான பிரச்னை. வேறொருவளாய் இருந்தால் அதை ஒன்றும் பிரமாதமாக எண்ணியே இருக்கமாட்டாள். உண்மையில் அது மனத்தை வாட்டும் புதிர்தானா என்றால் கமலத்தின் நோக்கில் அது ஒரு எலும்புருக்கி நோய் போலத்தான் இருந்தது என்று சொல்ல வேண்டும். ஆனால் வேறு எந்தப் பெண்ணாய் இருந்தாலும் அப்படிக் கிடைத்ததற்கு ஆனந்தக் கூத்தாடுவாள் என்பதில் சந்தேகமில்லை. அப்படி என்னதான் கமலத்துக்கு மட்டும் வேதனை தரும் பிரச்னை என்றால் அது அவள் அருமை மாமியார்தான்.

கமலம்கூட சில சமயம் தன் அறிவீனத்தை நினைத்து, நினைத்து வருந்துவாள். இதற்குப் போய் ஏன் என் மனம் இப்படிக் கஷ்டப்படுகிறது என்று ஆச்சரியம்கூட அடைவாள்.

முதலில் அவள் அதை அலட்சியப் படுத்தித்தான் வந்தாள். அதை மனத்தில் ஏற்றுக்கொள்ளக்கூட இல்லை. வெகு சகஜமாகப் பாவித்துக் கணவனுடனும், மாமியாருடனும் பாங்காய்க் குடித்தனம் நடத்தி வந்தாள். ஆனால் அந்தப் பிரச்னையின் விதை அவள் உள்ளத்தில் மெள்ள ஒருநாள் ஊன்ற ஆரம்பித்தது. அதை யாரிடமும் தெரியப்படுத்தாமல் வைத்திருந்தாள். உண்மையில் அதன் விதை ஊன்றிக் கொண்டது அவளுக்கே கூடத் தெரியாது. அது கொஞ்சம் கொஞ்சமாக வேர் விட்டது. நல்ல உரம்போடுவது போன்ற சம்பவங்கள் எல்லாம் நடந்ததாக எண்ணிக் கொண்டாள்.

'இதற்கென்ன செய்வது?' என்று புரியாமல் எத்தனையோ நாட்கள் இரவில் கண்ணீர் விட்டழுது அழுது — கணவன் சர்வேசுவரனுக்குக்கூடத் தெரியாமல்—தலையணையை நனைத்திருக்கிறாள். சர்வேசுவரனுக்கும், அவள் நடத்தை சரியாகப் புரியவில்லை. வந்த புதிதில் கலகலப்பாக இருந்ததுபோல் இப்போது அவள் இல்லை. அவள் மனத்தில் ஏதோ வேதனை குடிகொண்டிருக்கிறது என்பதை மட்டும் எப்படியோ தெரிந்து கொண்டு அவளை அவ்வப்போது மிகவும் அனுதாபத்துடன் கேட்டிருக்கிறான். ஆனால் அவள் பதில் சொல்லவில்லை.

முதலில், அவளுடைய துன்பத்திற்குக் காரணம் ஒருவேளை பிறந்தக நினைப்பாயிருக்குமோ என்று நினைத்து அவளைப் பிறந்தகம் போய்க் கொஞ்ச நாட்கள் இருந்துவிட்டு வரும்படி சொன்னான். ஆனால் அவள் மறுத்து விட்டாள். பிறந்தகத்தை நினைத்து வருந்தவில்லை என்று பதில் கூறினாள்.

"பின் என்னதான் சொல்லேன்?"

"என்னவா ... அது ... அது ... ஒன்றுமில்லையே ... என்ன சொல்வதென்றே புரியவில்லையே..." என்று குழறினாள்.

"பயப்படாதே, கமலம்! சொல், அம்மா ஏதாவது சொன்னாளா?" என்று பரிவுடனும் பாசத்துடனும் கேட்டான்.

"ஊஹூம்,..." என்று தலையாட்டினாள். மறுபடி வாயில் துணியை வைத்து மூடி அழ ஆரம்பித்து விட்டாள்.

சர்வேசுவரனுடைய உள்ளம் மிகவும் வேதனையடைந்தது. புழுப்போல் துடித்தான். அவள் அவனுடைய நேச மனைவி. அவள் துன்பப்படுவது கண்டு அவனால் சகிக்க முடியவில்லை.

"கமலம் இப்படி உள்ளுக்குள்ளேயே குமுறிக் குமுறி அழுது என்ன பிரயோசனம்? என்னதான் உன் மனவேதனை என்று சொன்னால் நான் அதற்குப் பரிகாரம் தேடமாட்டேனா? என்னிடம் என்ன பயம் சொல்" என்று கேட்டான், அவளைத் தன் மார்பில் அணைத்துக் கொண்டே.

"என் மனத்தில் ஏதோ பெரும் பாரம் அழுத்துவதுபோல் இருக்கிறது. இன்னது தான் காரணம் என்று எனக்கே புரியவில்லை. உண்மையாய்ச் சொல்லப் போனால் ஒன்றுமே இல்லை. ஆனாலும் எனக்கு ஏனோ நினைத்து நினைத்து அழுகையும், துக்கமும் வருகிறது" என்று சொல்லி மறுபடியும் அவனுடைய தோளில் சாய்ந்து குலுங்கிக் குலுங்கி அழ ஆரம்பித்தாள்.

"கமலம் பேசாமல் படுத்துக் கொள். நாளைக் காலை டாக்டரை அழைத்து வருகிறேன். உடம்பில்தான் ஏதாவது கோளாறு இருக்க வேண்டும்," என்றான் சர்வேசுவரன்.

"வேண்டாம், வேண்டாம். டாக்டருக்கு என்ன தெரியும். உடம்பில் ஒன்றும் இல்லை. தயவுசெய்து ரகளை ஒன்றும் செய்து விடாதீர்கள்" என்று கூறிக் கண் கலங்கினாள்.

இப்படித்தான் நாட்கள் ஓடின. கமலத்தின் இதயக் குமுறல் நாளுக்கு நாள் பெருகி சூறாவளிக் காற்றுபோல் 'ஆ, ஊ' என்று அவளை அலைக்கத் தொடங்கிற்று.

வெகு நாட்கள் இது கமலத்தின் மாமியாருக்குத் தெரியாமலேயே இருந்து வந்தது. ஆனால் நாளாக ஆக அவள் தன் மருமகளின் மனத்தில் ஏதோ வேதனை இருப்பதை உணர்ந்தாள். ஆனால் அவளுக்கும் காரணம் புரியவில்லை. அதுவுமின்றி அவள் அதை வெகுவாகப் பாராட்டவில்லை. 'கணவன்,

மனைவிக்குள் என்னவோ, நாம் ஏன் அதில் தலையிட வேண்டும்' என்று இருந்துவிட்டாள்.

ஆமாம், உண்மையில் அவளுக்கு என்ன தான் குறை? குறை ஒன்றுமில்லையா? அவளுடைய வேதனை அகாரணமானதா? கமலத்தின் இருதய ஆழத்தில் அதற்குக் காரணமும் இருக்கத்தான் செய்தது. ஆனால் அதை இன்னதென்று விவரமாக வாய் விட்டுச் சொல்ல முடியாத விசித்திரமான மன வேதனையாக இருந்தது. காரணம் அவள் மாமியாரின் கருணையும், கமலத்திடம் அவள் கொண்டிருந்த அன்பும்தான் என்று சொல்ல வேண்டும். அத்துடன் அவள் மாமியாரிடம் இருந்த ஒருவிதமான விரக்தி பாவமுமாகும்.

கமலத்துக்கு அவள் மாமியாரிடம் அபார பக்தி, விசுவாசம், மரியாதையெல்லாம் இருந்தன. அத்துடன் கூடவே ஏதோ ஒருவித வெறுப்பும் இருக்க வந்தது. அந்த வெறுப்புத்தான் அவளை இப்படி ஓயா விசாரத்துக்கும் விவரம் புரியாத வேதனைக்கும் ஆளாக்கி வாட்டிக் கொண்டிருந்தது.

கமலம் புக்ககம் வந்ததும் கணவனின் அன்பையும், மாமியாரின் அபார வாஞ்சையையும் கண்டு பெரிதும் உவகைக் கடலில் ஆழ்ந்தாள். அவள் தாயில்லாப் பெண். தாய் அன்பை உணராதவள். மாற்றாந்தாயின் சிறு கொடுமைகளுக்கு ஆளானவள். அவளுடைய சிறிய தாயார் நல்லவள்தான். இருந்தாலும் அந்த வேற்றுமை எங்கு போகும்?



கடைக்காரர் :—என்ன வியாபாரம் பண்ணுகிறாய், தம்பி! அவர் நாளைக்குப் பணம் கொடுக்கிறேன் என்று சொல்லிச் செருப்பை வாங்கிக் கொண்டு போய் விட்டாரே! அவர் நாளைக்குப் பணம் தருவார் என்பது என்ன நிச்சயம்!

பையன் :—அவர் நிச்சயம் வருவாருங்க! வலது கால் செருப்பிலேயே அல்லவா ஒரு ஜோடி கட்டிக் கொடுத்திருக்கிறேன்!

அதனால் அவள் உள்ளம் ஒருவித ஏக்கத்துடன் இருந்தது. புக்ககம் புகுந்ததும் மாமியாரின் நல்ல குணத்தைப் பார்த்துத் தன் பாக்கியத்தை நினைத்து மிகவும் பெருமையடைந்து வந்தாள்.

கமலத்தின் சுபாவம் ஒரு நிமிடமும் சும்மாயிருக்க முடியாது. ஏதாவது காரியம் செய்து கொண்டே யிருக்க வேண்டும். அப்படிப் பழக்கி விட்டாள் அவளுடைய சிற்றன்னை. கணவன் வீடு வந்ததும் அப்படியே பம்பரம் போல் சுழன்று வேலை செய்ய ஆசை கொண்டாள். தன் கணவனுக்கு அறுசுவை யுண்டி செய்து படைக்க ஆவலுடன் இருந்தாள். மாமியாரை ஹாய்யாக ஓய்வு எடுத்துக் கொள்ளச் செய்து தான் பணிவிடை செய்து மகிழ்விக்க வேண்டுமென்று நினைத்தாள்.

ஆனால் கமலத்தின் மாமியார் பழங்காலப் பேர்வழி. வயது ஐம்பதாகியும் இன்னும் கட்டுத் தளராமல் இருந்தாள். அவளும் ஏதாவது துருதுருவென்று காரியம் செய்து கொண்டே இருப்பாள். மூன்றே பேர் இருந்த அந்த வீட்டில் வேலை ஒன்றும் அதிகமாக இல்லை. அதனால் அனேகமாக சுற்றுக் காரியங்கள்கூட அவளே செய்து கொண்டு, கமலத்தைக் காரியம் செய்ய விட மாட்டாள்.

அப்படி ஏதாவது காரியம் செய்யச் சொன்னாலும் அதை அவளை நேரில் கூப்பிட்டுச் சொல்ல மாட்டாள். மூன்றாம் பேர்வழிக்குச் சொல்வது போல், "அதைச் செய்தால் என்ன?" என்பாள்.

கமலம் தன் மாமியாரை அன்னையாகவே பாவித்துத் தன் ஆறுதலைப் பெற ஆசைப் பட்டாள். ஆனால் மாமியாரின் ஒருவிதமான சுபாவம்—அதிகம் யாருடனும் ஒட்டாதிருப்பது—அவளை ஏதோ இல்லாத ஒரு கவலைக்கு உள்ளாக்கி விட்டது. சொல்லும் எல்லா காரியங்களையும் செய்து கொண்டிருந்தும் ஏன் மாமியார் இப்படி இருக்கிறார் என்று புரியாமல் தவித்தாள். மாமியார் அவளைக் கடிந்து கொள்வதில்லை. ஒரு வார்த்தைகூட கூறியதில்லை. இருந்தும் மாமியாரின் குணம் அவளுக்கு ஏதோ விவரம் புரியாத மன வேதனையை உண்டாக்கியது.

சர்வேஸ்வரன் ஆபீஸ் போய்விட்டால் பகலெல்லாம் இருவரும் கொட்டுக் கொட்டென்று உட்கார்ந்திருப்பார்கள். ஏதாவது புத்தகம் இருந்தால் படிப்பாள் கமலம். அதை ஆவலுடனேயே கேட்பாள் அவள் மாமியார். ஆனால் ஏதும் புத்தகம் இல்லாவிட்டால் ஒருவித பேச்சும் இராது.

தன் தாய்க்காக ஏங்கிய உள்ளத்திற்கு ஆறுதலாக இருப்பாள் என்று எதிர் பார்த்ததற்கு மாறாக மாமியாரின் இந்தப் பற்றற்ற தன்மை அவளுக்குப் பெருத்த ஏமாற்றத்தையும் ஏக்கத்தையும் உண்டு பண்ணி விட்டது.

எல்லாவற்றிற்கும் மேலாக அவளுடைய அசாதாரணமான பிடிவாத குணம் கமலத்

தின் துயரத்தை அதன் எல்லையில் கொண்டு போய்த் தள்ளியது. சினிமாவுக்கோ, நாடகத்துக்கோ போகலாமென்று சர்வேஸ்வரன் இருவரையும் அழைப்பான். கமலத்தைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. அவனுடைய மாமியார் எனக்கெதற்கடா என்பாள். கடைசியில் கமலமும் சர்வேசுவரனும் மட்டும் போவார்கள். முதலில் கமலத்துக்கு இது மிகவும் ஆனந்தமாக இருந்தது. ஆனால் நாளடைவில் மாமியாரும் வரமாட்டேன் என்று சொல்லும்போது தானும் போகக் கூடாது என்று எண்ணம் உண்டாயிற்று. மேலும் மாமியார், "எனக்கெதற்கு சினிமாவும், டிராமாவும்? அந்தக் காசு இருந்தால் ஒருநாள் கறிகாய்க்காகும்" என்பாள்.

*　　*　　*

அன்று கமலத்தின் வேதனை உச்சத்தையடைந்தது. சர்வேஸ்வரன், பாட்டுக் கச்சேரிக்குப் போக கமலத்தையும், தன் தாயாரையும் அழைத்தான். அவன் தாயாருக்குப் பாட்டு என்றால் பிடிக்கும். எவ்வளவோ கச்சேரிகளுக்குப் போகவும் போயிருக்கிறாள். ஆனால் அன்றைய தினம் என்னவோ அவள் "எனக்கென்னத்துக்கடா பாட்டும், கச்சேரியும். ராகம் தெரிகிறதா. ஒன்றா? என்றாலே இரண்டு ரூபாய் ஏன் தண்டம் ஆகணும், நீங்கள் போய்விட்டு வாருங்கள்" என்றாள்.

இது சர்வ சாதாரணமான நிகழ்ச்சிதான். என்றாலும் காலத்தின் அர்த்தமற்ற வேதனையைக் கிளறி விட்டது.

"சரி கமலம் வா, நாமிருவரும் போகலாம்" என்றான் சர்வேஸ்வரன், தன் தாயின் சுபாவத்தை உணர்ந்து.

"நானும் வரவில்லை" என்றாள் கமலம்.

"ஏன் உனக்கும் என்ன வந்துவிட்டது?" என்று கோபத்துடன் கேட்டான்.

"வரவில்லை என்றால் வரவில்லை" என்றாள் தீர்மானமான குரலில்.

"நல்ல சனியன் வந்து வாய்த்தது" என்று முணு முணுத்துக் கொண்டே துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு கடற்கரைக்குப் போய் விட்டான். இரவு எட்டு மணிக்கு வந்தான். வந்ததும் சாப்பிட்டு விட்டுப் போய்ப் படுக்கையில் படுத்தான்.

கமலம் எல்லா காரியங்களையும் முடித்துக் கொண்டு ஒன்பதரை மணிக்குப் படுக்கச் சென்றாள். சர்வேஸ்வரன் தூங்கிக் கொண்டிருந்தான். பாலைக் கொடுக்க அவனை எழுப்பினாள். அவன் எழுந்து ஒரு வார்த்தையும் பேசாமல் மளமளவென்று பாலைக் குடித்து விட்டு மறுபடி படுத்து விட்டான்.

அவள் ஒரு பாயை எடுத்து விரித்துப் போட்டுக் கையைத் தலையணையாக வைத்துக் கொண்டு படுத்தாள். அவளுடைய மனம் எப்போதும் போல் குமுற ஆரம்பித்தது. அவள் இதுவரை சர்வேஸ்வரனுடைய ஆணை, விருப்பத்திற்கெதிராகப் போனதில்லை. ஆனால்



டெலிபோனில் பேசுபவர்:— ஹலோ!......மிஸ்டர் கணபதியா?

பதில் குரல்:—ஆமாம், கணபதி தான்! நீங்கள் யார் பேசுகிறது? என்ன சமாசாரம்?

டெலிபோனில் பேசுபவர்:— ஒன்றுமில்லை. என் வீட்டில் புதிதாக டெலிபோன் வைத்திருக்கிறேன். முதல் முதலிலே கூப்பிடுகிற பெயர் கணபதி என்று இருக்கட்டுமே என்றுதான் உங்களைக் கூப்பிட்டேன். வேறே ஒன்றுமில்லை!

அன்று ஏதோ ஒன்று அவளை ஆட்டிற்று. "முடியாது" என்று கூறி விட்டாள். அதைப் பெரியதாக எண்ணிச் சர்வேஸ்வரன் தன்னுடன் பேசாமல் இருந்தது அவள் மனத்தை வாட்டி வதைத்தது. அதை நினைத்து நினைத்துப் பொருமினாள். விம்மல் சத்தம் கொஞ்சம் கொஞ்சமாக ஆரம்பித்தது. கடைசியில் அதைத் தாங்க முடியாமல் கண்ணில் தாராளமாக நீர் விட்டாள். அவள் விம்மலைக் கேட்டு சர்வேஸ்வரன் விழித்துக் கொண்டான். அவனுக்கு முன்பே கோபம். இப்போது கமலத்தினுடைய அழுகையைக் கண்டு அவனுடைய கோபம் அதிகமாயிற்று.

"கமலம்!" என்று கொஞ்சம் கடினமான குரலில் அதட்டிக் கூப்பிட்டான்.

கமலம் திடுக்கிட்டுப் புடவைத் தலைப்பை வாயில் அழுத்திக் கொண்டு அழுகையை அடக்க முயன்றாள்.

"கமலம் இங்கே வா..." என்று கொஞ்சம் பரிவுடனே கூப்பிட்டான்.

அவள் நகரவில்லை.

"நான் கூப்பிடுகிறேன். வர மாட்டாயா?" என்று கட்டிலிலிருந்து இறங்கி அவளுடைய தோளைப் பிடித்து எழுப்பி உட்கார வைத்தான். பளாரென்று கன்னத்தில் அறைந்தான்.

அவ்வளவுதான்; கமலம் துவண்டு போய் விட்டாள். இதற்குள் இந்த ரகளையை அறிந்து அவனுடைய தாயார், "என்னடா இது, என்ன? கதவைத் திற" என்று அறைக் கதவைத் தட்டினாள்.

சர்வேஸ்வரன் கதவைத் திறந்தான். கமலம் கேவிக்கேவி அழுவதையும், சர்வேஸ்வரன் ஒரு ராட்சதனைப் போல் கிராப்பு தாறுமாறாய்க் கலைந்தும், கண்களில் கோபக் கனல் கக்கிக் கொண்டும் நிற்பதைப் பார்த்தான்.

ஓடிப் போய்க் கமலத்தை அணைத்தாள். கன்னங்களில் அவன் விரல்கள் பதிந்திருப்பதைக் கண்டு துடிதுடித்தாள்.

"ஏண்டா சர்வரா, நீ என்ன மனுஷனா, ராக்ஷஸனுடா? இப்படியா போட்டு வதைப்பது? நானும்தான் பார்க்கிறேன். அவள் வெகு நாட்களாகவே அடிக்கடி அழுகிறாள். எனக்கும் அவளுடைய விம்மல் சத்தம் கேட்டுக் கொண்டுதான் இருந்தது. என்னமோ, ஏதோ புருஷன் பெண்டாட்டிக்குள் தகராறு, நமக்கேன் என்று இருந்து விட்டேன். ஆனாலும் இப்படியா பாவம், தாயில்லாப் பெண்ணை போட்டு அடிப்பது?" என்று அவனை மிகவும் கடிந்து கொண்டாள்.

மாமியாரின் பரிவு வார்த்தைகளைக் கேட்டதும் அந்த வேதனையிலும் கமலத்துக்கு இனந்தெரியாத நிம்மதி இருந்தது.

அந்தக் கணத்தில் அவளுக்கு இந்த உலகத்தில் எத்தனை விதமான மனிதர்கள் ஒவ்வொருவரும் எப்படி நினைக்கிறார்கள் என்று ஆச்சரியம் உண்டாயிற்று.

அவளுடைய கணவன் அவள் ஏதோ தவறிழைத்து விட்டதாக நினைக்கிறான். அவளுடைய மாமியார் சர்வேஸ்வரன்தான் அவளை ஏதோ கொடுமைப் படுத்துவதாக நினைக்கிறாள். அவளோ......?

"நானா அவளைக் கொடுமைப் படுத்துகிறேன்? அவளல்லவா என் உயிரைத் தினமும் வாட்டி எடுக்கிறாள்?" என்று கத்தினான் சர்வேஸ்வரன்.

"உஸ்......, சத்தம் போடாதேடா! பாதி ராத்திரியில் என்னென்னவோ வாய்க்கு வந்தபடி உளறுகிறாயே?" என்று அடக்கினாள் அவனுடைய அன்னை.

அதற்கு கமலம், "தப்பாய் நினைத்துக் கொள்ளாதீர்கள். என் மன வேதனைக்குக் காரணம் என்னவென்று சொல்லி விடுகிறேன். இல்லாவிட்டால் இது விபரீதமாகப் போய்விடும்போல் இருக்கிறது" என்று கூறினாள் விக்கினபடியே.

சர்வேஸ்வரனும், அவன் தாயாரும் அதைக் கேட்க ஆவலுடன் மௌனமாயினர்.

கமலம் எப்படியோ தட்டுத் தடுமாறித் தன் மனக் கலக்கம், வேதனை எல்லாவற்றிற்கும் உள்ள காரணங்களை சாங்கோபாங்கமாக எடுத்துச் சொல்லி விட்டாள்.

அசையாமல் கேட்டுக் கொண்டு வந்த தாயும் மகனும், "அட, பைத்தியமே! இதற்கா இவ்வளவு கவலை?" என்று ஏக காலத்தில் கூவினார்கள்.

கமலத்துக்கு வெட்கமாகி விட்டது.

அவள் மாமியார் அவளிடம் மிகவும் அனுதாபத்துடன் கேட்டாள்: "கமலம் இம்மாதிரி நினைத்துக்கொண்டா இத்தனை நாட்கள் மனதைச் சங்கடப் படுத்திக் கொண்டிருந்தாய்! நல்ல அசடாயிருக்கிறாயே! நான் கணவன் வீடு வந்தபோது என் மாமியாரிடம் பூனையைக் கண்டு பயப்படும் எலிபோல் இருந்தேன். என் கணவனுடன் ஆசையாய்ப் பேச விடமாட்டாள். அப்படிப் பட்டவள் எங்காவது தனியாகக் கணவனுடன் போய் வருவதைச் சகிப்பாளா? எங்கே புறப்பட்டாலும் அவளும் கூட வந்துவிடுவாள். எனக்கெவ்வளவு எரிச்சலாய் இருக்கும் தெரியுமா? இளம் உள்ளத்தை அறியாத கிராதகியாயிருக்கிறாளே என்று அவளை மனதார வெறுத்தேன். தான் ஒரு வேலையும் செய்யமாட்டாள். எல்லா வேலைகளையும் நான்தான் செய்ய வேண்டும். அவள் கல் குண்டுபோல் இருப்பாள். மத்தியானம் பன்னிரெண்டு மணிக்குச் சாப்பிட்டுப் படுத்தாளானால் சாயந்திரம் நாலு மணிக்குத்தான் எழுந்திருப்பாள். அதற்குள் அவளுக்கு டிபன் தயாராயிருக்கவேண்டும். அதனால் என் மாமியாரை நான் மனதார சபித்து வந்தேன்.

"அம்மாதிரி என் மருமகளும் கஷ்டப்படக் கூடாது, அவள் என்னை வெறுக்கக் கூடாது, என் மாமியாருக்கு இட்ட சாபங்களைத் திரும்ப நானும் பெறக்கூடாது என்று நினைத்துத்தான் நான் உன்னிடம் என் பெண்போல நடந்து கொண்டேன். உனக்கு அதிக வேலை கொடுக்கவில்லை. உன் கணவனுடன் உல்லாசமாக இருக்க வேண்டுமென்ற காரணத்தால் தான் என்னை வற்புறுத்தி அழைத்தாலும் சினிமா, டிராமாக்களுக்கு வரவில்லை. ஆனால் அதையெல்லாம் நீ தப்பர்த்தம் செய்து கொண்டு இப்படி அசடாய் மனதுக்குள்ளேயே விசாரத்தை வைத்துக் கொண்டு உடம்பைக் கெடுத்துக் கொள்வாய் என்று கனவிலும் நான் நினைக்கவில்லை.

"என் பேச்சிலே, போக்கிலே உதாசீனம், விரக்தி தென்பட்டால் அது யார் பேரிலும் உள்ள வெறுப்பால் அல்ல. அது என் சுபாவம். அது ஏனோ எனக்கே தெரியவில்லை. உண்மையில் எனக்கெதிலும் பற்றில்லை. என் நாட்கள் ஆகிவிட்டன. ஏதோ சிறிசுகள் நீங்கள் சந்தோஷமாக இருந்தால் அதுவே என் மனத்துக்குச் சந்தோஷம். ஆனால் எல்லாம் நான் எதிர்பார்த்ததற்கு மாறாக அல்லவா இருக்கிறது. அந்தமாதிரி மாமியார் ஒருத்தியும் இருக்கிறாள். அதைவிட அதிசயம் இந்தமாதிரி மாட்டுப் பெண்ணும் இருக்கிறாளே!" என்று கூறி வியந்தாள் கமலத்தின் மாமியார்.

"மாமி! நான் எவ்வளவு தப்பாக உங்களை நினைத்துக் கொண்டேன். ஆனால் நீங்கள் எங்களுடனும் சந்தோஷமாக எந்தக் காரியமும் செய்தால்தான் என் மனத்துக்குச் சந்தோஷமும், திருப்தியாகவும் இருக்கும். உங்களிடமிருந்து எங்களைத் தனியாகப் பிரித்து விடாதீர்கள். எல்லோரும் ஒன்றாக சந்தோஷமாக வாழ்வோம்!" என்றாள் கமலம் உணர்ச்சிப் பரவசத்துடன்.

"ஆகட்டுமடி, கண்ணே!" என்று தன் மார்பில் கமலத்தை அணைத்துக் கொண்டு தலைமயிரைக் கோதிக் கொடுத்தாள். சர்வேஸ்வரன் முக மலர்ச்சியுடன் விளங்கினான்.

உலகெங்கும், வெற்றிபெற்ற மனிதர்கள்

# ஜில்லெட்

# உபயோகிக்கிருர்கள்...





நேர்த்தியான க்ஷவரம் அளிக்கும் சுறுசுறுப்பான தோற்றத்தின் மதிப்பைப் பற்றி அவர்களுக்கு நன்ருகத் தெரியும். அன்றியும் மிகக் கூராகத் தீட்டப்பட்ட ப்ளூ ஜில்லெட் பிளேடுகளைப் போல் மிருதுவான, சுலபமான க்ஷவரத்தைத் தரும் ஆயுதம் வேறெதுவுமில்லை என்றும் அவர்களுக்குத் தெரியும். இந்த பிளேடுகளின் விலை மிகவும் சகாயமாயிருப்பதாலும், நீண்டகாலம் உழைப்பதாலும் இந்த தினசரி உபயோகத்தை எல்லோரும் பெறமுடிகிறது. பணத்தினுல் பெறக்கூடிய மிகச் சிறந்த க்ஷவரத்தை ப்ளூ ஜில்லெட் பிளேடுகள் உங்களுக்கு அளிக்கட்டும்.

**சிறந்தவைகளுக்கிடையே மிகச் சிறந்ததைப் பெறுங்கள்:—**
அதற்காக தயாரிக்கப்பட்ட ரேசரையும் பிளேடையும் தான் எப்பொழுதும் உபயோகிக்க வேண்டும். ப்ளூ ஜில்லெட் ரேசரும் ஒன்ருேடொன்று ஒத்துழைத்து உங்களுக்கு மிக நேர்த்தியான க்ஷவரத்தை அளிப்பதற்காகவே செய்யப்பட்டுள்ளன.
ஜில்லெட் ரேசர் செட் ரூ. -1-8-0லிருந்து

# ப்ளூ ஜில்லெட் பிளேடுகள்

5 பிளேடுகளுக்கு அணு 14




# நன்மதிப்பு

அநுத்தமா



அன்று அத்தான் அருணாசலத்துக்குத் தலை தீபாவளி. எங்கள் வீட்டில் முந்தின இரவு அதற்காக விருந்துவைத்திருந்தோம். அருணாசலம் எங்கள் வீட்டிலேயே வளர்ந்தவன். அவன் மனைவி கருணா என்னுடன் படித்தவள். எனக்கு உயிர்த் தோழி. எங்கள் வீடு குதூகலமே வடிவெனத் திகழ்ந்தது. என் தாயார், அத்தை, பாட்டி முதலியவர்கள் பட்சணங்கள் தயாரிப்பதிலும், விருந்து சமையல் திட்டமிடுவதிலும், வீட்டை அலங்கரித்து விருந்தினருக்கு உபசாரம் செய்ய ஆயத்தங்கள் செய்வதிலும் மூழ்கியிருந்தனர். நான் என் தோழியுடன் என் அறையில் உட்கார்ந்து அளவளாவிக் கொண்டிருந்தேன்.

அப்பொழுது என் மதனி வந்து எங்களைச் சாப்பிட அழைத்தாள். நாங்கள் சமையலறைக்குச் சென்றோம். "இந்தப் பையன் புதிய சமையல்காரனா! என்ன அழகாக இருக்கிறான் பாரடி. பால் வடியும் முகமாக இருக்கிறது," என்றாள் கருணா.

"சரிதான் போ, உனக்கு எதைப் பார்த்தாலும் அழகாகத் தோன்றுகிறதா இப்போ! காதல் மயக்கமோ!" என்று நான் கூறவும் எல்லோரும் சிரித்தனர். ஆனால் அவள் கூறியது போலவே அந்தச் சமையற்காரப் பையன் கோபாலன் காண்பதற்கு மிகவும் லட்சணமாக இருந்தான். அவன் குழந்தை முகத்தைக் கண்டபோதெல்லாம் அன்பு சுரந்தது. அவன் இன்று மிகவும் சுறுசுறுப்பாக ஓடி ஆடி வேலை செய்து கொண்டிருந்தான்.

விருந்து மிகவும் அழகாக அமைந்து விட்டது. சிரிப்பும், கொம்மாளமும், வெடி வெடிப்பதிலும், மத்தாப்பு கொளுத்துவதிலும் நேரம் கழிந்தது. அன்று இரவு அருணாசலமும், கருணாவும் மற்ற உறவினர்களும், நண்பர்களும் கருணாவின் வீட்டிற்குப் போய் விட்டனர்.

நாங்கள் காலை கங்காஸ்நானம் முடிந்து சீக்கிரமே அவர்கள் வீட்டுக்கு வருவதாகக் கூறி விட்டோம். அன்றிரவு என் தாயார் எல்லா ஆட்களையும் வீட்டிலேயே தங்கும்படி உத்தரவிட்டு விட்டாள்.

இரவு மூன்று மணி அடிக்கும்போதே எல்லோரும் விழித்துக் கொண்டு விட்டோம். வீடெல்லாம் தடபுடல் படவும் என் அண்ணன் குழந்தை ரமணியும் விழித்துக் கொண்டு விளையாட ஆரம்பித்தாள். அதைப் பார்த்து என் தாயார், "குழந்தையைக் கொண்டு வாருங்கள், முதலில் அவளுக்குக் குளிப்பாட்டுவோம்" என்றாள். என் மதனி குழந்தையை எடுத்து வரும்போது முகத்தில் கலவரமும், குழப்பமும் தோற்ற, "அம்மா, குழந்தை இடுப்பில் இருந்த தங்க அரைஞாணைக் காணோம்!" என்றாள்.

எல்லோரும் உடனே தேடிப் பார்க்கலானோம். படுக்கைகளை எல்லாம் உதறி உதறிப் பார்த்தோம். பெட்டிகளை யெல்லாம் கொட்டி ஒழித்தோம். எங்கும் அதைக் காணவில்லை.

"நகையைப் பாதுகாக்க உங்களுக்கு வகை தெரியாது. கையிலிருக்கும் காசை நகை பண்ணிப் பண்ணித் தெருவில் போட்டால்தான் உங்களுக்குத் திருப்தி. தேடவேண்டாம். அதற்கும் சேர்த்து கங்காஸ்நானம் செய்யுங்கள்" என்று என் தகப்பனார் இரைந்தார். முன் இரவு இருந்த தெம்பும், மகிழ்ச்சியும் எங்கோ மறைந்தன.

இரண்டு வேலையாட்கள் சேர்ந்து பேசினால் சந்தேகப் பட்டோம். உடனே உற்றுப் பார்த்தோம், ஒட்டுக் கேட்டோம். வீட்டு மனிதர்கள் சேர்ந்து உரையாடினால் அங்கு ஓடினோம்.

"அவசரப்படாதீர்கள். யாராவது நேற்று பேச்சுப் பராக்கில் கழற்றி எங்காவது வைத்திருப்பீர்கள்" என்று பாட்டி எச்சரித்து வைத்தாள்.





பண்டிகை நாளன்று ஒருவர்மீதும் சந்தேகப் படவும் மனம் இடமளிக்கவில்லை. பொருளைத் தேடாமல் விட்டுவிடவும் முடியவில்லை. அச்சமும், குழப்பமும் மேலிட எல்லோரும் உற்சாகமில்லாமல் தேடித் தேடி அலைந்து பார்த்தோம்.

ஒவ்வொருவரையும் நலதனமாகக் கேட்டுப் பார்த்தோம். வீட்டில் இருந்த ஆட்களை என் தகப்பனார் தன் அறைக்கு அழைத்துச் சென்றார்.

"யார் அந்தப் பொருளை எடுத்துக் கொடுத்தாலும் வெகுமதி கொடுக்கிறேன். அது ஐந்து பவுன் கொண்டது. ஆகையால் ஒவ்வொரு பவுனுக்குப் பத்து ரூபாய் வீதம் ஐம்பது ரூபாய் கொடுக்கிறேன். கொடுத்துவிடுங்கள். விடியும்வரை பார்ப்பேன். ஆறு மணிக்குள் நகை என் கைவசம் வராவிட்டால் போலீஸுக்குத்தான் போக வேண்டும்" என்று எச்சரித்தார்.

நாங்களும் ஒவ்வொருவர் முகத்தையும் ஆராய்ந்து ஆராய்ந்து பார்த்தோம். வேலைக்காரி மரகதம் அஞ்சாமல் நின்றாள். "அதென்னம்மா அது! அதிசயமா அல்ல இருக்கு! இவ்வளவு பெரிய வீட்டிலே எந்த மூலைக்குலே எவன் பதுக்கி வைச்சாத் தெரியப் போவுது! எல்லாம் காலத்தின் கொடுமைங்க! எடுத்த மவராசன் எத்தனை நாள் வாழ்வான்!" என்று கண்ணுக்கும் கருத்துக்கும் புலப்படாத குற்றவாளியை வாயில் வந்தபடி வைது தீர்த்தாள்.

"மடியிலே இருந்தாத்தானே வழியிலே பயம்! கம்மாவிடுங்க. பொருளோடு போச்சே. எடுத்த நாசமாப் போனவன் குழந்தையை மீத்தினானே!" என்று அவள் லட்சியமின்றி உரக்கக் கத்தினாள்.

சமையல்காரக் கிழவர் முகம் வெளிறி, சாம்பல் நிறமாக, நடக்கக்கூட சக்தியற்றுத் தடுமாறினார். அவரது உதடு துடித்தது. கை பதறியது.

"என் மேலே வீணாகப் பழி சுமத்துகிறவர்கள் எட்டு நாள் கூட வாழ மாட்டார்கள்" என்று நடுங்கும் குரலில் சபித்துக் கொண்டே அவர் காப்பி போட்டார். காப்பிக் கஷாயம் சாய்ந்து கீழே கொட்டியது; பால் பொங்கி அடுப்பில் வழிந்தது. பிறகு எல்லாவற்றையும் கீழே தூக்கிப் போட்டு விட்டுத் தலைமேல் கையை வைத்துக் கொண்டு சோர்ந்து உட்கார்ந்து விட்டார்.

"என்னுடைய ஐம்பத்து ஐந்து வயசில் இந்த மாதிரிப் பழி கேட்டதில்லை. இனி நான் உயிர் தரிப்பேனா! என்னைக் கொன்ற பாவம் அந்த நகையை எடுத்த பாவிகளைச் சேரட்டும்" என்று அவர் அழுதார்.

என் பாட்டியோ அதைக் கேட்டுப் பதறி விட்டாள். பல் இல்லாத வாயைத் திறந்தாள்.

"நல்ல நாளும் அதுவுமாக இந்தக் கிழவர் சாபம் கொடுக்கிறாரே! ஏழுமலையானே, நீயே துணை. யார் குழந்தையின் தங்க அரைஞாணை எடுத்தார்களோ அவர்கள் கொண்டு போட்டு விடட்டும். இந்தப் பழி தீரட்டும். அவசரப் பட்டுக்கொண்டு உன் தகப்பனை கூப்பிட்டுக் கேட்டுவிட்டான். நேற்று வந்தவர்கள் யாராவது கை மறதியாக எடுத்துக் கொண்டு போய்விட்டார்களோ என்னவோ! கழன்று விழுந்திருந்து பெருக்கவாக்கில் கொண்டு போயிருக்கலாம். டெலிபோனில் கூப்பிட்டுக் கேளடியம்மா. இந்தக் காலத்துப் பசங்கள் பேச ஆரம்பித்தால் உடம்பே மறந்து விடுமே! எது நடக்கக் கூடாது!"

நான் டெலிபோனில் கருணையைக் கூப்பிட்டேன். அவன் தீபாவளி வாழ்த்துக்கள் கூறிக் குதூகலமாகப் பேச வந்தவன் நான் விஷயத்தைச் சொன்னதும் திடுக்கிட்டு விட்டான். "இப்போதே நாங்கள் வருகிறோம்!" என்றான்.

இதற்குள் விடிந்து வெளிச்சமும் வந்துவிட்டது. எல்லோர் மனத்திலும் போலீஸ் நினைவு நடமாடியது. நானும் மதனியுமாகக் கொல்லைப்புற மெல்லாம் தேடினோம். துடைப்பத்தை எடுத்துப் பெருக்கிச் சலித்துப் பார்த்தோம். குப்பை மேட்டைக் கிளறிப் பார்த்தும், தென்னை மரத்தில் ஏறிப் பார்த்தும் நகை கிடைக்கவில்லை.

"யாராவது முன் வந்தார்களா இல்லையா! காரை எடுக்கிறேன். எல்லோரையும் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கிளம்பத் தயாராகச் சொல்" என்று தகப்பனார் இரைந்தார்.

"இன்னும் கொஞ்சம் பார்ப்போமே!" என்று தாயார் மெதுவாகக் கூறினாள்.

கோபாலன் என் அருகில் வந்தான். "ஏன் அம்மா, ஒட்டடைக் கோலை எடுத்து ஒரு தரம் கூரையின் மூலை முடுக்குகள் எல்லாம் பார்ப்போமே!" என்று யோசனை கூறினான்.

"சரி" என்றேன் நான்.

"ஆமாம். அவனோடேயே போவோம். ஒரு சமயம் அவன் பதுக்கி வைத்திருக்கலாம் அல்லவா! அவனை எடுத்துக் கொடுக்கலாம்" என்று கூறி மதனி அவனைப் பின் தொடர்ந்தாள். எங்கும் ஏமாற்றம்தான். கருணாவும் மற்றவர்களும் வந்தனர். அவர்கள் வீட்டில் எங்கும் இல்லையாம்.

என் தகப்பனார் மூன்று வேலையாட்களையும் நடத்திக் கொண்டு பக்கத்தி லிருந்த போலீஸ் ஸ்டேஷனுக்குக் கிளம்பினார்.

"இதோ, நான் ரெடியாப் போகிறேன்!" என்று மிடுக்குடன் கிளம்பினாள் மரகதம்.

கோபாலன் சிரித்த முகத்துடன் வண்டியேறி உட்கார்ந்தான். ஆனால் கிழவர் மட்டும் இடத்தை விட்டு எழுந்திருக்க மறுத்துவிட்டார்.

"இந்த வயசில் இந்த அபவாதமா! நான் நேற்றே வீட்டுக்குப் போகிறேன் என்றேன். வேண்டாம் என்று தடுத்தீர்கள். இதுவா கடவுள் சோதனை! சுவாமி, நான் அறியேன். இத்தனை நாட்களும் குழந்தை இடுப்பைக்கூடக் கண்ணெடுத்துப் பார்த்ததில்லை. நான் போலீஸ் ஸ்டேஷன் ஏறமாட்டேன்" என்றார் அவர்.

"சரிதான் ஏறு, ஐயா! அப்புறம் ஆகட்டும் பிரலாபம் எல்லாம்!" என்றான் அருணாசலம்.

"என்னையா, பெரிய வம்புக்காரனாக இருக்கிறீரே! பொருள் போனால் நம்மைக் கேளாமல் யாரைக் கேட்பார்கள்! அழுதால் ஆகி விட்டதா! நீ எடுக்காவிட்டால் பேசாமல் வாயேன்" என்று கோபாலனும் கூறவும் இரண்டு பேர்களாக அவரை உந்தித்தள்ள, அவர் வேண்டா வெறுப்பாக வண்டியில் ஏறிச் சென்றார்.

அவர்கள் திரும்பி வர ஒரு மணி நேரமாயிற்று. நாங்கள் கவலையுடன் காத்துக்கொண்டிருந்தோம்.

"அவர்களை அடித்து விட்டார்களா, அத்தான்!" என்று விசாரித்தேன் நான்.

"அடிக்கவில்லை தேடிக்கொடுத்து விடும்படி மிரட்டி அனுப்பி யிருக்கிறார்கள். இன்னும் இரண்டு மணி நேரத்தில் கிடைக்காவிட்டால் அடி என்று சொல்லி யனுப்பி யிருக்கிறார். எப்படி அகப்படப் போகிறது!" என்றான் அருணாசலம்.

"எங்கே ஸார் போகும்! இருப்பது நாங்கள் மூன்றுபேர்தான். அந்த வீட்டிலும் பார்த்தாகி விட்டது. போலீஸ் அடிக்கு எல்லாம் கிட்டி விடும்" என்றான் கோபாலன்.

நாங்கள் எங்கு தேடுவது என்று தெரியாமல் தேடினோம். ஆளை விட்டு கிணற்றில் இறங்கச் சொன்னோம். தப்பு இல்லை.

டெலிபோனில் மணி அடித்தது. கருணாவின் தகப்பனார் அவர்களை அழைத்தார்.

"தலை தீபாவளி உங்களுக்கு. எங்கள் குடும்பத்தில் நீங்களும் அழுங்கிக் கிடப்பதா! நீங்கள் போங்கள். பொருளோடவா நாம் பிறக்தோம்! கிடைத்தால் நம் பொருள், இல்லாவிட்டால் இல்லை" என்று என் தாயார் கூறி விட்டாள்.

அதற்குப் பிறகு தாயார், பாட்டி, அத்தை தவிர மற்ற நாங்கள் எல்லோரும் கருணாவின் வீட்டுக்குப் போய் விட்டோம்.

நாங்கள் விருந்து உண்டு வீடு திரும்பும் போது மணி பதினொன்றாகி விட்டது. வீட்டு வாசலில் போலீஸ் ஆட்கள் நின்று கொண்டிருந்தனர். நாங்கள் பரபரப்புடன் உள்ளே வந்தோம். அதே சமயத்தில் கொல்லைப் புறத்தில் கூப்பாடு கேட்டு அங்கு விரைந்தோம். மரகதம் கையில் குழந்தையின் தங்க அரைஞாணைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு நின்றாள்.

"குப்பையை கப்ப ஒரு தரம் பார்த்திடுவோம் என்று போனேன். மேலே நட்சத்திரம் கணக்கா பளபளன்னுது. எடுத்துப் பார்த்தா இது. எப்படி தெருக்க அடிச்சுக்குது! ஏன் சின்னம்மா, என்னத்தைப் பார்த்தீங்க நீங்க!" என்று என்னை ஒரு போடு போட்டாள் அவள்.

அம்மா அதைக் கையில் வாங்கிக் கொண்டாள். போலீஸ்காரனும் எங்கள் கூட்டத்தில் சேர்ந்து கொண்டான். "என்ன அம்மா, கைத்தடியைப் பார்த்ததும் 'கனக்'னு கண்ணிலே தெரிஞ்சுது இல்லே!" என்று கேலியாகப் பேசி விட்டு அவன் தன் மீசையைத் தடவிக் கொடுத்தான்.

"ஐயா, இன்ஸ்பெக்டர் ஐயாவுக்குச் சொல்லி விடுங்க" என்றான் அவன். மரகதத்தை விட்டகல அவன் இஷ்டப்பட வில்லை போலும். நான் டெலி போனில் போலீஸ் ஸ்டேஷனை அழைத்து நகை கிடைத்த செய்தியைச் சொன்னேன்.

கோபாலன் புன் முறுவல் பூத்தான். "எப்படி நான் சொன்னது!" என்று என்னைக் கேட்டான். மரகதம் அருகே அணுகும் போலீஸ்காரனை எரித்து விடுபவள் போல் பார்த்தாள். "பொருள் கிடைத்து விட்டது. எட்டிநில்" என்றாள். கிழவரோ அழுதார், கதறினார். கடவுள் படத்தின் முன் கிடந்து கும்பிட்டார். "ஆபத்ரக்ஷகா, என்னைக் காப்பாற்றினையா! எங்கே அம்மா என் கண்ணால் ஒரு முறை அதைப் பார்க்கட்டும். எங்கே அம்மா, எங்கே!" என்று குலுங்கக் குலுங்க வந்து என் தாயார் முன் கைகூப்பினார். என் தகப்பனாரும் கருணாவின் தகப்பனாரும் அப்பொழுது தான் சப் இன்ஸ்பெக்டருடன் வந்தனர்.

நகை கிடைத்து விட்ட மகிழ்ச்சி பண்டிகையின் சந்தோஷத்தை மீண்டும் உயிர் பெறச் செய்தது. இன்ஸ்பெக்டர் மூதற்கொண்டு எல்லோரும் பட்சணங்கள் சாப்பிட்டனர். பிறகு வெற்றிலை போட்டுக் கொண்டு விடை பெற்றுத் திரும்பினர்.

சமையல்காரத் தாத்தா என் தந்தையை அணுகினார். "எனக்கு விடை கொடுங்கள். நான் இனி இங்கே இருக்க மாட்டேன். ஐம்பத்து ஐந்து வயது வாழ்ந்ததற்குக் கிடைத்த பெருமையும் கீர்த்தியும் போதும்" என்று கூறினார் அவர்.

தகப்பனார் அவர் பேச்சைக் கண்டு வெகுண்டார். அவருக்குச் சேர வேண்டிய தொகையைக் கொண்டு கொடுத்தார். அவர் போய் விட்டார். அவர் வீட்டை விட்டுச் சென்றவுடனே அப்பா போலீஸுக்கு அறிவித்து விட்டார்.

"கிழவன் செய்த வேலைதான் ஸார்! ஒரு கண் பார்த்துக் கொள்கிறோம்" என்று பதிலளித்தார் போலீஸ் இன்ஸ்பெக்டர்.

கிழவர் செய்ததுமல்லாமல் கிஷ்ரேப் பட்டுக் கொண்டு போனாரே என்று என் தாயார் அங்காய்த்துக் கொண்டு இருந்தாள்.

மீண்டும் வீட்டில் அமைதி குடி கொண்டது. இந்தக் களவைப் பற்றியே பேசி, அதுவும்




"நெடுநாட்களாக மிகுந்த முதுகு வலியினால் அவஸ்தைப்பட்டேன். சில நிமிஷங்களே உட்கார்ந்திருந்தபோதிலும், மறுபடி எழுந்து நிற்பதே மிகவும் சிரமமாயிருந்தது. "க்ரூஷன்" உபயோகித்துக் குணம் அடையும் வரை, உபயோகித்த வேறு மருந்துகள் ஒன்றிலும் குணம் கிடைக்கவில்லை. எனது ஆரோக்யத்துக்கு ஏற்ற சாதனம் பெற்று இப்பொழுது நான் முற்றிலும் ஒரு புதிய ஸ்திரீயாகிவிட்டது பற்றி சந்தோஷமும் நன்றியறிதலுமுள்ளவளாயிருக்கிறேன்." —E. J. B.

இடைவிடாத முதுகு வலிக்கு ஒரு பொதுக் காரணம்—மூத்திரக் காய்கள் உடலிலுள்ள அசுத்தத்தை வெளியேற்றுமைதான் இவ்வாறு தொல்லையுறும்பொழுது "க்ரூஷன்" உட்கொள்ளுங்கள். களைத்துப்போன மூத்திரக் காய்கள் அவைகளுக்கு வேண்டிய உதவியை அதனால் பெறுகின்றன. அவை கழிவு பதார்த்தங்களை ஒழுங்காகவும் இயற்கையாகவும் வெளியேற்றும்பொழுது வலியும் கூடவே வெளியேறி விடுகிறது. தினந்தோறும் உட்கொள்ளும் ஒரு சிறு அளவு க்ரூஷன் உங்களது வலிகள் திரும்பவும் வராதென்பதை உறுதிப் படுத்துகின்றது.

**"க்ரூஷன்"** உங்களை ஆரோக்யத்துடனும் சந்தோஷத்துடனும் இருக்க உதவுகிறது

KSM: 3

அழுந்து விட்டது. சில நாட்கள் வரை எந்த ஓசைக்கும் எழுந்து தள்ளுவோம். அதுவும் நின்றது. நிம்மதியாக உண்டு உறங்கிக் கொண்டிருந்தோம். ஒரு மாதம் கழிந்தது.

*　　　*　　　*

ஓர் இரவு, நாய் வேகமாகக் குலைத்துக்கொண்டிருந்தது. அருணாசலம் எழுந்து சென்று மெதுவாகத் தோட்டத்தைச் சுற்றினான். கொல்லைக் கதவு திறந்து கிடந்தது. அவன் சந்தடி செய்யாமல் வீட்டைச் சுற்றும் போது வெளிச்சுவரின் அருகில் நாய் தாவித் தாவிக் குதித்துக் குரைப்பதும் சுவரின் மேல் ஒருவன் உட்கார்ந்து தடியை ஓங்கி அதை அடிக்க முயல்வதும் தெருவிளக்கின் வெளிச்சத்தில் நிழல் சித்திரம் போல் தெரிந்தன. அந்த ஆளின் தோற்றம் தலை முண்டாசுடன் போலீஸ்காரனைப்போல் இருந்தது. அத்தான் அடிமேல் அடிவைத்துச் சென்று அவன் காலைப்பிடித்து இழுத்து விட்டான். நாயைப் பற்றியும் தெருவைப் பற்றியும் கவலைப்பட்டுக் கொண்டிருந்த மனிதன் இந்தத் திடீர்த் தாக்குதலில் மிரண்டு கீழே விழுந்தான். அவன் தலை முண்டாசு கீழே விழுந்து தரையில் உருண்டது.

"போலீஸ் உடையில் களவாடவா கற்றுக் கொண்டாய்!" என்று பல்லை நற நறவென்று கடித்துக் கொண்டு தலை முடியைப் பிடித்து இழுத்துத் தூக்கி நிறுத்தினான் அருணாசலம். கையிலிருந்த டார்ச் விளக்கை முகத்தில் அடித்ததும் அவன் திகைத்துப் போனான்.

"திருட்டு நாயே!" என்ற அவன் கூக்குரலும், நாயின் குரைப்பு அதிகமாகவும் வீட்டில் அனைவரும் விழித்துக் கொண்டு விட்டனர்.

அருணாசலத்தின் கையில் சிக்குண்டு ஓட வழி பார்த்துக் கொண்டிருந்தவன் வேறு யாருமில்லை, சாட்சாத் கோபாலன்தான்!

"முண்டாசு கட்டிக் கொண்டு வேவு பார்க்கிறார் இவர்!" என்று நகைத்தான் அருணாசலம்.

"முண்டாசு எங்கேடா!" என்று கோபமாகக் கேட்டார் என் தந்தை.

"அதோ விழுந்திருக்கிறது. போலீஸ் தொப்பி என்று நினைத்தேன். ஏதோ ஓசைப்பட்டது. அந்தப் பித்தளை எழுத்துக்களாக்கும் என்று நினைத்தேன். ஏதாவது சாமான் இருக்கப் போகிறது" என்றான் அத்தான் பிடியைத் தளர்த்தாமல். இதற்குள் தெருவில் ரோந்து வரும் போலீஸ்காரர்கள் வந்து விட்டனர். அக்கம் பக்கத்து ஆட்கள்கூடி விட்டனர். அவிழ்த்தல் அவிழ்க்கப்பட்டது. அப்பா முண்டாசை எடுத்தார். அதில் பெரிய வெள்ளி பேலாக் கிண்ணம் - குழந்தைக்குச் சாதம் ஊட்டும் கிண்ணம் அதில் இருந்தது!

பழையபடி இன்ஸ்பெக்டர் வந்தார். கோபாலனைச் செம்மையாகப் புடைத்தார். பால் வடியும் குழந்தை முகத்தைக் கொண்டே எங்களை ஏமாற்றி விட்டான் அவன். முன்பு தங்க அரைஞாணையும் தானே எடுத்ததாக ஒத்துக் கொண்டான். அந்தக் கிழவரின் நினைவு எல்லோருக்கும் வந்தது. மானம் பெரிதாகக் கருதிய அவர் மனம் புண்பட்டுப் போய்விட்ட உண்மை தெரிந்தது.

*　　　*　　　*

மேற்படி சம்பவம் நடந்து ஐந்து வருடங்கள் கடந்து விட்டன. ஆனால் ஒவ்வொரு தீபாவளி அன்றும் அருணாசலத்தின் வேதனை நிறைந்த தீபாவளியை மட்டும் நினைக்காமல் இருந்ததில்லை.

இன்றும் தீபாவளி. இன்று என் கணவரின் நண்பன் ஸ்ரீதரன் தம் மனைவியுடன் எங்கள் வீட்டிற்கு விருந்து உண்ண வருவதாகச் சொல்லியிருந்தார். அதற்காக நானும் அவரும் முன் ஹாலில் உட்கார்ந்திருந்தோம்.

ஸ்ரீதரனின் மனைவி மட்டும் வந்தாள். ஸ்ரீதரன் ஏதோ வேலையாக எங்கோ போயிருப்பதாகவும் பிறகு வருவார் என்றும் சீதா தெரிவித்தாள்.

"நீ யாருடன் வந்தாய்! தனியாக வரப்பயப்படுவாயே!" என்று கேட்டேன் நான்.

"புதியதாய் ஒரு கிழவரை ஊரிலிருந்து அழைத்து வந்திருக்கிறோமே, அவர்தான் துணை வந்தார்" என்றாள் அவள்.

அவரை அழைத்துக்கொண்டு சென்றேன் நான்.

"அட, நீ எங்கே ஐயா வந்தாய்!" என்று என் தகப்பனார் குரல் கேட்டதும் நாங்கள் அங்கே சென்று நோக்கினோம். அந்தச் சமையற்காரக் கிழவர் நின்று கொண்டிருந்தார்.

"இந்தக் குழந்தையின் தகப்பனார் வீட்டில் நான்கு வருஷமாக வேலை பார்த்தேன். இப்பொழுது இவளுக்குத் துணையாக அனுப்பியிருக்கிறார்கள். என்னை நினைவு வைத்துக் கொண்டிருக்கிறீர்களே!" என்று புன்முறுவல் பூத்தார்.

"ஞாபகமில்லாமல் என்ன! அந்தப் பையன் இருந்தானே அவன்தான் எடுத்து விட்டான். பிறகு தெரிந்தது" என்று கூறினார் தகப்பனார்.

"நான் ஏதோ அவசரப்பட்டு விட்டேன். குழப்பத்திலே, சுயமரியாதைக்குப் பங்கம் ஏற்பட்டு விட்டதாக எண்ணி ஓடிவிட்டேன். பிறகுதான் என் செய்கை சந்தேகத்துக்கு இடம் தரும் என்று புரிந்து கொண்டேன்" என்றார் கிழவர்.

இதற்குள் ஸ்ரீதரன் வந்து விட்டார். என் கணவர் அவரை அழைத்து வரவும் எல்லாரும் பண்டிகை கொண்டாடுவதில் முனைந்தோம். கிழவனார் எங்களுடன் உள்ளே வந்து வேலை செய்தார்.

"இவர் யார் தெரிகிறதா, பார் அம்மா!" என்றார் என் தகப்பனார்.

என் பாட்டியும் அம்மாவும் பெரியவரை அடையாளம் கண்டு மகிழ்ச்சியுடன் வரவேற்றனர்.

"சார், இவர் எங்கள் வீட்டில் இருந்தார். மிகவும் தங்கமானவர். சீதாவுக்கு நல்ல துணை. உங்களுடனே வைத்துக் கொள்ளுங்கள் அவரை" என்று என் தகப்பனார் கூறவும், பெரியவர் பெருமிதம் தாண்டவமாட மகிழ்ந்தார்.

அவர்கள் திரும்பும்போது என் தாயாரும் பாட்டியும் அப்பாவிடம் வந்து தாழ்ந்த குரலில் ஏதோ சொன்னார்கள்.

"ஓய், இருமய்யா. உமக்குத் தீபாவளிப் பரிசு ஒன்றும் கொடுக்கவில்லையே. இப்படி உட்காரும், வருகிறேன்" என்று கூறி ஜேபியிலிருந்து இரும்புப் பெட்டியின் சாவியை எடுத்தார் அப்பா.

"வேண்டாம், எனக்கு எதற்குப் பணம்! பேசாமல் இருங்கள். இந்தக் குழந்தை சீதாவிடம் எனக்கு மிகவும் பிரியம் விழுந்து விட்டது. மாப்பிள்ளைக்கு நம்மிடம் பிடிப்பு வரவேண்டுமே என்று நான் கவலைப் பட்டேன். இன்று நீங்கள் மனசார அன்புடன் நன்மதிப்பு அளித்தீர்களே — அதைவிட எனக்கு எந்தப் பரிசும் பெரிதல்ல. விலையற்ற அன்பை ஒரு சொல்லால் அளித்து விட்டீர்கள். அதைவிட உயர்ந்த பொருள் எனக்கு இனி இந்த உலகில் என்ன வேண்டும்!" என்று கூறிவிட்டு அவர் போய் விட்டார்.

"அந்தக் கிழவர் ஒரு மகான். மகா மானி" என்றார் தந்தை. நாங்களும் அதை ஆமோதித்தோம்.

---

Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

## அவளுடைய
## அழகான பற்களை
## ஒரு காலத்தில்
## எல்லோரும்
## போற்றிவந்தார்கள்

...ஆனால் இப்பொழுது அவளுக்கு



# சிரிக்கவே அச்சமாயிருக்கிறது!

ஈறுகளை அசட்டைசெய்தால் பேராபத்து ஏற்படலாம். இன்று உங்கள் பற்கள் எவ்வளவு கவர்ச்சியுடையதாகவும், ஆரோக்கியமாகவும் இருந்தாலும் நாளடைவில் ஈறுவியாதிகள் அவைகளை அழித்துவிடும். ஆரோக்கியமான பற்களை ஆரோக்கியமான ஈறுகளில் இருக்கச்செய்ய ஒரு வழிதான் உண்டு—அதுதான் தினமும் எஸ். ஆர். டூத் பேஸ்ட் உபயோகிப்பது. உலகெங்கும் பல் வைத்தியர்கள் ஈறு வியாதிகளை சிகிச்சைசெய்ய உபயோகிக்கும் ஸோடியம் ரிஸினோலியேட்* இந்த டூத் பேஸ்ட் ஒன்றில்தான் இருக்கிறது. எஸ். ஆர். டூத் பேஸ்ட் உங்களுக்கு இரட்டிப்பு பாதுகாப்பளிக்கிறது—உறுதியுள்ள ஆரோக்யமான ஈறுகளில் பற்களை ஒழுங்காகவும் வெண்மையாகவும் இருக்கச்செய்கிறது. உங்களுடையவும் உங்கள் குடும்பத்தினருடையவும் க்ஷேமத்தைக்கோரி இன்றே எஸ். ஆர். டூத் பேஸ்ட் உபயோகிக்க ஆரம்பியுங்கள்



**எஸ். ஆர். டூத்பேஸ்ட் உபயோகித்து உங்கள் சிரிப்பை கவர்ச்சியுடையதாகச்செய்யுங்கள்**




**பெரிய சைஸில் இப்பொழுது கிடைக்கிறது**

* ஸோடியம் ரிஸினோலியேட் பாக்டீரியாவை எதிர்ப்பதோடு பாக்டீரியாவினால் ஏற்படும் விஷத்தன்மையைத் தடுக்கும் சக்தியையும் அளிக்கிறது.

---

டி. அண்டு டபிள்யூ. கிப்ஸ் லிட். லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தவை GSR. 94-50 TM

REGD. No. M. 4392

*Registered as a newspaper in Ceylon*